# ஈழத் தமிழ்ச் சமூக உருவாக்கமும் அரசியல் தீர்வும்

அ. மார்க்ஸ்



ஈழத் தமிழ்ச் சமூக உருவாக்கமும் அரசியல் தீர்வும்

அ. மார்க்ஸ்
professormarx@gmail.com

முதல் பதிப்பு : நவம்பர் 2009
பக்கங்கள் : 144

நூல் வடிவம்: பரத் லேசர் சிஸ்டம்
அச்சாக்கம்: சுப்ரா பிரிண்ட்டெக், சென்னை 600 005.
அட்டை வடிவமைப்பு: ஜீவமணி

**Eezhat Thamizh Samooga Uruvakkamum Arasiyal Theervum**

**A. Marx**
**professormarx@gmail.com**

First Edition : November 2009
Pages : 144

Book Designed at Bharath Laser System
Printed at Subra Printek, Chennai 600 005.
Cover Design: Jeevamani




வெளியீடு: புலம்
332/216, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை,
திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.
தொலைபேசி: 97898 64555
மின்னஞ்சல்: pulam2008@gmail.com

Published by **Pulam**
332/216,Triplicane High Road,
Triplicane,Chennai 600 005
Mobile: 97898 64555
Email: pulam2008@gmail.com

விலை ரூ.70

# பதிப்புரை

தமிழகத்தில் கடந்த ஓராண்டிற்கும் மேலாக ஈழப்பிரச்ச னையை மையமாக வைத்து உணர்ச்சி அரசியலை வளர்த்தெடுத் தனர் தமிழ் தேசியர்கள். புலிகள் குறித்த எவ்வித விமர்சனங்களை யும் எதிர்கொள்ள மறுத்தும் தமிழ்ப்பேசும் மக்களின் பல அடையாளங்களை உறுதிப்படுத்தக் கோரும் கருத்திற்கு பதில் கூறும் திராணியற்றும் கருத்தாளர்களையும் விமர்சகர்களையும் இனத்துரோகியாக கட்டமைத்தனர்.

முத்துக்குமார் தீக்குளிப்பு தொடங்கி சிங்களப் பேரின வாதத்தால் கொத்துக் கொத்தாக கொல்லப்பட்ட ஈழத்தமிழர் களின் பிணங்களின்மீது தங்கள் அரசியல் லாபத்தை உறுதிபடுத்த முனைந்தார்கள் தமிழ்தேசியர்கள். தமிழ்த்தேசிய ஆதரவாளர் களால் நடத்தப்படும் பதிப்பகங்கள் தொடங்கி வணிக நோக்கம் மட்டுமே கொண்ட பத்திரிகைகள்+பதிப்பகங்கள் வரை ஈழ மக்களின் துயரமும் பிரபாகரனும் ஒரு பண்டமாக பரிணமித்தது.

இந்து தேசிய வெறியோடு தமிழ்த்தேசியம் கைகோர்த்தது வும் இக்காலக்கட்டத்தில்தான் நடந்தேறியது. தமிழக பா.ஜ.க தலைவர்களோடு எந்த கூச்சமும் இல்லாமல் மேடைதோறும் தோன்றி ஈழ ஆதரவு முழக்கங்கள், உரைவீச்சுக்கள் ஒரு புறமும், ஈழம் மலர இலை மலர வேண்டுமென தேர்தல் பரப்புரை ஒரு புறமென தமிழின பாசிசத்தை நிலைநிறுத்த எதை வேண்டு மானாலும் செய்ய இவர்கள் சித்தமாயிருந்தார்கள்.

இக்காலகட்டத்தில்தான் அ. மார்க்ஸ் ஈழத்தில் வாழும் முஸ்லிம்கள், கிழக்கு மாகாணத்தவர்கள், மலையகப் பகுதி தமிழர்கள் அவர்களுக்கான உரிமைகள், அடையாளங்கள் குறித்து 'புத்தகம் பேசுது' இதழிலும், இலங்கையிலிருந்து வெளிவரும் 'எங்கள் தேசம்' இதழிலும் அளித்த நேர்காணல்கள் மற்றும் அவ்வப்போது இதழ்களிலும் எழுதப்பட்ட கட்டுரைகள், மேலும் இந்நூலுக்கென்றே எழுதப்பட்ட ஒரு கட்டுரையும், நீண்ட நெடிய

முன்னுரையும் சேர்த்து தொகுப்பாக இந்நூலை வெளிக்கொண்டு வருகிறோம்.

இந்நூல் வெளிக்கொண்டு வருவதற்கான அவசியத்தை இங்குள்ள தமிழ்த்தேசிய அடிப்படைவாதிகளும் சில கோமாளிகளும், சில புலி முகவர்களும் நிலைப்பாடுகளை வைத்து உறவை தீர்மானிக்கும் தேர்ந்த நேர்மையான ஒரு சில பத்திரிகையாளர்களுமே எங்களுக்கு வாய்ப்பை ஏற்படுத்தினர்.

நேர்காணல் வெளிவந்த 'புத்தகம் பேசுது', 'எங்கள் தேசம்' மற்றும் கட்டுரைகளை வெளியிட்ட 'புது விசை', 'அம்ருதா', 'எதுவரை', 'மக்கள் களம்' ஆகிய இதழ்களுக்கும் என்னுடன் இணைந்து செயல்படும் அனைத்து தோழமைகளுக்கும் மற்றும் இலங்கையில் போரை நிறுத்தி ஜனநாயகத்தை நிலைநாட்ட அணிதிரட்டும் குழுவிற்கும் நன்றி.

நவம்பர், 17

ஏ. லோகநாதன்
புலம்

## பொருளடக்கம்

# போருக்குப்பின் ஈழம் : மனச்சாட்சியோடு மக்கள் பிரச்சினைகளை அணுகுவோம்

ஈழத் தமிழர்களுக்கு தமிழக மக்களின் ஆதரவு எப்போதும் இருந்து வந்துள்ளது. கால் நூற்றாண்டு காலப் போரில் அங்கு நிகழ்ந்த பெரும் மனிதத் துயரைக் கண்டு நம் மக்கள் கலங்காத தருணமில்லை. தம்மால் முடிந்த உதவிகளைச் செய்ய அவர்கள் எப்போதும் தயாராக இருந்து வந்துள்ளனர். இந்த உணர்ச்சிவயப் பட்ட நிலையை இங்குள்ள நமது அரசியல்வாதிகள், தமிழ்த் தேசியர்கள், தமிழ்த் தேசியச் சார்புடைய அறிவுஜீவிகள் பயன் படுத்திக் கொண்ட தன்மை குறித்து எனக்கு எப்போதும் விமர்சனங்களுண்டு. அவற்றை நான் மூடி மறைத்ததில்லை. இந்த விஷயத்தில் மட்டுமல்ல, என் அறிவுக்குப் பட்டவற்றை நான் எப்போதும் மூடி மறைத்ததில்லை. சில உண்மைகளைச் சொன்னால் இன்றைய உணர்ச்சிவயப்பட்ட சூழலில் எடுபடாது என்றோ, 'பாப்புலராக' இருக்காது என்றோ நான் கவலைப்பட்ட தில்லை. அந்த வகையில் கடந்த ஆறு மாதங்களில் ஈழம் தொடர்பாக எழுதிய கட்டுரைகள், அளித்த நேர்காணல்கள் ஆகிய வற்றில் சில இங்கே தொகுக்கப்படுகின்றன.

என்னுடன் கருத்து மாறுபடுபவர்கள் மற்றும் தனிப்பட்ட அழுக்காறு உடையவர்கள் பலர் இதை வாய்ப்பாக வைத்துக் கொண்டு பல அவதூறுகளைச் செய்தனர். குறிப்பாக தேசிய வாதிகள். அவர்களோடு எனக்கு எப்போதும் முரணுண்டு. தேசியவாதம் எல்லை மீறும்போது இராணுவவாதமாகவும், பாசிசமாகவும் மாறிவிடும் ஆபத்து குறித்தும், அதன் விளைவாக எந்த மக்களின் விடுதலைக்காக அது நிற்பதாக உரிமை கொண் டாடுகிறதோ அந்த மக்களே சொல்லொணாத் துயர்களுக்கும் பேரழிவுகளுக்கும் ஆளாகக்கூடிய நிலை குறித்தும் நான் இருபதாண்டுகளாகவே எச்சரித்து வருகிறேன். தர்க்கபூர்வமாக இந்த வாதங்களைச் சந்திக்க இயலாதவர்கள் அவதூறு பேசுவதும்,

அரைகுறையாய்ப் புரிந்து கொண்டு ஆண்டர்சன் போன்றோரின் சிந்தனைகளை அரைவேக்காட்டுத்தனத்துடன் நக்கலடிப்பதையும் சந்தித்தும் வந்திருக்கிறேன். அவர்களில் சிலர் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு சில அவதூறுப் பிரசுரங்களை வெளியிட்டனர். இணையத் தளங்களில் நாலாந்தரமாக எழுதினர். குடும்ப சகிதமாக தொண்டு நிறுவனச் சேவை செய்து வருபவரும் தமது இயக்கத்தைச் சேர்ந்த மற்ற தலைவர்களின் தியாகங்களில் ஒண்டி வாழ்பவருமான 'பெரியாரியர்' ஒருவர் என்னை பார்ப்பனியச் சிந்தனையுள்ளவன் எனச் சொல்லி இந்து ராமுடன் ஒப்பிட்டு மகிழ்ந்து கொண்டார். பிற தேசியவாத இயக்கங்களைக் காட்டிலும் கொஞ்சம் பரவாயில்லை எனச் சிலரால் நம்பப்படுகிற ஒரு 'தேசிய + ஒடுக்கப்பட்ட' விடுதலை இயக்கத்தினர் தமது இயக்க இதழில் கண்டனம் செய்தனர். இலங்கை முஸ்லிம்களின் தனித்துவம் குறித்த பேச்சு இங்கே எழுந்தபோது அதைத் தம் விடுதலை முழக்க இதழில் அவர்கள் எதிர்கொண்ட விதத்தில் எந்த வகையிலும் பிற குறுந்தேசியவாதிகளிடமிருந்து வேறுபடவில்லை என்பதைப் பின்னர் நிறுவிக் கொண்டனர்.

வழக்கமாக என்னிடம் ஜென்மப் பகை காட்டும் ஒரு லண்டன் தமிழ் எழுத்தாளர் தனது காழ்ப்பைக் கக்கியது மட்டுமின்றி இந்நூலிலுள்ள 'புதுவிசை' கட்டுரையை மார்க்சிஸ்ட் கட்சி ஏடு என்பதால் அதற்குத் தக நான் பேசியுள்ளேன் என்பதாகக் 'கண்டுபிடித்து'த் தன் வழக்கமான மூடத்தனத்தையும் (இந்த வார்த்தையை நான் மிகவும் கவனமாகவே இங்கு பிரயோகிக்கிறேன்) வெளிப்படுத்தியிருந்தார். பிரதிகளைக் கூர்ந்து கவனிக்கும் அரைகுறை அறிவுடைய ஒருவருக்குக்கூட அது வெளிநாட்டுத் தமிழ் வாசகர்களை மனங்கொண்டு வெளிநாட்டிலிருந்து வரக்கூடிய இதழொன்றுக்காக எழுதப்பட்ட கட்டுரை என்பதை விளங்கிக் கொள்ள முடியும். லண்டனிலிருந்து வெளிவரும் பவுசரின் 'எதுவரை'க்காக எழுதப்பட்ட அக் கட்டுரை 'புதுவிசை'யில் வெளி வர நேர்ந்தது ஒரு தற்செயல். அது அந்த இரு இதழாசிரியர்களுக்கும் தெரிந்த விஷயம். பிரதி என் கைக்கு வராமல் அச்சகத்திலேயே, என்னுடைய ஒப்புதலுடன் மாற்றி அச்சிடப்பட்ட கட்டுரை அது. 'லால்கர்' குறித்த எனது நூல் தற்போது வெளிவந்துள்ளது. மே.வங்க மார்க்சிஸ்ட் கட்சியின் குண்டர் அரசியலை கடுமையாகக் கண்டித்துத் தமிழில் வெளிவந்துள்ள மிகச் சில நூற்களில் அது ஒன்று. சென்ற மாதம் சென்னையில் மார்க்சிஸ்ட் கட்சியின் இலக்கிய அமைப்புச்

சார்பாக நடத்தப்பட்ட ‘இலங்கை துப்பாக்கிகள் மௌனமான வரலாறு’ என்கிற நூல் வெளியீட்டு விழாவில் ‘சுய நிர்ணய உரிமையையே மறுப்பது எப்படி மார்க்சியமாக இருக்க இயலும்? ராஜபக்சேவே விரும்பி தமிழ் ஈழம் கொடுத்தால்கூட நீங்கள் போய் தடுத்துவிடுவீர்கள் போல உள்ளதே?’ என நான் வெளிப் படையாக விமர்சனம் வைத்ததையும், அக் கட்சியின் நாளிதழான தீக்கதிரில் (நவம்பர் 1, 2009) இதுகுறித்து என் கருத்தை மறுத்து எழுதப்பட்டுள்ளதையும் இங்கு கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

அகன்ற மார்க்சிய நோக்கிலிருந்து நான் பிரச்சினைகளை அணுகுகிறேன். நானறிந்த பெரியாரியம், அம்பேத்கரியம் முதலியன இதற்குத் துணைபுரிகின்றன. உலகளவில் ஏற்பட்டு வரும் மாற்றங்கள், வளர்ந்துவரும் சிந்தனைகள் ஆகியவற்றை என்னால் இயன்றவரை தொகுத்துக்கொள்ள முயல்கிறேன். அந்த வகையில் என் மனதிற்குப் பட்டதைச் சொல்கிறேன். உரிய நியாயங்களுடன் யாரேனும் அவற்றை மறுத்தால் என் கருத்தை மாற்றிக் கொள்ள சித்தமாக இருக்கிறேன்.

என் எழுத்துக்களைத் தொடர்ந்து வாசித்து வரும், இதையும் வாசிக்க நேரும், என் அன்பிற்குரிய தோழர்களை நோக்கி நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன். கடந்த ஆறு மாதங்களாக நான் எழுதிய இக் கட்டுரைகளை நடுநிலையோடு வாசித்துப் பாருங்கள். இவை எந்த வகையில் இந்து ராம் அல்லது இலங்கை அரசின் அணுகல் முறையுடன் ஒத்துப் போகின்றன என யோசித்துப் பாருங்கள். இந்த ஆறு மாதங்களில் ‘இலங்கையில் போரை நிறுத்தி ஜனநாயகத்தை நிலைநாட்டுவதற்கான பிரச்சாரக் குழு’ என்கிற அமைப்பின் மூலம் நாங்கள் மேற்கொண்ட முயற்சிகளுக்கு ஆதாரமாக சில நிகழ்ச்சிகளின்போது நாங்கள் வெளியிட்ட துண்டறிக்கைகள் மூன்று பின்னிணைப்பில் உள்ளன.

என்னால் மிக உறுதியாகச் சொல்ல முடியும். எதிரே உள்ள எதார்த்தங்களைச் சரியாக அவதானித்து ஈழத் தமிழ் மக்களைப் பேரழிவிலிருந்து காப்பாற்றுவதற்கு என்ன சாத்தியமோ அதை நாங்கள் மிகச் சரியாக முன்வைத்துள்ளோம். போரை உடனடியாக நிறுத்தல் என்பதுதான் ஈழத் தமிழர்களின், குறிப்பாக களத்தி லிருந்த தமிழர்களின் ஒரே கோரிக்கையாக இருந்தது. கடந்த பல ஆண்டுகளாகவே ஈழத் தமிழர்களின் கோரிக்கை அதுதான். கால் நூற்றாண்டு காலமாகப் போரின் கொடுமைகளுக்கு முகம்

கொடுத்துக் கொண்டிருந்தவர்கள் அவர்கள். வீடு, வாசல், செய்து வந்த தொழில், உற்றார் உறவினர் மட்டுமின்றி 13, 14 வயதில் தங்கள் பிள்ளைகளையும் கண் முன் பறிகொடுத்தவர்கள் அவர்கள். தமிழ் ஈழம் என்கிற உச்சபட்சக் கோரிக்கை அவர்களிடம் இன்று கிடையாது.

பின் உச்சபட்சக் கோரிக்கையை எழுப்பியவர்கள் யார்? விடுதலைப் புலிகள், விடுதலைப் புலிகளின் ஆதரவாளர்கள், புலம் பெயர்ந்து மேலை நாடுகளில் வாழ்ந்தவர்கள், தமிழ் நாட்டில் உள்ள புலி முகவர்கள் - இவர்கள் மட்டுமே. மற்றபடி போருக்கு முகம் கொடுக்க நேர்ந்திருந்த ஈழத் தமிழர்கள் அந்தக் கோரிக்கையைக் கைவிட்டுப் பல ஆண்டுகளாயிற்று. அந்தக் கோரிக்கைக்கான நியாயங்கள் எதுவும் இன்று இல்லை என்று கூட நான் சொல்ல வரவில்லை. இன்றைய நிலையில் உச்சபட்சக் கோரிக்கை சாத்தியமில்லை. தவிர அது இன்று ஈழத் தமிழர்களின் பொதுவான கோரிக்கையாகவும் இல்லை. புலிகள் தாம் ஒருவரே தமிழ் மக்களின் பிரதிநிதி என்கிற வடிவில் வைத்த உச்சபட்சத் தமிழ்த் தேசியக் கோரிக்கை சிங்களர்களை மட்டுமல்ல, கிழக்கு மாகாணத் தமிழர்கள், முஸ்லிம்கள், மலையகத் தமிழர்கள் எல்லோரையும் கூட அந்நியப்படுத்தியிருந்தது. போர் உடனடியாக முடிவுக்கு வர வேண்டும் என்பது மட்டுமே அவர்களின் உணர்வாக இருந்தது.

போரை யார் ஆதரித்தார்கள்? ஒருபக்கம் புலிகள் மற்றும் அவர்களின் ஆதரவாளர்கள்; இன்னொரு பக்கம் சிங்கள-பவுத்தப் பேரின வெறியர்கள். போரை வெறுத்தவர்கள் போருக்கு முகம் கொடுத்துக் கொண்டிருந்த தமிழ் ஈழ மக்கள். நாங்கள் அவர்களின் குரலைப் பிரதிபலித்தோம். போரை நிறுத்த வேண்டும்; தமிழ்ப் பகுதிகளில் இராணுவ நீக்கம் செய்ய வேண்டும்; முகாம்களிலுள்ள தமிழ் மக்கள் விடுதலை செய்யப்பட்டு சுதந்திரமாக இயங்க வேண்டும்; உலக நாடுகள் போருக்கு உதவி செய்யக் கூடாது - இந்தக் கோரிக்கைகளை நாங்கள் முன்வைத்தோம். அருந்ததிராய் அவர்களைச் சந்தித்து இது குறித்து அறிக்கை ஒன்றை அளிக்கவும் ஏற்பாடு செய்தோம். எங்கள் துண்டறிக்கைகள் இதோ உங்கள் முன் சான்றுகாக நிற்கின்றன. தோழர்களே, மனச்சாட்சியுடன் சிந்தித்துப் பாருங்கள். ஈழத் தமிழர்கள் மீது அக்கறை கொண்டவர்கள் வேறு என்ன கோரிக்கை வைத்திருக்க இயலும்.

முள்வேலி முகாம்கள் பற்றி இன்று நீட்டி முழக்கும் புலி முகவர்கள் இது பற்றிச் சிந்திப்பதற்கு முன்பே அந்தக் கோரிக்

கையை நாங்கள் வைத்தோம். நாங்கள் மட்டுமே வைத்தோம். ஆறு மாதங்களுக்குப் பின்பு இன்று புலி முகவர்கள் அந்தக் கோரிக்கையைத்தான் வைக்கிறார்கள்.

போருக்கு முகம் கொடுத்துக் கொண்டு களத்திலிருந்த ஈழத் தமிழர்களின் விருப்புகளுக்கு எதிராகப் போரை ஆதரித்த புலம் பெயர் தமிழர்கள் மற்றும் புலி முகவர்கள் குறித்து ஒன்றை நாம் சிந்திக்க வேண்டும். எந்தப் போருக்கு முகம் கொடுக்க விரும்பாது தப்பித்தோடிப் புலம் பெயர்ந்து வாழ்ந்தார்களோ அந்தப் போரை ஆதரித்து ஊக்கியவர்கள் அவர்கள். எந்தப் போரின் விளைவாகத் தம் சந்ததியும் குழந்தைகளும் அழிபடுவர் என அஞ்சி (அது மிகவும் நியாயமான அச்சம் என்பதில் எந்த ஐயமுமில்லை) புலம் பெயர்ந்து தம் பிள்ளைகளை மேலை நாடுகளில் தரமான கல்வி அளித்து, பாதுகாப்பாக வளர்க்கிறார்களோ அந்தப் போரில் சக ஈழ மக்களின் குழந்தைகள் முன்னணிப் படையாக நிறுத்தப்பட்டு பலி கொடுக்கப்படுவதைக் கண்டு கொள்ளாமல் போருக்கு ஆதரவாகப் பிரச்சாரம் செய்தவர்கள் அவர்கள்.குழந்தைப் போராளிகளைப் பயன்படுத்துவது குறித்துக் கொஞ்சமும் குற்றஉணர்ச்சியின்றி என்னிடம் வாதிட்ட ஒரு புலம் பெயர் கவிஞரை நான் பாரிசில் சந்தித்தேன் (அவரது கவிதை நூல் ஒன்று 'காலச்சுவடு' வெளியீடாக வந்துள்ளது). உங்கள் பிள்ளைகளை நீங்கள் குழந்தைப் போராளியாய்க் களத்திற்கு அனுப்புவீர்களா என நான் கேட்டபோது அவர் அவசரமாக மறுத்தார்.

புலி ஆதரவு அதாவது போர் ஆதரவு நிலைபாடு எடுத்த தமிழக அறிவுஜீவிகள் குறித்தும் ஒரு பக்கம் எண்ணிப்பாருங்கள். போரை நிறுத்த வேண்டும் எனத் தாங்களும் கூடச் சொன்னோம் என ஒரு வேளை இவர்கள் உரிமை கோரக்கூடும். சொல்லியிருக்கலாம். ஆனால் அதை அவர்கள் முதன்மைப்படுத்திச் சொன்னதில்லை. தவிரவும் போரை நிறுத்த வேண்டும் என்பது இரு பக்கமும் சொல்ல வேண்டிய அறிவுரை. ஆனால் இவர்கள் போரை நிறுத்த வேண்டும் எனச் சொன்னது ராஜபக்சேவை நோக்கி மட்டுமே. கடந்த இரு தசாப்தங்களாகத் தோல்வியை மட்டுமே சந்தித்துக் கொண்டிருந்த, இன்று வெற்றியை நோக்கி நகர்ந்து கொண்டிருந்த இராணுவமயப்பட்ட ஒரு தேசிய வெறியை நோக்கி போரை நிறுத்து என்றால் அது நிறுத்துமா? கோத்தபயா ராஜபக்சேவால் எள்ளி நகையாடப்படுவதற்குத்தான் இந்த வேண்டுகோள் இட்டுச் சென்றது. நாங்கள் ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டோம் எனப் புலிகள் தரப்பில் இறுதிக் கணத்தில் அறிவிக்கப்பட்டபோது அவன் சிரிக்கவில்லையா?

புலி ஆதரவு தமிழக அறிவுஜீவிகளே, கொஞ்சம் நெஞ்சைத் தொட்டுச் சிந்தித்துப் பாருங்கள். 13, 14 வயதுக் குழந்தைகளைக் கட்டாயமாகக் களத்திற்குக் கொண்டு போய் நிறுத்தியதை என்றாவது நீங்கள் கண்டித்தது உண்டா? எந்த மக்களின் விடுதலைக்காக ஆயுதம் ஏந்தியதாகச் சொன்னார்களோ அந்த மக்களைத் தமக்குப் பாதுகாப்புக் கேடயமாக, அதுவும் வெறி பிடித்து முன்னேறிவரும் அரச படையின் முன் கேடயமாகப் பயன்படுத்தியது குறித்து ஒரு வார்த்தை நீங்கள் பேசியதுண்டா? போரை ஆதரித்து வாய்ச் சவடால் பேசுவீர்கள். புலி முகவர்களை அழைத்து மாநாடு நடத்துவீர்கள். அவ்வப்போது ஒரு ஆர்ப்பாட்டம், தர்ணா நடத்திவிட்டு ஒரு ஆறு மாதம் அல்லது மூன்று மாதம் லண்டனில் அல்லது அமெரிக்காவில் 'செட்டில்' ஆகியிருக்கும் உங்கள் பிள்ளைகள் வீட்டில் ஓய்வு அனுபவித்து விட்டு வந்து மீண்டும் புலிமுகவர்களை வைத்து கூட்டம் போடுவீர்கள். இதுதானே நீங்கள் செய்தது? ஆயுதப் போராட்டங் களின் சாத்தியங்கள் குறித்தும், இன்றைய பொருத்தப்பாடு குறித்தும், சமகால மக்கள் மீது அது ஏற்றும் சுமையைப் பற்றியும் நீங்கள் யோசித்ததுண்டா? சொகுசான உங்கள் வாழ்க்கையை எந்த அம்சத்திலும் விட்டுக் கொடுக்காமல் சாத்தியமற்ற ஆயுதப் போராட்டங்களை Romanticise பண்ணுவது ஒரு ஆபாசம் என்பதை நீங்கள் புரிந்துகொள்ளவில்லையா?

நமது அறிவுஜீவிகள் ஒருசிலரிடம் காணப்படும் இன்னொரு போக்கை யும் இங்கே சுட்டிக்காட்ட வேண்டும். ஒரு ஆறு மாதங்களுக்கு, ஏன் மூன்று மாதங்களுக்கு முன்புவரை புலி ஆதரவு நிலைபாடு, ஆயுதப் போராட்ட ஆதரவு எடுத்த ஒரு சிலர் இன்று 'ஆமாம். சில தவறுகள் நடந்துதான் இருக்கும் போலிருக்கு. கடைசிக் கட்டத்தில் மக்கள் கேடயமாகப் பயன் படுத்தப்பட்டது உண்மை தான் போல. உலகச் சூழல் எப்படி மாறிவிட்டது என்பதைப் புலிகள் பார்க்கத் தவறிவிட்டார்கள். தமிழீழம் ஒன்றே தீர்வு, நாடு கடந்த அரசு என்றெல்லாம் பேசுவது இன்று பொருத்தமில்லை. மக்களுக்கு அது ஆபத்தாகவே முடியும்' என்கிற தொனியில் எழுதுவதைப் பார்த்திருப்பீர்கள். சிலர் இதை வெளிப்படையாக எழுதியுள்ளனர். ஒருசிலர் நண்பர் களிடம் புலம்புகின்றனர். தங்களைப் போல புலி ஆதரவு நிலைபாடு எடுக்காதவர்களைப் பற்றி இணையத் தளங்களில் பேசப்படும் அவதூறுகளைப் பார்த்துவிட்டு இனி இணைய தளத்தில் எழுதப் போவதில்லை, அல்லது இணையக் கட்டுரை களை பார்க்கப் போவதில்லை எனவும் பேசித் திரிகின்றனர்.

ஒரு வகையில் இவர்களின் நேர்மை பாராட்டத்தக்கதுதான் என்றபோதிலும் இரு கேள்விகள் எழுகின்றன. இவற்றை எல்லாம் மூன்று மாதங்களுக்கு முன் உங்களால் எப்படி ஊகிக்க இயலாமல் போயிற்று? உங்களால் யூகிக்க இயலாவிட்டாலும் 'மனித உரிமைகளுக்கான யாழ்ப்பாணப் பல்கலைக் கழக ஆசிரியர்கள்' (UTHR-J) முதலான அமைப்புகளின் அறிக்கைகளும் கூட உங்கள் கண்களில் எப்படிப் படாமல் போயிற்று. எல்லாம் நடந்து முடிந்தபின்தான் இதை எல்லாம் புரிந்து கொள்ள இயலுமா? நேரில் தொட்டுப் பார்த்தால்தான் எதையும் நம்புவீர்களா? இதை ஒருவகை அனுபவவாதம் எனச் சொல்லலாமா? இணையத்தளத்தில் அவதூறுகளையும் ஆபாசங்களையும் எழுதுகிறார்கள் எனச் சலித்துக் கொள்கிறீர்களே மூன்று மாதங்களுக்குப் முன் நீங்களும் இதைச் செய்யவில்லையா? அது குறித்துக் கிஞ்சித்தும் குற்ற உணர்ச்சி உங்களுக்கு உண்டா?

எப்படியோ காலங்கடந்தேனும் உண்மைகளை ஏற்றுக் கொள்ளும் நேர்மையாவது இவர்களிடம் உண்டு. இன்னொரு தரப்பினர் இந்த அளவும் நேர்மையற்றவர்கள். இதுநாள்வரை புலிகளையும் போரையும் ஆதரித்துக்கொண்டு வாழ்ந்திருந்தவர்கள். இன்று எல்லாம் முடிந்தபின் 'அவர்களிடம் சில விமர்சிக்கத்தக்க பண்புகள் இருந்ததுதான், என்ன இருந்தாலும் அவர்கள் இப்படி முஸ்லிம்கள் விசயத்திலும், சக போராளிகளிடத்திலும் நடந்திருக்கக் கூடாதுதான்' என நசுக்கி நசுக்கிக் கருத்துக்களை வெளியிட்டுக் கொண்டுள்ளனர். ஆனால் இதை அவர்கள் மனப்பூர்வமாகச் சொல்வதில்லை. எல்லாம் சொல்லிவிட்டு ஆனாலும் இதை எல்லாம் இப்போது பேசக்கூடாது என முடிப்பார்கள். புலிகள் செய்தது தவறுதான். ஆனால் அது 'தவறல்லாத தவறு' என சமீபத்தில் ஒருவர் எழுதியிருந்ததைப் பார்த்து சிரிப்புத்தான் வந்தது.

அரசியல் தீர்வு குறித்து நாங்கள் நடத்திய கருத்தரங்கில் சிராஜ் மசூர் என்கிற கிழக்கு மாகாண முஸ்லிம் தோழர் ஒருவரை அழைத்துப் பேச வைத்தோம். இலங்கை முஸ்லிம் ஒருவர் தன்னை அவ்வாறே அடையாளப்படுத்திக் கொண்டு தமிழ்நாட்டில் தங்கள் பிரச்சினையைப் பேசியது இதுவே முதல் தடவை. உண்மையிலேயே முஸ்லிம் பிரச்சினையைப் பார்க்கத் தவறியது குறித்த குற்ற உணர்ச்சி நம் இயக்கத்தவர்கள் மற்றும் அறிவுஜீவிகளிடம் இருந்திருந்தால் அவரது கருத்தை அவர்கள் கவனித்திருக்க வேண்டும். ஆதரவு அளித்திருக்க வேண்டும். ஆனால் எத்தனை இறுக்கத்துடன் அவரை இவர்கள் அனைவரும் புறக்கணித்தனர்

என்பதை யோசித்துப் பாருங்கள். இந்து அடையாளத்துடன் இங்கே ஈழ ஆதரவு பேசிய சிவாஜிலிங்கத்தை மேடை ஏற்றுவதில் எள்ளளவும் வெட்கமற்ற இவர்கள் சிராஜ் மசூரைப் புறக்கணித்த தற்கும், புறணி பேசியதற்கும், இவர்கள் எல்லோரிடமும் ஒளிந்துள்ள இந்து மனம் தவிர வேறென்ன காரணம் இருக்க முடியும்? வெளி மாநிலம் அல்லது வெளிநாட்டிலிருந்து யார் பேச வந்தாலும் ஓடி ஓடிப் பேட்டி எடுக்கும் தோழர் தியாகு, சிராஜ் மசூர் தமிழ்நாட்டில் தங்கியிருந்த ஒரு வார காலத்தில் எங்கே போய் ஒளிந்து கொண்டார்?

நான் இந்த கட்டுரையை எழுதிக் கொண்டிருக்கும்போது மாவோயிஸ்டுகளின் ‘போராளி’ இதழ் வெளிவந்துள்ளது. புலிகள் மீது ஜனநாயகவாதிகளால் என்னென்ன விமர்சனங்கள் இதுவரை வைக்கப்பட்டதோ அத்தனையையும் இன்று அவர்கள் ஏற்றுக் கொண்டுள்ளது ஒரு பக்கம் மகிழ்ச்சியாக இருந்தபோதிலும் அதை நான் வைத்தபோது இவர்களெல்லாம் எத்தனை பேச்சுப் பேசினார்கள். மூன்று மாதங்களுக்கு முன் இவர்கள் வெளியிட்ட வெளியீடு ஒன்று குறித்துப் ‘புத்தகம் பேசுது’ பேட்டியில் கூறியுள்ளேன். அதற்கும் இதற்கும் எத்தனை வேறுபாடு. தொடக்கத்திலிருந்து அக்கட்சிக்கு இதுதான் நிலைபாடு என்று அறிவேன். பின் இடையில் என்ன நிகழ்ந்தது. புலிகள் மீதான இந்த விமர்சனங்கள் அனைத்தையும் கடுமையாக மறுக்கக் கூடிய தமிழ்நாட்டுப் புலி முகவர்களுடன் இவர்கள் அடித்த லூட்டி குறித்து இவர்களுக்கு ஏதேனும் குற்ற உணர்ச்சி உண்டா? மாவோயிஸ்டுகளை ஆதரிக்கும் நம் மரியாதைக்குரிய நண்பர் விடியல் சிவா, சிவாஜிலிங்கத்தையும் சீமானையும் வைத்து மாநாடுகள் நடத்தியதை என்னென்பது. சிவா! பெரியார் குறித்த மிக முக்கிய ஆவணங்கள் இரண்டை வெளிக்கொணர்ந்த நீங்கள் பெரியார் சிலையை உடைத்த ஒரு இந்து அமைப்பு நடத்திய விநாயகர் சதுர்த்தி விழாவில் தோப்புக் கரணம் போட்ட ஒருவரை உங்கள் ஈழ ஆதரவு மேடையில் ஏற்றியதற்கு என்ன சமாதானம் சொல்லப் போகிறீர்கள்? வால்டர் பெஞ்சமின் நூலை வெளியிட்ட நீங்கள் தேவர் சிலைக்கு மாலை போடும் சீமானை மேடை ஏற்றி அழகு பார்த்தது எத்தனை பெரிய அறிவு வீழ்ச்சி?

மூன்று மாதங்களுக்கு முன் புலிகளின் புகழ் பாடிய மாவோயிஸ்ட் தோழர்கள் இன்று தீவிர புலி விமர்சன நிலை மேற்கொள்வதை இப்படிப் புரிந்து கொள்ளலாமா? புலிகள் தோல்வி அடைந்து அழித்தொழிக்கப்பட்டு விட்டதால் ஆயுதப் போராட்டம் குறித்த விமர்சனம் மேலுக்கு வந்துவிடக் கூடாது,

புலிகள் இப்படி எல்லாம் தவறு செய்தார்கள், தோல்வி அடைந்தார்கள். நாங்கள் அப்படி இல்லை என்று காட்டிக்கொள்ள மட்டுந்தான் இதெல்லாம் என்றால் தோழர்களே, இது மிகவும் வேதனைக்குரியது. நாமெல்லோரும் இன்று செய்ய வேண்டியது அரசியலை முன்னிலைப்படுத்துவது. இடதுசாரி அரசியலை. இலங்கையிலும் அதுதான் இன்று தேவை.

இடதுசாரி அரசியல்.

இனவாத அரசியலல்ல.

இராணுவவாத அரசியலல்ல.

இந்தக் கட்டுரைகளையும் எங்கள் செயல்பாடுகளுக்குச் சான்றாக விளங்கும் துண்டறிக்கைகளையும் வாசித்தபின் யோசித்துப் பாருங்கள். என் மீது இவர்கள் வைத்த குற்றச்சாட்டிற்கும் புஷ் தன்னை விமர்சித்தவர்கள் மீது வைத்த குற்றச்சாட்டிற்கும் என்ன வித்தியாசம்? "நான் சொல்வதை அப்படியே வழிமொழியாதவர்கள் யாரும் என் எதிரிக்கு ஆதரவானர்கள்" - என்கிற புஷ் கோட்பாட்டைத்தானே இங்கு புலி முகவர்கள் புலிகளை விமர்சித்தவர்கள் மீது பிரயோகித்தார்கள். தேசியவாதத்தை உச்சபட்சமாகக் கொண்டு சென்று இராணுவ வாதம் பேசியவர்கள் நீங்கள். தேசியத்தின் உச்சபட்சமான பாசிச வடிவைக் கொண்டாடியவர்கள் நீங்கள். அதனால் பல்வேறு வழிகளில் பலனடைந்தவர்கள் நீங்கள். போரைக் கொண்டாடிக் களித்தவர்கள் நீங்கள். தமிழர்களுக்குள் உள்ள பன்மைத்தன்மையை மூடி மறைத்தவர்கள் நீங்கள். உங்கள் பின் நாங்கள் எப்படி வர இயலும்?

இறுதிக்கட்ட ஈழப்போர் குறித்து இரண்டு அணுகல் முறைகள் மட்டுமே உண்டு என்பது இவர்களின் வாதம். பா.செயப்பிரகாசம் போன்ற கோமாளிகள் முதல் விடுதலை இராசேந்திரன் போன்ற 'போராளி' கம் 'அறிவுஜீவிகள்' வரை இதுதான் அவர்களின் நிலைபாடு. ஒன்று புலி ஆதரவு நிலைப்பாடு. மற்றது ராஜபக்சே-இந்து ராம் நிலைப்பாடு. ஆனால் குறைந்தபட்சம் மூன்று நிலைப்பாடுகள் இதிலிருந்தன. அந்த மூன்றாவது நிலைப்பாடு போர் நிறுத்த ஆதரவு நிலைப்பாடு. நீங்கள் ராஜபக்சேவை எதிர்த்தீர்கள். சிங்களர்கள் எல்லோரையும் வெறுத்தீர்கள். சிங்கள இனவாதிகள் புலிகளை எதிர்த்தார்கள். தமிழர்கள் எல்லோரையும் வெறுத்தார்கள். எங்களைப்போன்ற ஜனநாயகவாதிகள் போரை எதிர்த்தார்கள். இனவாதத்தையும் இராணுவவாதத்தையும் வெறுத்தார்கள், இனவாதமும் இராணுவவாதமும்

பேரழிவை நோக்கி இட்டுச் செல்லும் என்பதே எங்கள் நிலைப்பாடு. அதுதான் நடந்தது. இனி ஒரு முறை திரும்பி நடக்கக் கூடாததும் அதுவே.

ஏதோ ஒருவகையில் உங்கள் நிலைப்பாடு ராஜபக்சேவுக்கு ஆதரவாகப் போகுமல்லவா - எனச் சிலர் கேட்கக்கூடும். யோசித்துப் பாருங்கள், எப்படி எம் நிலைப்பாடு சிங்கள இனவாதத்திற்கு ஆதரவாகப் போகும். ராஜபக்சேவும் புலிகளும் ஓரம்சத்தில் ஒத்துப்போனார்கள். இருவரும் இனவாதத்தை அதன் உச்சபட்சத்திற்குக் கொண்டு போனார்கள். இருவருக்குமே எதிரிகள் தேவையாக இருந்தார்கள். உண்மையில் எதிரி இல்லாமற் போனதன் பிரச்சினையை இன்று சந்தித்துக் கொண் டிருப்பது ராஜபக்சேதான். உள்நாட்டிலிருந்தும் வெளிநாட்டி லிருந்தும் வரும் அழுத்தங்கள் அவரைத் திக்குமுக்காட வைக்கின் றன. போர் வெற்றி மனநிலையைச் சாதகமாகப் பயன் படுத்தி இரண்டாண்டுகளுக்கு முன்னதாகவே தேர்தலை நடத்தி விட முனைந்தவருக்கு பொது வேட்பாளராக ஃபொன்சேகா நிறுத்தப் படக்கூடிய வாய்ப்பு வயிற்றைக் கலக்குகிறது. மனித உரிமை மீறல்கள் குறித்த பன்னாட்டுக் கண்டனங்களையே முதலீடாக்கி அந்த அடிப்படையில் தேசிய வெறியைத் தக்கவைக்க முனைகிறார். இலங்கை முழுவதும் தமிழ்ப் பகுதிகள் உட்பட 'One Nation, One Country' 'ஒரே தேசம், ஒரே மக்கள்' என பெரும் 'பேனர்கள்' வைக்கப்படுகின்றன. தமிழர்களுடையது மட்டுமல்ல முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், மலையகத் தமிழர்கள் எல்லோரது அடையாளமும் மறுக்கப்படுகிறது. புலிகளுக்குப் பின்னும் இராணுவவாத அரசியலைத் தக்கவைத்து ஜனநாயக மறுப்பைத் தொடர ராஜபக்சே அரசு முயற்சிக்கிறது. இந்நிலை யில் போரை நிறுத்துதல் என்கிற முழக்கம் எப்படி ராஜபக்சே வுக்கு ஆதரவாக இருந்திருக்க முடியும். உண்மையில் பாரிசி லிருந்து இயங்கும் ஒரு தலித் அமைப்பு ஷோபாசக்தியும் நானும் சேர்ந்து எழுதிய 'ஈழம் : இன்றைக்கு வேண்டியது சமாதானமே' என்கிற வெளியீட்டை 'இது புலிகளை மறைமுகமாகக் காப்பாற்றும் முயற்சி' எனக் கண்டித்து அவர்களின் இணையத் தளத்தில் எழுதியது இங்கே குறிப்பிடத்தக்கது.

எங்களின் அணுகல் முறை இரண்டு அம்சங்களைக் கொண் டிருந்தது. ஒன்று போரை நிறுத்தி மீண்டும் ஜனநாயகத்தை நிலைநாட்டுதலை நோக்கிய நகர்வு. இரண்டாவது தமிழ் இயக்கங்கள் உள்நோக்கித் திரும்பித் தம்மை ஆய்வு செய்து

கொள்ள வேண்டும் என்கிற கருத்தை மீண்டும் மீண்டும் வலியுறுத்தியது. இனவாத அடிப்படையில் மேலிருந்து கட்டப்படும் தமிழர் ஒற்றுமை இனி சாத்தியமில்லை. அத்தகைய அணுகல் முறையும், தமிழர்களுக்குத் தாங்கள் மட்டுமே ஒரே பிரதிநிதி எனப் புலிகள் வைத்த பாசிச நிபந்தனையும் இன்று தமிழர் ஒற்றுமையைப் பலவீனப்படுத்தியுள்ளது. புலிகள் இராணுவ ரீதியில் தோற்கு முன்பாகவே அரசியல் ரீதியில் தோற்றார்கள். முஸ்லிம்கள், தலித்கள், கிழக்கு மாகாணத்தவர், மலையகத் தமிழர் எல்லோரின் வெறுப்புக்கும் ஆளானார்கள். போராட்டத்திலிருந்து இவர்கள் எல்லோரும் அந்நியமாவதற்கும் இதுவே காரணமாக இருந்தது. இந்த நிதர்சனத்தை நாம் புரிந்து கொள்ள வேண்டும் என்றேன். புரிந்து கொள்ள மறுத்தால் நீங்கள் தோற்பீர்கள் என்றேன். எந்த மக்களுக்காக நாம் நிற்பதாகச் சொல்கிறோமோ அந்த மக்களின் ஒப்புதல் நமக்குத் தேவை. இந்த ஒப்புதலில்லாதபோது நாம் வெற்றி பெற இயலாது. கீழிருந்து கட்டப்படும் ஒற்றுமை ஒன்றே நமக்கு பலம். தமிழர்களின் உள் அடையாளங்கள் ஏற்கப்பட்டு ஒரு ஒற்றுமை கட்டப்பட வேண்டும். தமிழர்களின் எதிர்கால அரசியல் இந்த அடிப்படையில், இந்த அடிப்படையில் மட்டுமே உள்ளது. அதை நோக்கிய ஜனநாயக நடைமுறைகளே இன்றைய தேவை. நாடு கடந்த தமிழ் ஈழம் முதலான கோரிக்கைகள் காலத்துக்குப் பொருத்தமற்ற, மீண்டும் ஒரு பேரழிவை ஏற்படுத்தக்கூடிய கோரிக்கைகளல்ல இன்றைய தேவை. முஸ்லிம்கள், தலித்கள், கிழக்கு மாகாணத்தவர், மலையகத் தமிழர் மத்தியில் புதிய இளம் தலைமைகள் உருவாக வேண்டும். தமிழர்களின் அரசியல் புலிகளிடமிருந்து மட்டுமல்ல கருணா, டக்ளஸ் தேவானந்தா கும்பலிடமிருந்தும் விடுபட்டாக வேண்டும். இதைத்தான் நாங்கள் சொன்னோம். இப்போதும் சொல்கிறோம். நண்பர்களே, தமிழ்நாட்டில் உள்ள நாம் கொஞ்ச காலம் ஈழத் தமிழர்களைச் சுதந்திரமாக இயங்க விடுவோம். அபத்த அறிவுரைகளை நிறுத்திக் கொள்வோம். போரை நிறுத்துங்கள் என ராஜபக்சேவிடம் மட்டுமல்லாமல் புலிகளிடமும் வேண்டியிருந்தால், மக்களை மனித கேடயமாகப் பயன்படுத்த வேண்டாம் எனச் சொல்லும் தைரியம் பெற்றிருந்தால், ஆட்சி மாறும் இன்னும் கொஞ்ச காலம் தாக்குப்பிடியுங்கள் என்றெல்லாம் அறிவுரைக்காமலிருந்திருந்தால் இன்னும் சில ஆயிரம் தமிழர்கள் உயிர் பிழைத்திருக்கக்கூடும். ஒருவேளை புலிகளின் தலைமையும் கூடக் காப்பாற்றப்பட்டிருக்கலாம்.

எதிர்காலத் திசைவழி தெரியாமல் இன்று எல்லாவற்றையும் இழந்து நிற்கிறார்கள் ஈழத் தமிழர்கள். ஒவ்வொரு குடும்பத்திலும் குறைந்தபட்சம் மூன்று குழந்தைகளாவது உள்ளனர் என்கிறார் சமீபத்தில் மெனிக் ஃபார்ம் முகாமைப் பார்த்துவந்த ஒருவர். போர், இடப்பெயர்வு, முகாம் வாழ்க்கை ஆகியவற்றின் விளை பொருட்களில் ஒன்று இது. ஆண் துணை இல்லாத குடும்பங்கள் ஏராளம். குழந்தைகள், பெண்கள், முதியோர் மிகுந்த சமூகமாக அது ஆகியுள்ளது. உடலுழைப்பிற்கு ஆளிருந்தா லும் வேலை கொடுக்க யாருமில்லை. சுமார் 50,000 பேர் இன்று முகாம்களி லிருந்து விடுதலை பெற்றுச் சென்றிருந்தபோதும் அவர்களின் எதிர்கால வாழ்வு கேள்விக்குறியாகவே உள்ளது. 5,000 ரூபாய் பணம் மட்டுமே அவர்களுக்குத் தரப்படுகிறது. 20,000 ரூபாய் வங்கியில் போடுவதாகச் சொல்கின்றனர். அப்படி ஏதும் செய்ததாகத் தெரியவில்லை. உறவினர்கள் உள்ளவர்கள் வந்து கையொப்பமிட்டு இடைத்தங்கல் முகாம்களிலிருந்து அழைத்துச் செல்கின்றனர். உறவினர் இல்லாதவர்கள் இடைத் தங்கல் முகாம்களிலேயே இருந்துவிடவும் தயாராக உள்ளனர். விரும்பும் போது வெளியே சென்றுவர அனுமதி மட்டும் கோருகின்றனர். இரக்கமற்ற அரசு அதற்குத் தயாராக இல்லை.

கிழக்கு மாகாணத்தின் வாகரைப் போர் (2007) முடிந்தபின் இவ்வாறு முகாம்களில் வைக்கப்பட்டவர்களில் இன்றும் சுமார் 16,000 பேர் மீள்குடியமர்த்தல் செய்யப்படவில்லை. சம்பூர், நோரோசோலை முதலிய இடங்களில் இன்று உயர் பாதுகாப்பு வலயம் (HSZ), சிறப்புப் பொருளாதார மண்டலங்கள் (SEZ) உருவாக்கப்பட்டுள்ளன. சம்பூரில் 20,000 ஏக்கரில் உருவாகியுள்ள சிறப்புப் பொருளாதார மண்டலத்தில் இந்தியக் கழுகு சிறகு விரித்து அமர்ந்துள்ளது. 500 மில்லியன் டாலர் செலவில் 500 மெகாவாட் ஆற்றல் உற்பத்தி செய்யும் அனல்மின் நிலையம் ஒன்று உருவாக்கப்படுகிறது. இந்தியா அதில் முக்கிய பங்கு வகிக்கிறது. நோரோசோலையில் சீனக் கழுகு அமர்ந்துள்ளது. இன்னும் பன்னாட்டுக் கழுகுகள் அங்கே வட்டமிட்டுக் கொண்டுள்ளன. மறுசீரமைப்புப் பணியில் பங்குபெற ஏராளமான இந்திய நிறுவனங்கள் ஜொள்ளு விட்டுக்கொண்டு காத்திருக் கின்றன. ஏற்கனவே தமிழர்கள் குடியிருந்த இப்பகுதிகள் இவ்வாறு உயர் பாதுகாப்பு வலயங்களாகவும், சிறப்புப் பொருளா தார மண்டலங்களாகவும் மாற்றப்பட்டதன் விளைவாகவே இன்று கிழக்கில் மட்டும் 16,000 பேர் மீள்குடியிருப்பு மறுக்கப் பட்டுள்ளனர்.

முகாம் வாழ்வு பற்றி இங்கே பலரும் எழுதிவிட்டனர். வன்னியிலுள்ள மெனிக் பார்மில் அதன் அதிகபட்சக் கொள்ள ளவைக் காட்டிலும் இரு மடங்கு மக்கள் அடைக்கப்பட்டுள்ளனர். புலிகளின் முடிவிற்குச் சற்று முன்னதாக அவர்களிடமிருந்து தப்பி வந்தவர்கள் முதல் மூன்று மண்டலங்களில் (Zone 1, 2 and 3)வைக்கப்பட்டுள்ளனர். அவர்கள் மத்தியில் மட்டும் கொஞ்சம் கண்காணிப்பு குறைவு. வெளியிலிருந்து வருகிற இந்து ராம் முதலானவர்களை அழைத்துச் சென்று காட்டுவது இந்த முகாம்களைத்தான். இந்த மண்டலங்களுக்குள் ஓரளவு போக்கு வரத்தும் அனுமதிக்கப்படுகிறது. பகல் நேரங்களில் அனுமதி பெற்று அடுத்த மண்டலத்திலுள்ள உறவினர்களைப் பார்த்து வரலாம். சிறிய அளவு பண்டமாற்று, விறகு வியாபாரம் முதலியனவும நடைபெறுகிறது. சென்ற செப்டம்பர் 26 அன்று அப்படி ஆனந்த குமாரசாமி குடியிருப்பிலிருந்து (Zone 1), ராமநாதன் குடியிருப்பிற்கு (Zone 2) வெவ்வேறு நேரங்களில் சென்றவர்கள் மாலையில் ஒன்றாகத் திரும்பியுள்ளனர். கூட்டமாக வருவதைப் பார்த்த இராணுவத்தினர் ஓடிவந்து வழிமறிக்க, இவர்கள் அதை எதிர்க்க, இறுதியில் இராணுவம் துப்பாக்கியால் சுட்டுள்ளது. இரண்டு பெண்கள், இரண்டு குழந்தைகள் உட்பட ஆறு பேர் காயமடைந்த செய்தி பத்திரிகை களில் வந்தது. கைக்குண்டுகளை வீசி எறிந்து தப்பித்துப் போவதற்கு முயற்சித்ததால்தான் சுட நேர்ந்தது என இராணுவம் பொய்யுரைத்தது. அடுத்த நாள் கைக்குண்டுகள் மற்றும் ஆயுதங் களைத் தேடுகிறோம் என்கிற பெயரில் சுமார் 8 மணி நேரம் இக்குடியிருப்பிலிருந்தவர்கள் சோறு தண்ணீர் இல்லாமல் காக்க வைக்கப்பட்டுள்ளனர். ஓரளவு கண்காணிப்பு குறைந்த இம்முகாம்களின் கதியே இப்படியென்றால் மற்றவற்றைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை.

சர்வதேச அழுத்தத்தின் காரணமாக இன்னும் சில மாதங்களில் இந்த முகாம்களில் இருப்பவர்களில் பெரும்பாலோர் விடுதலை செய்யப்படலாம். எனினும் புலிகள் என சந்தேகப்படும் சில ஆயிரம் பேர்கள் விடுதலை செய்யப்படாமல் இன்னும் கொடிய காவல் முகாம்களில் வைக்கப்படலாம். சிறைச்சாலையில் இருப்ப வர்களுக்குக் கூட என்றைக்கு விடுதலை எனத் தெரிந்திருக்கும். சிறப்புக் கால முகாம்களில் உள்ளவர்களுக்கு அதுவும் தெரியாது. (தமிழக அரசு ஈழ அகதிகளுக்காக செயல்படுத்தும் செங்கல்பட்டு முகாம் ஒரு எடுத்துக்காட்டு.)

அப்புறம் மாஞ்சோலைப் பகுதியில் வடக்கு மாகாணத்திற் கான புதிய தலைநகரம் உருவாக்கப்பட உள்ளது. இன்னொரு இராணுவத் தலைமையகமும், நந்திக் கடலோரப் பகுதியில் உயர் பாதுகாப்பு வலயங்கலும் அமைக்கப்பட உள்ளன. இப்பகுதிகளில் முன்னர் வசித்தவர்கள் எங்கு செல்வார்கள்? அனேகமாக தற்போதுள்ள முகாம்களிலேயே அவர்களுக்கு நிரந்தரக் குடியிருப்பு ஏற்படுத்தப்படலாம்.

வடக்கிலிருந்து புலிகளால் விரட்டியடிக்கப்பட்டு 19 ஆண்டு களாக அகதி வாழ்க்கை வாழும் தமிழ் முஸ்லிம்களை உடனடி யாக மீள்குடியேற்றம் செய்வதாக வாக்களித்த ராஜபக்சே அதை இன்னும் நிறைவேற்றவில்லை. இதுகுறித்து உள்ளே குறிப்பிட் டுள்ளேன். இந்தக் கட்டுரையை எழுதிக் கொண்டுள்ளபோது 'எங்கள் தேசம்' இதழில் வெளிவந்துள்ள செய்திகள் மற்றும் பேட்டிகளிலிருந்து புத்தளம் முதலான பகுதிகளிலிருந்த அகதிகள் மீள்குடியேற்றம் செய்யப்படும் வாய்ப்புகள் உள்ளதாகத் தெரிகிறது. அதிலும் பல பிரச்சினைகள். 250 குடும்பங்களாக 20 ஆண்டுகளுக்கு முன்வந்து தங்கிய ஒரு குடியிருப்பு இன்று 750 குடும்பங்களாகப் பெருகியிருக்கிறது. மீண்டும் அவர்கள் ஊர் திரும்பும்போது அவர்களுக்கு அளிக்கபடப் போவது அந்த 250 வீடுகள்தான். மற்றவர்கள்...? அம்பாறை பகுதியில் தீவிரமாக இல்லாதபோதும் கொஞ்சம் கொஞ்சமாக சிங்களக் குடியேற் றங்கள் மேற்கொள்ளப்படுகின்றன.

மிகப் பெரிய அளவில் இலங்கை இன்று பொருளாதார நெருக்கடியைச் சந்தித்துக் கொண்டிருக்கிறது. "இந்த ஆண்டின் முதல் நான்கு மாதங்களில் இலங்கையின் செலவினம் 28 சதம் அதிகரித்துள்ளது. வருமானம் 11 சதம் குறைந்துள்ளது" (ராய்ட்டர், ஜூலை 8, 2009). இந்த ஆண்டின் முதல் ஆறு மாதங்களில் இலங்கையில் 55 கம்பெனிகளும் மூடப்பட்டுள்ளன. 142 ஆயிரம் பேர் வேலை வாய்ப்பை இழந்துள்ளனர். 96 ஆயிரம் தொழிலாளி கள் வேலை இழந்துள்ளனர். ஆயத்த ஆடைத் தொழிலில் ஈடுபட்டிருந்தவர்கள் 60 ஆயிரம் பேர் தம் தொழிலை இழந்துள் ளனர். கட்டுமானப் பணிகளில் ஈடுபட்டிருந்த 36 ஆயிரம் பேருக்கு இன்று வேலை இல்லை" (சர்வதேசத் தொழிலாளர் அமைப்பு அறிக்கை - ஜூலை 2, 2009). "இந்த ஆண்டில் முதல் ஐந்து மாதங்களுக்குள் இலங்கைக்கு 147.7 மில்லியன் டாலர்கள் மட்டுமே வெளிநாட்டு நிதி உதவி கிடைத்துள்ளது. ஆனால் சென்ற ஆண்டின் (2008) முதல் ஐந்து மாதத்தில் 1049.1 பில்லியன் டாலர் நிதி உதவி கிடைத்தது. இது நம்ப இயலாத வீழ்ச்சி" (Lanka

Business Online, July 2, 2009). “இலங்கையில் ஏற்றுமதி சென்ற ஆண்டின் முதல் சில மாதங்களுடன் ஒப்பிடும்போது, 19 சதம் வீழ்ச்சியடைந்துள்ளது. இறக்குமதி 2008ன் ஆரம்ப சில மாதங்களுடன் ஒப்பிடும்போது 38 சதம் வீழ்ந்துள்ளது”. (உலக வங்கி அறிக்கை, ஜூலை 15, 2009). இலங்கைக்கான அந்நியச் செலாவணி ஈட்டுவதில் ஆயத்த ஆடை ஏற்றுமதி முக்கிய பங்கு வகிக்கிறது. GSP+ என்கிற சலுகையுடன் இந்த ஏற்றுமதி மேற்கொள்ளப்படுகிறது. மனித உரிமை மீறலைச் சுட்டிக்காட்டி இச்சலுகை மறுக்கப்படும் நிலை இன்று உள்ளது. இது இலங்கைப் பொருளாதாரத்தை மேலும் வீழ்த்தும். சுமார் ஒரு லட்சம் பேருக்கு வேலை இழப்பு ஏற்படும். இந்தத் தகவல்களைத் தொகுத்துத் தரும் உபுல் ஜோசப் ஃபெர்னான்ட் (லங்காதீப, ஜூலை 23, 2009: எங்கள் தேசம், ஆக 1, 2005) இந்த நெருக்கடியிலிருந்து மீள இலங்கை முன் இருக்கும் ஒரே வழி உலக நிதி நிறுவனங்களிடம் கையேந்துவதுதான், அத்தோடு இணைந்த அத்தனை நிபந்தனை களையும் ஏற்பதுதான் என்கிறார்.

இதன் விளைவான சுமைகள் அனைத்தும் மக்கள் மீதே திணிக்கப்பட உள்ளது.

இராணுவவாத அரசியல் பெரிய அளவில் சட்ட ஒழுங்குக் குலைவை ஏற்படுத்தியுள்ளது. உள்ளே விரிவாக ஒரு கட்டுரை உள்ளது. ஆங்காங்கு சிங்களக் காடையர்கள் ஆக்ரமிப்புகளை நடத்துகின்றனர். அம்பாறை தீகவாபி பகுதியில் 701 ஏக்கர் காணியும், வளத்தாப்பட்டி பகுதியில் 500 ஏக்கர் நிலமும் இவ்வாறு சிங்களர்களால் ஆக்ரமிக்கப்பட்டுள்ளது. கிண்ணியா உப்பாறு பகுதியில் 20 சிங்களக் குடும்பங்கள் குடியேற்றப்பட்டுள்ளன. மஸ்கெலியா புனித ஜோசப் தமிழ் மகா வித்யாலயத்திற்கு சொந்தமான விளையாட்டுத் திடலைத் தனியார்கள் கைப்பற்றி இப்போது அந்த இடத்தில் ஒரு மர ஆலை நிறுவப்பட்டுள்ளது. பொருளாதார நெருக்கடியினூடாக அகதிகள் மறுவாழ்வு, தமிழ்ப் பகுதிகளில் மறுகட்டமைப்பு எல்லாம் பெரிய அளவில் பாதிப்பிற்குள்ளாகப் போகின்றன.

இப்படி அம் மக்களின் பிரச்சினைகள் நம் கற்பனைக்கு அப்பாற்பட்டவை. நம்முடைய ஆதரவும் உதவியும் இந்த நோக்கிலிருந்து அமைய வேண்டும். தமிழ்ப் பகுதிகளிலிருந்து இராணுவ நீக்கம் செய்வதற்கு சிங்கள இனவாத அரசு தயாராக இருக்காது என்பதை நாம் ஊகிக்க முடியும். இதற்கு எதிரான சர்வதேச அழுத்தத்தை நாம் கொடுக்க வேண்டும். முல்லைத்

தீவிலிருந்து புலிகளால் அகதிகளாக்கப்பட்டு புத்தளத்தில் தஞ்சம் புகுந்திருந்த முஸ்லிம்கள் மீண்டும் அங்கே குடியேறத் தயங்கு கின்றனர். ஏனெனில் இன்று முல்லைத் தீவு முழுக்க இராணுவ முகாம்கள் உள்ளன. இராணுவமயப்பட்ட அரசியலிலிருந்து ஜனநாயக அரசியலை நோக்கி இலங்கை மாறும் வரை தமிழர்களுக்குப் பிரச்சினை தீரப்போவதில்லை. தமிழர்களுக்கு மட்டுமல்ல சிங்களர்களுக்கும் அது பிரச்சினைதான் என்பதை அவர்கள் உணர வேண்டும். உணர வைக்கும் அரசியல் முயற்சி களை அங்குள்ள இடதுசாரிகளைத் தவிர வேறு யார் செய்ய முடியும்?

இன்ப் பிரச்சினைகளில் இடதுசாரிகள் சரியான நிலைபாடு எடுக்கவில்லை, அதனால் அவர்கள் அழிந்து போனார்கள் என்று எளிதாக அவர்கள் மீது குற்றப் பத்திரிகை வாசிப்பது நமது புலி முகவர்களின் வாடிக்கைகளில் ஒன்று. இனவாதம் தவிர்க்க இயலாமல் அதன் உச்சபட்ச வடிவத்திற்கும், பின்அது இராணுவ வாதத்தற்கும் இட்டுச் செல்லும் என்பதே வரலாறு. இராணுவ வாத அரசியலாக அது உருப்பெறும்போது எல்லாவிதமான அரசியல் செயல்பாடுகளும், மக்கள் போராட்டங்களும், கருத்து மாறுபாடுகளும் (dissent), விமர்சனங்களும் முடிவுக்குக் கொண்டு வரப்படும். இராணுவவாத அரசியலை முன்னெடுப்பது அரசாக இருந்தாலும் சரி, அரசு சாராத அமைப்பாக இருந்தாலும் சரி அங்கே மனித உரிமை அமைப்புகள் செயல்பட முடியாது. கடும் பத்திரிகை தணிக்கையும் ஊடக ஒடுக்குமுறையும் நிலவும். சட்ட மீறிய வடிவங்களில் அடக்குமுறையும் அப்படிச் சட்டம் மீறுபவர்களுக்கு தண்டனை விலக்கும்(impunity) அளிக்கப்படும். இந்த வகையில் புலிகளுக்கும், அடுத்தடுத்து வந்த சிங்கள இனவாத ஆட்சிகளுக்கும்(regimes) எந்த வேறுபாடும் இருந்த தில்லை. இலங்கையில் வடக்கிலும் தெற்கிலும் இடதுசாரி இயக்கங்கள் முடக்கப்பட்டதை நாம் இப்படியும் பார்க்க வேண்டியுள்ளது.

டிராட்ஸ்கியிசக் கட்சியைச் சேர்ந்த பிலிப் குணவர்த்தனேவின் முயற்சியால் கொண்டு வரப்பட்ட 'நெல் விவசாய நிலச் சட்டம் - 1958' குத்தகை விவசாயிகளுக்கும் சிறு விவசாயிகளுக்கும் பெரிய அளவில் பாதுகாப்பு அளித்த ஒன்று. 1979ல் அதை ஊற்றிமூடி விவசாயச் சேவைச் சட்டம் (Agrarian Service Act) கொண்டு வரப்பட்டபோது எதிர்ப்பார் யாருமில்லை. நிலச்சீர்திருத்தம் குறித்து மேலெழுந்து வந்த பேச்சுக்கள் இராணுவவாத அரசியலில் ஒதுக்கித் தள்ளப்பட்டது. உலக வங்கி உதவியுடன் 1980ல்

மாவேலி மின்ஆற்றல் திட்டம் உருவாக்கப்பட்டும், திரிகோணமலையில் இராணுவ தளங்கள் அமைக்கப்பட்டும் மறுகாலனியாதிக்க நடவடிக்கைகள் தீவிரமானபோது எதிர்த்துக் குரல் கொடுக்க அங்கே வாய்ப்பில்லாதிருந்தது. 1970களில் பெருந்தோட்டச் சாகுபடிகள் தேசவுடைமையாக்கப்பட்ட நிகழ்வு முற்போக்கான நடவடிக்கையாக அமையாமல் எப்படி அதுவும் ஒரு இனவாதச் செயல்பாடாகவே அமைந்தது என்பதை உள்ளே ஒரு கட்டுரையில் தொட்டுக் காட்டியுள்ளேன்.

இராணுவ நீக்கம் என்பது வெறுமனே இராணுவத்தைப் பின்வாங்கச் செய்வது மட்டுமல்ல. இராணுவமயப்பட்ட அரசியலிலிருந்து இலங்கை மீட்கப்பட வேண்டும். சட்டத்தின் ஆட்சி அங்கு உருவாவதற்கும், திசநாயகம் முதலான பத்திரிகையாளர்கள் மீதான நடவடிக்கைகள் திரும்பப் பெறப்பட்டு ஊடக உரிமைகள் நிலைநாட்டப்படுவதற்கும், தண்டனை விலக்குக் கலாச்சாரம் (Culture of impunity) முடிவுக்குக் கொண்டுவருவதற்கும் பன்னாட்டு அளவில் அழுத்தம் கொடுக்க வேண்டும்.

ராஜபக்சே அரசு போர் வெற்றியைப் பயன்படுத்தி இலங்கையின் பன்மைத்துவத்தை ஒழிக்கும் முயற்சிக்கு நாம் கடும் எதிர்ப்பைத் தெரிவிக்க வேண்டும். 'ஒரே நாடு ஒரே மக்கள்' முழக்கம் முன்வைக்கப்படுதல் பற்றி முன்பே சொன்னேன். சமீபத்தில் கொழும்பில் பண்டாரநாயகா நினைவு அரங்கில் இலங்கைப் படையின் 60ம் ஆண்டு விழா, கண்காட்சி முதலியவை நடத்தப்பட்டுள்ளன. பவுத்தப் புனித நாளாகிய போயா தினத்தில் இது நடந்துள்ளது. இந்த நேரத்தில் நடைபெற்ற இந்நிகழ்ச்சி கொல்லப்பட்ட சிவிலியன்கள், மேற்கொள்ளப்பட்ட போர்க் குற்றங்கள் ஆகியவற்றை கொண்டாடுவதாகவே அமைந்துள்ளது. சென்ற (2009) செப்டம்பர் 14 அன்று ஜனாதிபதி செயலகத்தில் நடைபெற்ற அரச இலக்கிய விருது வழங்கு விழாவில் தமிழ்-முஸ்லிம் எழுத்தாளர்களுக்கு மட்டும் அவர்கள் வந்திருந்தும் பரிசு வழங்கப்படவில்லை. விண்ணப்பப் படிவங்கள், அரசு அறிவித்தல்கள் அனைத்தும் சிங்களத்திலேயே செய்யப்படுகின்றன. சோதனைச் சாவடிகளில் சிங்களத்தில் மட்டுமே கேள்விகள் கேட்கப்படுகின்றன. சென்ற மார்ச்சில் ஐ.நா. மனித உரிமை ஆணையர், மேயில் ஐ.நா. பொதுச் செயலாளர், சமீபத்தில் ஐ.நா. அவையின் அரசியல் பிரிவுக்கான துணைப் பொதுச் செயலாளர் லின் பாஸ்கோ ஆகியோரின் வருகை, அமெரிக்க செனட்டுக்கு அளிக்கப்பட்டுள்ள இலங்கை இராணுவம் மற்றும் புலிகளின் போர்க் குற்றங்கள் தொடர்பான

அறிக்கை, யுனிசெப் அதிகாரிகள் மற்றும் கனடா நாட்டு பாராளுமன்ற உறுப்பினர் பாப்ரே ஆகியோரைத் திருப்பி அனுப்பியது தொடர்பான கண்டனங்கள் ஆகியவற்றினூடாக இலங்கை அரசுக்குக் கொடுக்கப்பட்டுள்ள அழுத்தத்தையுங்கூட ஒரு தேசிய வெறியைக் கட்டமைப்பதற்கான வாய்ப்பாக ராஜபக்சே ஆட்சி மாற்ற முயல்வதைக் கண்டிக்க வேண்டும். எதிர்க்க வேண்டும்.

இந்தத் திசைகளில் ஈழத் தமிழர்களுக்கு ஆதரவளிப்பது குறித்து நாம் யோசிக்க வேண்டும். மாறாக புலிகளின் சொத்துக்களைப் பகிர்ந்து கொள்வது, வருமானத்தை யார் சுருட்டுவது என்கிற போட்டியினூடாக மேற்கிளம்பும் நாடு கடந்த தமிழ் ஈழ அரசு முதலான அபத்தக் கோரிக்கைகளை ஆதரிப்பது என்கிற ரீதியில் நாம் தொடர்ந்து தவறுகளைச் செய்யலாகாது.

நான் மீண்டும் நமது உள்ளூர் புலி ஆதரவாளர்களுக்கு சொல்லிக் கொள்வது இதுதான். மிகப்பெரிய அளவில் ஈழப் போராட்ட ஆதரவு அலை ஒன்றைக் கட்டியமைத்ததற்காக நீங்கள் பாராட்டுக்குரியவர்கள். ஆனால் விமர்சனமற்ற புலி ஆதரவை மேற்கொண்டதாலும், உலக அளவில் ஏற்பட்டுள்ள மாற்றங் களைக் கணக்கில் கொள்ளாததனாலும் உங்கள் செயற்பாடுகள் அனைத்தும் எதிர்பார்த்த பலனை ஈட்டவில்லை. உங்கள் அறிவுரைகள் யாவும் தவறான விளைவுகளுக்கே இட்டுச் சென்றன என்பதைத் தயவுசெய்து மறந்துவிடாதீர்கள்.

எப்போது இராணுவவாதம் தமிழர்கள் மத்தியில் விமர்சனங் களையும், கருத்து வேறுபாடுகளையும் அழிக்கத் தொடங்கி யதோ அப்போதே நாம் புலிகளை நீங்கள் அழிவை நோக்கிக் காலடி எடுத்து வைக்கிறீர்கள் என எச்சரித்திருக்க வேண்டும். சக இயக்கங்களை அழித்து தாமே தமிழர்களின் ஒற்றைப் பிரதிநிதி எனச் சொல்ல நேர்ந்ததை நாம் கண்டித்திருக்க வேண்டும். நார்வே அரசு முன்கை எடுத்த பேச்சு வார்த்தை, Conflict Resolution என்கிற பெயரில் புலிகளை மட்டும் தமிழர்களின் பிரதிநிதியாக ஏற்றுக் கொண்டதை நாம் பெருமையாகப் பார்த்தோம். இப்போதேனும் நாம் அதை விமர்சனக் கண்ணோட்டத்துடன் பார்க்க வேண்டாமா? தமிழர்களின் எல்லாத் தரப்பினரும் பங்கு பெற்றிருந்துதால் அப்பேச்சுவார்த்தை இடையில் நிறுத்தப்பட் டிருக்குமா? அப்படியே புலிகள் மட்டும் பங்குபெற்ற பேச்சு வார்த்தையில் ஏதேனும் ஓர் முடிவு ஏற்பட்டிருந்தாலும்கூட அது எப்படி எல்லாத் தமிழ் மக்களுக்கும் ஏற்ற முடிவாக இருந்திருக்கும்?

தமிழ் ஈழப் பிரச்சினையில் தொண்டு நிறுவனங்கள் புகுந்து குட்டை குழப்பும் நிலை குறித்தும் நாம் எச்சரிக்கையாகவே இருப்பது அவசியம். இரு மாதங்களுக்குமுன் திருவனந்தபுரத்தில் பல லட்சம் டாலர் செலவில் நடத்தப்பட்ட மாநாடு, இன்னும் இதுபோன்று பெரும் நிதிப் பின்புலத்துடன் நடத்தப்படும் பல மாநாடுகளின் உள்நோக்கங்கள் குறித்த ஆய்வு நமக்குத் தேவை.

இனி ஏதேனும் பேச்சுவார்த்தை சாத்தியமானால், அதில் தமிழ் மக்களின் சகல தரப்பினரும் அதிக அளவில் பெண் பிரதிநிதிகளும் பங்கு பெற வேண்டும். தமிழ் மக்களின் சகல பிரிவினரிரது ஏற்பையும் பெற்ற ஒரு அரசியல் தீர்வை நோக்கி சிங்கள அரசுக்குப் பன்னாட்டு அளவில் அழுத்தம் கொடுக்கவும் முயற்சிக்க வேண்டும்.

இந்தப் 'பன்னாடு' என்பது குறித்தும் நாம் சிலவற்றைத் தெளிவாக்கிக் கொள்வது நல்லது. பன்னாட்டு ஆதரவு என்றால் ஏதோ அமெரிக்கா மற்றும் ஐரோப்பிய ஒன்றிய நாடுகள் என்று மட்டுமே புலிகளும் சரி அவர்களது இன்றைய ஆதரவாளர்களும் பார்க்கிறார்கள். இந்தியாவிலும் கூட அவர்கள் இந்திய அரசையும் இங்குள்ள அவர்களின் முகவர்களையும் மட்டுமே நம்பினார்கள். அதே நேரத்தில் நேபாள மாவோயிஸ்ட்களின் அணுகல் முறையை நாம் ஒப்பிட்டுப் பார்ப்பது நல்லது. அவர்கள் இங்குள்ள இடதுசாரிகளையும் முற்போக்கு இயக்கங்களையும் நம்பினார்கள். கஜூரல் என்கிற முக்கிய தலைவர் சென்னைச் சிறையிலடைக்கப்பட்டுக் கிடந்தபோது கூட இங்குள்ள சிறிய இடதுசாரி இயக்கங்களே அவரின் விடுதலைக்கு முயற்சித்தன. ஆனால் இறுதிக்கட்டப் போரின் போதும், அதற்குப் பின்னும் கூட புலிகளது சர்வதேச 'லாபியிங்' ஹில்லரி கிளிண்டனை நோக்கியும் டேவிட் மிலிபாண்டை நோக்கியுமே அமைந்தது. என்றைக்கும் அவர்கள் கியூபாவையோ, வியட்நாமையோ இதர லத்தீன் அமெரிக்க நாடுகளையோ மதித்தது கிடையாது. அவர்களைச் சந்தித்துத் தமது அரசியல் நியாயங்களைப் பேசியதும் கிடையாது. புலிகளின் வலதுசாரி அணுகல் முறையின் விளைவாக உலகெங்கிலுமுள்ள இடதுசாரிகள் மத்தியில் அவர்கள் பற்றிய பாசிச/பயங்கரவாத பிம்பமே மிகுந்திருந்தது என்பதை Kafila போன்ற இணையத் தளங்களைத் தொடர்ந்து வாசிப்போர் புரிந்து கொண்டிருக்க இயலும். இதைப் புரிந்து கொள்ளாததன் விளைவாகவே ராஜபக்சேவுக்கு எதிராக ஐ.நா. அவையில் கொண்டு வரப்பட்ட தீர்மானத்தை எதிர்த்து கியூபா, வியட்நாம் முதலான நாடுகள் வாக்களித்தபோது நமது புலி முகவர்கள்

அதிர்ந்து போனார்கள். பயங்கரவாதத்தை வீழ்த்திய மாவீரனாக ராஜபக்சேவை சாவேஸ் வரவேற்றபோது நொந்து போனார்கள். சேகுவேரா, காஸ்ட்ரோ படங்களை எல்லாம் இனிமே நம்ம துண்டறிக்கைகளில் போடாதீங்கப்பா என சத்தம் போட்டார்கள்.

இதிலும்கூட இவர்களின் அணுகல்முறைகளில் இரு தவறுகள் உள்ளன. இதுவரை இந்த நாடுகளை இவர்கள் கிஞ்சித்தும் கண்டுகொள்ளாதது ஒன்று. இன்னொன்று, இன்றைய உலக அரசியலில் இந்த நாடுகளின் இடம், தன்மை ஆகியவை குறித்த தவறான மதிப்பீடுகளை இவர்கள் கொண்டிருந்தது. சாவேஸ், காஸ்ட்ரோ போன்றோரின் தொடர்ந்த அமெரிக்க எதிர்ப்பு நமது மதிப்பிற் குரிய ஒன்றுதான். எனினும் சாவேஸ் உள்நாட்டில் தனது அதிகாரத்தைத் தக்கவைக்க மேற்கொண்டுள்ள முயற்சிகளை நாம் மறந்துவிடக் கூடாது. வியட்நாம் லாவோஸையும், கியூபா அங்கோலாவையும் ஆக்கிரமித்திருந்த நாடுகள் என்பதையும் கூட நாம் மறந்துவிடலாகாது. கியூபா போன்ற நாடுகளை ரொம்பவும் romanticise பண்ணி பார்க்கும் தவறு நம்மிடம் உள்ளது. அதை ஏதோ எந்தப் பிரச்சினையும் அற்ற சோசலிச சொர்க்க பூமியாகப் பார்க்கிறோம். பல அம்சங்களில் இந்தியாவைவிட அங்கு உரிமைகள் மட்டுமல்லாது அடிப்படை வசதிகளும்கூட இல்லாத நாடாக உள்ளது என்பதை எல்லாம் நாம் பார்க்கத் தவறுகிறோம். அதேபோல ஜப்பான், சீனா போன்ற அரசுகளின் வணிக நோக்கங்கள், முதலீட்டு முன்னுரிமைகள், பாதுகாப்பு ஒப்பந்தங் கள் ஆகியனவே அவற்றின் அயலுறவுகளை தீர்மானிக்கிறது என்பதையும் நாம் நினைவில் நிறுத்திக் கொள்வது நல்லது.

சீனாவும் பாகிஸ்தானும் இலங்கை அரசுக்கு ஆதரவாக உள்ளனவே எனப் புலம்பிப் பயனில்லை. அவை அப்படித்தான் நடந்து கொள்ளும். சீனா அண்டை நாட்டு அரசுகள் அனைத் துடனும் சுமூக உறவைப் பேணுகிறது. அண்டை நாடுகளின் சந்தைகளே அதன் முக்கிய இலக்கு. அண்டை நாடுகளில் முதலீடு செய்யவும் துடிக்கிறது. இந்தியாவோ தனது அப்பட்டமான விரிவாக்கச் செயற்பாடுகள், அமெரிக்க ஆதரவு நிலைபாடு ஆகியவற்றின் விளைவாக அண்டை நாட்டு அரசுகளோடு மட்டுமின்றி மக்களோடும் அதற்குச் சுமூக உறவில்லை. தனது முதலீடுகளையும் சந்தையையும் சீனப் போட்டியிலிருந்து காப்பாற்றிக் கொள்வதே அதன் குறிக்கோளாக இருக்கிறது.

சீனாவையும் பாகிஸ்தானையும் எதிர்கொள்ள இந்தியா தயாராக வேண்டும் எனவும், இலங்கைப் பிரச்சினையில் இந்தியா தோற்றுவிட்டது எனவும், தனி ஈழம் அமைவதே இந்தியாவிற்குப்

பாதுகாப்பு எனவும் அர்த்தமில்லாமல் கண்டதைப் பேசி இந்தியாவை உசுப்பிவிடும் முயற்சிகளும் ஒரு பக்கம் நடக்கின் றன. இதெல்லாம் படு அபத்தம். இலங்கையில் இந்தியாவின் பொருளியல் நலன்கள், முதலீடுகள் ஆகியவை குறித்த சரியான கணிப்பின்மையின் விளைவே இந்தியாவை உசுப்பி விட இயலும் என்கிற எதிர்பார்ப்பு. உலக அரசியலில் கடந்த பத்தாண்டுகளில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள் பற்றிய கணிப்பின்மை யும் இதில் முக்கிய பங்கு வகிக்கிறது. இது 1970கள் அல்ல. வங்கதேச அரசியலை நாம் இன்னொரு முறை திருப்பிச் செய்ய முடியாது. இலங்கைக்கு அரசியல்ரீதியான அழுத்தத்தை அளிக்க வேண்டும் என்பதைத் தவிர எந்த வகையில் இன்று இந்தியா இராணுவ நடவடிக்கையை மேற்கொள்ள இயலும்? அப்படி மேற்கொண்டால் அதன் விளைவு என்னவாக இருக்கும்?

சீன எதிர்ப்பு பேசுவதன் மூலம் இந்திய தேசிய வெறியைக் கட்டமைக்க மட்டுமே முடியும். இந்திய அரசின் நோக்கமும் அதுவாகவே இருக்கும். தமிழகத்தில் பி.யூ.சி.எல். அமைப்பைச் சேர்ந்த வழக்குரைஞர் சுரேஷ் போன்றோர் இத்தகைய சீன எதிர்ப்பில் முன்னிற்பதைக் கவனிக்கலாம். இரண்டு மாதங் களுக்கு முன் அவர் பெங்களூரில் ஏராளமான செலவுடன் நடத்திய ஈழப் பிரச்சினை தொடர்பான மாநாட்டில் இத்தகைய சீன எதிர்ப்பு முன்னிலைப்படுத்தப்பட்டது. முன்னாள் இந்திய அயலுறவுத் துறை உயர் அதிகாரி ஏ.பி.வெங்கடேசன் அதில் கலந்துகொண்டு பேசியது குறிப்பிடத்தக்கது.

சீனா, பாகிஸ்தான், இலங்கை ஆகிய அண்டை நாடுகளுடன் போருக்குத் தயாராகுமாறு கொம்பு சீவும் பணியை இந்திய ஊடகங்களும் செய்து வருகின்றன. இதுகுறித்து விரிவாக எழுத இது நேரமன்று. ஒன்று முக்கியம். அத்தகைய நிலை ஏற்பட்டால் அது மிகப்பெரிய அழிவுகளை இந்திய மக்கள் மீது சுமத்துவதற்கு வழிவகுக்கும் என்பதோடு 'பாரத பூமி பழம் பெரும் பூமி, நீரதன் புதல்வன் இந்நினைவகற்றாதீர்' என்பது போல தேசிய வெறி ஒன்றை ஊட்டவும், கடும் உள்நாட்டு அடக்குமுறையை மேற்கொள்ளவுமே அது இட்டுச் செல்லும். நிபந்தனையற்ற பேச்சுவார்த்தைகள் மட்டுமே அயலுறவுகளில் மக்களுக்குச் சுமையற்ற தீர்வுகளை உருவாக்கும்.

கச்சத்தீவு பிரச்சினையையும் கூட நாம் இந்தக் கோணத்தி லிருந்துதான் யோசிக்க முடியும். கச்சத்தீவு நமக்குச் சொந்தமானது. அதை இலங்கைக்கு அளித்திருக்க வேண்டியதில்லை என்பதெல் லாம் சரி. இன்று மீண்டும் அப்பிரச்சினையைக் கிளப்புவதன்

நோக்கமென்ன? மீனவர்களின் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு கச்சத்தீவை மீட்பதுதான் ஒரே வழி என்பது எப்படிச் சரியாக இருக்கும். மீனவர் சமுதாயத்தைச் சேர்ந்தவரும் மீனவர் பிரச் சினைகளில் மிகுந்த அக்கறை காட்டுபவருமான வழக்குரைஞர் லிங்கன் ஒருமுறை கச்சத்தீவைத் திரும்பப் பெறுவது எங்களுக்கு முக்கியமில்லை என்றார். தூத்துக்குடிப் பகுதி மீனவர்களை ஒருங்குதிரட்டும் ஒரு ஆலோசனைக் கூட்டத்திற்கு அருட் பணியாளர் எக்ஸ்.டி.செல்லராசு அவர்கள் சில மாதங்களுக்கு முன் அழைத்தபோது இதுதொடர்பாக நான் லிங்கன், பாரதி ஆகியோரிடம் பேசினேன். மீனவர் பிரச்சினைகள் தொடர்பான ஆவணங்களையும் சேகரித்தேன். ஒருகாலத்தில் சிறு படகுகளை வைத்து மீன் பிடித்தபோது வலைகளைக் காய வைக்க மட்டுமே பயன்பட்டது கச்சத்தீவு. இப்போது அத்தகைய வலைகளோ படகுகளோ பயன்பாட்டில் இல்லை என்பது மீனவர்களில் ஒரு தரப்பினரின் கருத்துக்களில் ஒன்றாக உள்ளது. பிரச்சினை இதுதான். அந்தப் பகுதியில் நமது கடற்பரப்பில் மீன் வளம் குறைவு. இலங்கைக் கடற்பரப்பிலோ மீன் வளம் அதிகம். தவிர்க்க இயலாமல் நமதுமீனவர்கள் அந்தப் பகுதியில் மீன் பிடிக்கச் சென்றாக வேண்டியுள்ளது. கடந்த கால் நூற்றாண்டில் நிலவிய போர்ச்சூழல், இலங்கை இராணுவத்திடம் வளர்ந்திருந்த இந்திய வெறுப்பு ஆகியன நமது மீனவர்கள் மீதான தாக்குத லுக்குக் காரணமாக இருந்துள்ளன. இலங்கைப் படையினர் அத்துமீறியுள்ளனர். 400க்கும் மேற்பட்ட தமிழக மீனவர்கள் கொல்லப்பட்டுள்ளனர்.

இதை எப்படி நிறுத்துவது? எப்படி முடிவுக்குக் கொண்டு வருவது? கச்சத்தீவை திரும்பப் பெற்றாலோ அல்லது தா.பாண்டியன், டி. ராஜா முதலானோர் சொல்வது போல தமிழக மீனவர்களுக்கு ஆயுதம் கொடுத்தாலோ பிரச்சினை தீர்ந்து விடுமா?

பிரச்சினைக்கான ஒரே தீர்வு பேச்சுவார்த்தைகளும் அரசியல் அழுத்தமும்தான். நம் பகுதியில் மீன் வளம் குறைவு. அவர்கள் பகுதியில் நாம் மீன் பிடிப்பதற்கு அங்குள்ள தமிழ் மீனவர்களின் எதிர்ப்பும் உள்ளது. எனினும் நமக்குப் பாரம்பரிய உரிமைகள் உள்ளன. கச்சத்தீவு ஒப்பந்தத்திலும் இது குறித்து உள்ளது. இன்று போர் முடிவடைந்துவிட்டது. பாதுகாப்பு தொடர்பான காரணங் களைச் சொல்லி இனியும் இலங்கைப் படைகள் அத்துமீறக் கூடாது என்கிற நோக்கில் பேச்சு வார்த்தைகள் நடத்துவது அவசியம்.

பொதுவாக கடற் பகுதிகள் எல்லாவற்றிலும் இத்தகைய பிரச்சினைகள் உள்ளன. சர்வதேச அளவில் இது குறித்து சில நல்ல ஒப்பந்தங்கள் உள்ளன. சில புதிய வகைத் தீர்வுகளையும் கூட இது தொடர்பான வல்லுனர்கள் வலியுறுத்துகின்றனர். கடல் எல்லைகளை இறுக்கமாக வரையறுக்கக் கூடாது. சொல்லப் போனால் எந்த எல்லைகளையும் இறுக்கமாக வரையறுக்கக் கூடாது. குறிப்பாக பயங்கரவாதம் தவிர்த்த சூழல்களில் நாட்டெல்லைகள் ஓரளவு ஊடுருவத் தக்கதாகவே (porous) அமைய வேண்டும். எல்லையோர மக்கள் பொதுவாக ஒற்றை இன அடையாளத்துடன் இருப்பதில்லை. எல்லையோர மக்களில் பலருக்குத் தாம் எந்த நாட்டைச் சேர்ந்தவர் என்கிற ஐயம்கூட பல நேரங்களில் ஏற்படும் (பார்க்க : மண்டோவின் 'டோபா டேக்சிங்' கதை). கார்கில் எல்லையிலிருப்பவர்கள் அத்தகைய நிலையில் உள்ளது குறித்து கார்கில் போரின்போது சில ஆய்வாளர்கள் குறிப்பிட்டது நினைவுக்குரியது. எனவே இதுபோன்ற பிரச்சினைகளை எதிர்கொள்ள சில நேரங்களில் 'தேசியத்திற்கு அப்பாற்பட்ட ஆளுகை முறைகளை' (Non Nationalistic Mode of Governance) நாம் யோசிக்கலாம். இரு நாடுகள், தேவையானால் மூன்றாவது நாடொன்றும் இணைந்த கூட்டு மேற்பார்வைக்கு இப்பகுதிகளை உட்படுத்தலாம். காஷ்மீர் பிரச்சினையில்கூட கிளிண்டன், முஷாரப் போன்றோர் இத்தகைய சில தீர்வுகளை முன்வைத்தது சிந்திக்கத்தக்கது.

வங்கக்கடல், இந்தியப் பெருங்கடல், அரபிக்கடல் ஆகியவற்றின் கடல் வளங்கள் குறைந்தபட்சம் இந்தியா, பாகிஸ்தான், இலங்கை, வங்கதேசம் ஆகிய நான்கு நாடுகளுக்கிடையே பிரித்துக் கொள்ள வேண்டிய நிலையில் உள்ளன. பாகிஸ்தான், மாலத்தீவுகள், இலங்கை, இந்தோனேஷியா, தாய்லாந்து, மியான்மர், வங்கதேசம் ஆகிய நாடுகளிடையே கடல் எல்லைகள் மறுவரையறை செய்யப்பட வேண்டிய நிலை இன்றுள்ளது. சரியாகச் சொல்வதானால் 'எல்லை நீக்கம்'(de-bordering) செய்யப்பட வேண்டியுள்ளது. பிற நாடுகளைக் காட்டிலும் பாகிஸ்தான், வங்கதேசம், இலங்கை ஆகிய நாடுகளுக்கிடையே பிரச்சினைகள் அதிகமுள்ளன. சென்ற அக்டோபர் 9, (2009) அன்று இது தொடர்பாக வங்கதேசம் ஐ.நா.அவையில் புகார் செய்துள்ளது. 'கடற்சட்டம் தொடர்பான ஐ.நா. உடன்பாட்டின்' (UNCLOS) கீழ் இப்புகார் செய்யப்பட்டுள்ளது. கடல் எல்லையை நில எல்லை போல அவ்வளவு எளிதாக வரையறுத்துவிட இயலாது. இறையாண்மையுள்ள அரசின் அதிகார எல்லை என்கிற

நிலையிலிருந்து இதைப் பார்க்கக் கூடாது. இந்த எல்லை வரையறை என்பது இலட்சக்கணக்கான மீனவர்களின் பொருளாதார, கலாச்சார வாழ்வுடன் தொடர்புடைய விஷயம். எங்கோ தொலைவிலிருக்கிற அரசு அதிகாரிகள் ஆலோசனையின் பேரில் அமைச்சர்கள் மேற்கொள்ளும் முடிவுகளின் அடிப்படையில் இது அமையக் கூடாது. பேச்சுவார்த்தைகளில் தொடர்புடைய நாடுகளின் மீனவப் பிரதிநிதிகள் முக்கிய பங்கு வகிக்க வேண்டும். கடல் எல்லைகளை வரையறுத்துப் பிரிப்பது (delimit) என்பதற்குப் பதிலாக இவற்றை ஒருங்கிணைத்து (integrate) இரு பகுதியினருக்கும் பலனுடையதாக ஆக்குவதே சரியான தீர்வாக அமைய முடியும். தனித்தனி நாடுகளின் நலன்கள் என்பதாக வன்றி தொடர்புடைய நாடுகளை உள்ளடக்கிய மண்டலம் (Region) என்பதாகப் புரிந்து இப்பிரச்சினை விவாதிக்கப்படுதலும், தீர்க்கப்படுதலும் அவசியம்.

இதெல்லாம் உடனடிச் சாத்தியமில்லை என்றாலுங்கூட பேச்சுவார்த்தை, அரசியல் அழுத்தம் ஆகியனவே உடனடித் தேவையாக உள்ளன. நமது மீனவர்களின் பிரச்சினைகளிலுங்கூட இத்தகைய அழுத்தங்கள் கொடுக்கப்பட்டபின் கடந்த ஓராண்டில் துப்பாக்கிச் சூடுகள் குறைந்துள்ளதை நாம் கவனத்தில் கொள்வது அவசியம். முற்றிலுமாக பிரச்சினை இல்லை என நான் சொல்லவில்லை.

துப்பாக்கி கொடுத்தால் என்னவாகும். இலங்கை மீனவர்களுடன் மட்டுமா நமக்குப் பிரச்சினை? பழவேற்காட்டில் ஆந்திர மீனவர்களுடன் நமக்குப் பிரச்சினை உள்ளது. புதுவையில் வீராம்பட்டிணம் மீனவர்களுக்கும் தேவநாம்பட்டினம் மீனவர்களுக்கும் இடையில் கடலுக்குள் நாட்டு வெடிகுண்டுச் சண்டை நடப்பதுண்டு. இந்நிலையில் மீனவர்களிடம் ஆயுதம் வழங்குவது எங்கு கொண்டுபோய்விடும்? இப்படிப் பிரச்சினையுள்ளவர்களுக்கெல்லாம் ஆயுதங்கள் கொடுப்பதென்றால் தலித்களுக்குக் கொடுக்க வேண்டாமா? முஸ்லிம்களுக்குக் கொடுக்க வேண்டாமா? பிரிக்கால் போன்ற தொழிற்சாலைகளில் தொழிலாளர்களுக்குக் கொடுக்க வேண்டாமா? ஏன் இவர்களுக்கெல்லாம் ஆயுதம் கொடுக்கச் சொல்லி தா.பா. கேட்கவில்லை. மீனவர்களுக்கு ஆயுதம் கொடுக்கிறோம் என்றே வைத்துக் கொள்வோம். பயிற்சி வாய்ந்த, நுணுக்க ஆயுதங்களை வைத்திருக்கும் கப்பற் படையுடன் அவர்கள் மோத இயலுமா? ராமேஸ்வரத்திலுள்ள மீனவர் அமைப்பு ஒன்று ஆயுதம் அளிப்பது தமக்குத் தீர்வல்ல எனக் கூறியுள்ளதும் சிந்திக்கத்தக்கது.

மீனவர்களுக்கு இது மட்டுமே பிரச்சினை என்பது போல திடீரென மீனவர் பிரச்சினையில் அக்கறை காட்டும் தமிழகத் தேசியவாதிகள் பேசுகின்றனர். காஷ்மீர் பிரச்சினையில் அக்கறை காட்டுகிறீர்கள், ஏன் மீனவர் பிரச்சினையில் காட்டுவதில்லை என்று ஒரு கூட்டத்தில் வழக்குரைஞர் புகழேந்தி கேட்டார். என்ன காஷ்மீர் பிரச்சினையில் தொடர்ந்து நாங்கள் அக்கறை காட்டி அதை மட்டுமே பேசி வருகிறோம்? இந்தப் பிரச்சினைகளை மட்டும் பேசவில்லை என்கிறீர்கள்? ஒரு அகில இந்திய உண்மை அறியும் குழுவில் பங்கு பெற்றதை ஒட்டி ஒரு நூல் எழுதி வெளியிட்டோம். வேறென்ன செய்துவிட்டோம்? சுனாமி வந்தபோது மீனவர்களுக்காகவும் இப்படி ஒரு அறிக்கையை வெளியிட்டோம். தலித் பிரச்சினைகளை ஏராளமாக எடுத்து எங்களால் முடிந்ததைச் செய்து கொண்டுள்ளோம். அந்த வழக்குரைஞர் கேட்டதை நான் இப்படித்தான் புரிந்து கொள்கிறேன். ஏன் முஸ்லிம்கள் பிரச்சினையைப் பேசுகிறீர்கள், எங்களோடு சேர்ந்த எங்கள் மொழியில் ஈழப் பிரச்சினையை மட்டும் பேசவில்லை என்பதுதான். இலங்கைக்குள் மனித உரிமை ஆரவலர்கள் என்கிற அடையாளத்துடன் யாரும் நுழைய முடியாது என்பதுதான் பிரச்சினை. உண்மையில் மறைந்த டாக்டர் பாலகோபாலுடன் லால்கருக்கும் வன்னிக்கும் செல்ல நாங்கள் முயற்சித்துக் கொண்டிருந்தோம்.

புலி முகவர்களாகிய நீங்கள் எவ்வளவு நாட்களாக மீனவர்கள் பிரச்சினையைப் பேசுகிறீர்கள்? ஏன் நீங்கள் தலித்கள் பிரச்சினைகளுக்கு உரிய முக்கியத்துவம் அளித்ததில்லை? மீனவர்களுக்குக் கச்சத்தீவு மட்டுமா பிரச்சினை? கரையோரப் பாதுகாப்பு மண்டலம் என்கிற பெயரில் கடற்கரையிலிருந்து அவர்களை விரட்டும் திட்டம் ஒரு பக்கம்; கல்பாக்கம் அனல் மின் நிலையம், ஸ்ரீஹரிகோட்டா ஏவுகணைத் தளம் ஆகியவற்றை சாக்காக வைத்து மீனவர்கள் மீது மேற்கொள்ளப்படும் கெடுபிடி, 7000 கி.மீ. நீளம் கடற்கரையுள்ள இந் நாட்டில் மத்திய அமைச்சரவையில் இதுவரை மீனவர் நலத்துறை ஏற்படுத்தாத அலட்சியம், பெரும்பாலும் கடற்கரை சார்ந்து மீன் பிடிக்கும் நம் நாட்டு மீனவர்களின் தொழிலை அழிக்கும் வண்ணம் துறைமுகம் சார்ந்து பெரிய கப்பல்களில் மீன் பிடிக்கும் அனுமதியை கார்ப்பரேட்களுக்கும் வெளிநாட்டு நிறுவனங்களுக்கும் அளிக்கும் ஆபத்து, கடற்கரை வழியான பாகிஸ்தான் தாக்குதல் மற்றும் இந்து மகா சமுத்திரப் போர்நிலை முக்கியத்துவம் முதலான காரணங்களைச் சொல்லி மேற்கொள்ளப் போகும் கண்காணிப்புகள் சலுகை

விலையில் 'டீசல்' கொடுக்க வேண்டும், புயல் மற்றும் மீன் செறிவு குறித்து ஆய்வு செய்து தகவலளிக்க வேண்டும், மண்டல் அறிக்கையில் கூறியுள்ளது போல் மீனவர்களைப் பழங்குடிகளாக அறிவிக்க வேண்டும் முதலான மீனவர்களின் கோரிக்கைகள் அலட்சியம் செய்யப்படுதல் இவை குறித்தெல்லாம் நமது புலி முகவர்கள் பேசியதுண்டா? உங்கள் நோக்கம் மீனவர் நலனல்ல. இதை வைத்துக்கொண்டு உங்கள் சொந்த அரசியலை முன்னெடுக்கும் தந்திரம் மட்டுமே இது. சென்ற நவம்பர் 16 (2009) அன்று தமிழக மீனவர்கள் ஒரு நாள் வேலை நிறுத்தம் செய்துள்ளனர். கச்சத்தீவு கோரிக்கை அதிலில்லை. மாறாக இலங்கை அரசுடன் பேச்சுவார்த்தை மூலம் மீன்பிடிப்பு தொடர்பான ஒப்பந்தம் செய்து கொள்ளுதல் மற்றும் பாதுகாப்பு முதலான கோரிக்கைகள் மட்டுமே அதில் வைக்கப்பட்டுள்ளன. இந்தப் போராட்டத்தில் ஏன் புகழேந்தி முதலானவர்கள் முன் நிற்கவில்லை. உண்மையிலேயே மீனவர்களுக்காகத்தான் மீனவர்களை ஆதரிக்கிறார்கள் என்றால் இதையும் ஆதரித்திருக்க வேண்டுமே?

எல்லாப் பிரச்சினைகளையும் நாம் நமது உடனடி அரசியல் லாபம் கருதி மட்டுமே பார்க்கலாகாது. கூட்டம் சேர்ப்பதற்காக மட்டுமே முஸ்லிம், மீனவர் பிரச்சினைகளைப் பேசவும் கூடாது. தவிரவும் இது போன்ற பிரச்சினைகளில் நமது நோக்கம் எப்படியேனும் மக்களின் துயரை நீக்குவதுதான். இன்றைய சூழல், என்ன சாத்தியம், மக்களின் எதிர்பார்ப்பு என்ன, தயார் நிலை என்ன என்பது குறித்து கரிசனம் நமக்குத் தேவை.

இந்தத் தொகுப்பிலுள்ள புதுவிசைக் கட்டுரை குறித்து இணையத் தளங்களில் ஏகப்பட்ட அவதூறுகள் பேசப்பட்டன. பிரச்சினையைத் திசை திருப்பும் வேலையும் நடந்தது. நான் அதில் சொல்லியிருந்த அத்தனை செய்திகளும் உண்மையானவை. இராணுவ வாகனத் தாக்குதல் பற்றி நான் எழுதியது ரொம்பவும் பெரிதுபடுத்தப்பட்டது. அதில் பங்குபெற்ற தலைவர்கள், மனித உரிமை ஆர்வலர்கள் மீது எனக்கு மிக்க மரியாதை உண்டு. அவர்கள் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு வந்தார்கள் என நான் கேலி செய்யவுமில்லை. ஒருவேளை நான் அந்தக் குழுவில் இருந்தாலும்கூட தந்திரோபாயம் கருதி அப்படிச் செய்திருக்கக் கூடும். பிரச்சினை அதுவல்ல. உண்மையிலேயே அந்த வாகனங்கள் இலங்கை அரசபடைக்கு ஆயுதங்கள் ஏற்றிச் சென்றவைதானா என்கிற உண்மை மிகவும் முக்கியம். போராட்டத்தில் பங்கு பெற்றவர்களிடம் நாம் என்ன செய்யப் போகிறோம் என்பது குறித்து விளக்கி அவர்களின் ஒப்புதலைப்

பெற்றோமா? ஒரு மனித உரிமை அமைப்பின் எல்லை எதுவரை? என்பது போன்ற கேள்விகளை நான் விவாதத்திற்கு முன் வைத்தேன். ஆதாரமற்ற செய்திகள் நிறையப் பரப்பப்படுவது குறித்தும், அதனடிப்படையில் மேற்கொள்ளப்படும் அணி திரட்டல் எந்த அளவிற்குப் பயன்படும் என்பது குறித்தும் அதில் பேசியிருந்தேன். அந்த வாகனம் இலங்கைக்கு ஆயுதங்களை ஏற்றிச் சென்ற வாகனமல்ல. உண்மையல்லாத ஒன்றின் அடிப்படையில் ஒரு போராட்டம் நடத்தக் கூடாது. அதில் மனித உரிமை அமைப்பினர் கலந்து கொள்ளக் கூடாது என நான் உறுதியாக நம்புகிறேன். இதை ஆரோக்கியமான தளத்தில் விவாதமாகக் கொண்டு சென்றிருந்தால் எல்லோருக்கும் பயனுடையதாய் இருந்திருக்கும். துரதிர்ஷ்டவசமாக தமிழ்ச் சூழல் அப்படியில்லை.

கடைசியாக ஒன்று. தமிழகத்தில் அகதி முகாம்களில் வதிகிற ஈழ அகதிகள் குறித்தும் நமது புலி முகவர்கள் பேசமாட்டார்கள். இரண்டாண்டுகட்கு முன் தோழர் கோ. சுகுமாரன் ஏற்பாடு செய்திருந்த உண்மை அறியும் குழு ஒன்றில் பங்கேற்று மண்டபம் முகாம் உட்பட 11 முகாம்களை நேரடியாக ஆய்வு செய்து நாங்கள் அளித்த அறிக்கை முக்கியமான ஒன்று. அன்றைய சூழலில் மண்டபம் முகாமிற்குள் சென்று பார்த்து அளிக்கப்பட்ட அறிக்கை எங்களுடையதுதான். முகாம்களில் உள்ள அனைத்துப் பிரச்சினைகளையும் நாங்கள் விரிவாக ஆய்வு செய்திருந்தோம். பின்னர் தமிழக அரசு அவர்களுக்கு அளித்து வந்த மாதாந்திர உதவித் தொகையை இரட்டிப்பாக்கியது.

இன்று தமிழகத்திலுள்ள ஈழ அகதிகளுக்காகத் தமிழக அரசு 100 கோடி ரூபாய் ஒதுக்கி இருப்பது வரவேற்கத்தக்கது. அவர்களுக்கு இரட்டைக் குடியுரிமை அளிப்பது குறித்து கருணாநிதி பேசியுள்ளதும் வரவேற்கத்தக்கதே. கருணாநிதி கோருகிறார் என்பதற்காகவே நாம் அதை எதிர்க்க வேண்டிய தில்லை. இன்று 93 நாடுகள் இரட்டைக் குடியுரிமை அளித்துள்ளன. இந்தியாவும் அதிலொன்று. அமெரிக்காவிலும் பிற நாடுகளிலும் 'செட்டில்' ஆகியுள்ள 'என்.ஆர்.ஐ.'கள் இந்தியாவில் முதலீடு செய்வதற்கு மட்டுமே இன்று அந்த உரிமை பயன்படுத்தப்பட்டு வருகிறது. எல்லாவற்றையும் இழந்து இருபதாண்டுகளாக இங்கேயே வாழ நேர்ந்துவிட்ட அம்மக்க ளுக்கு இவ் உரிமை அளிக்கப்பட்டால் அது அவர்களின் அடிப்படையான வாழ்வுரிமையாக அமையும்.

20 ஆண்டுகள் என்பது ஒரு நீண்ட கால கட்டம். பலர் இங்கே வந்தபின் திருமணம் செய்து, குழந்தைகள் பெற்று, அந்தப் பிள்ளைகள் இன்று கல்லூரிப் படிப்பளவிற்கு வந்துள்ளனர். குடியுரிமை இல்லாததால் அவர்களுக்குச் சாதிச் சான்றிதழ் முதலியன கொடுக்கப்படுவதில்லை. ஓட்டுநர் உரிமம் முதலியன வும் பெற முடிவதில்லை. இதைச் சாக்காக வைத்துக் கொண்டு நம்மூர் காவல் துறையினர் செய்யும் கெடுபிடிகள் ஒரு பக்கம். நான்கு மாதங்களுக்கு முன்னர் பாண்டிச்சேரி முகாமுக்கு நானும் சுகுமாரனும் சென்றிருந்தோம். இறந்தவர்களை எரிப்பதிலும் புதைப்பதிலும் கூட அவர்களுக்குப் பிரச்சினை உள்ளது. உள்ளூர்ச் சுடுகாட்டில் இடம் தர மறுக்கின்றனராம். இரட்டைக் குடியுரிமை என்பது இப்படிப் பல அம்சங்களில் அவர்களுக்குப் பயனுடைய தாக இருக்கும். விரும்பினால் எப்போது வேண்டுமானாலும் நாடு திரும்ப அவர்களுக்கு உரிமையுண்டு என்கிற வகையில் அக் குடியுரிமை அமைய வேண்டும்.

முகாம்களில் உள்ள அடிப்படை வசதியின்மை குறித்தெல்லாம் விரிவாக எமது அறிக்கையில் பேசியுள்ளோம். செங்கல்பட்டு சிறப்புக் காவல் முகாமை உடனடியாகக் கலைத்து அங்குள்ள வர்களை விடுதலை செய்வது மிக முக்கியம். அங்குள்ளவர்கள் தொடர்ந்து போராடிக் கொண்டுள்ளனர்.

கவிஞர் கண்ணதாசன் அடிக்கடிப் பயன்படுத்திய மேற்கோள் ஒன்றுடன் முடித்துக் கொள்கிறேன். இதை நான் எனக்குப் பொருத்திக் கொள்வது கொஞ்சம் 'ஓவர்'தான். இருந்தபோதிலும் இன்று நான் எதிர்கொள்ளும் கேள்விகளுக்கு அது பொருத்தமான பதிலாகத் தெரிகிறது.

"போற்றுவார் போற்றட்டும், புழுதுவாரித் தூற்றுவார் தூற்றட்டும்
ஏற்றதொரு கருத்தை எனதுள்ளம் என்றால்
எவர் வரினும் நில்லேன் அஞ்சேன்"

நவம்பர் 15, 2009 — அ. மார்க்ஸ்
சென்னை - 20

# ஈழத் தமிழ்ச் சமூக உருவாக்கமும் அரசியல் தீர்வும்

(சென்னையில் இயங்கும் 'தண்டோரா' என்கிற தலித் அமைப்புத் தோழர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க எழுதப்பட்ட கட்டுரை)

ஈழத் தமிழ்ச் சமூக உருவாக்கம் குறித்த சில ஆரம்பத் தகவல்களை எளிமையாக அறிமுகம் செய்வது இக்கட்டுரையின் நோக்கம். இங்கே மிகத் தீவிரமாக தமிழ் ஈழம் பற்றிப் பேசுகிற புலி முகவர்கள் யாரும் இதை உங்களுக்குச் சொல்லியிருக்க மாட்டார்கள். சொல்லியிருக்க மாட்டார்கள் என்பதைக் காட்டிலும் மிகவும் திட்டமிட்டு மறைத்து வந்துள்ளார்கள் என்பதே உண்மை.

எந்த ஒரு சமூகமும் ஒருபடித்தானதல்ல. அதற்குள் பல வேறுபாடுகள், ஏற்றத் தாழ்வுகள் அதனடிப்படையிலான பொருளாதாரச் சுரண்டல்கள், சமூக ஒடுக்குமுறைகள் இருக்கும். இவற்றில் மாற்றம் ஏதுமின்றிக் கட்டிக்காக்க விரும்புவோர் இவற்றைப் பற்றி பேசமாட்டார்கள். இப்படி இருப்பதாகக் காட்டிக் கொள்ளமாட்டார்கள். ஏனெனில் இருக்கும் அமைப்பின் மூலம் பயன்பெறும் மேல்தட்டு மக்கள் இவர்கள். இருக்கிற அமைப்பில் பாதிக்கப்படுபவர்களே இது பற்றிப் பேசுவார்கள். இந்த வகையில்தான் சமூகத்திற்குள் இருக்கிற பொருளாதார அடிப்படையிலான வேறுபாடுகளை உயர்த்திப் பிடித்து, முதன் முதலாகக் கோட்பாட்டுருவாக்கம் செய்த தத்துவமாக மார்க்சியம் அமைந்தது. ஆம், அவர்களே முதன் முதலாக சமூக வேறுபாடு களை ஓங்கி ஒலித்தார்கள். அதனடிப்படையில் ஒரு அரசியலை யும் வகுத்தவர்கள்.

சாதி, இன, மத அடிப்படைகளில் ஒடுக்கப்படும் மக்களும் அவ்வபோது இந்த வேறுபாடுகளை அம்பலத்திற்கு கொண்டு வந்து அதனடிப்படையில் தமக்கு இழைக்கப்படும் கொடுமை

களை முடிவுகட்ட வேண்டுமென முழங்கினர். அவர்கள் இவ்வாறு சம உரிமைகளைக் கோரியபோதெல்லாம் அப்படியான வேறுபாடுகள் இல்லை என மற்றவர்கள் அவர்களின் குரல்களை ஒடுக்கினர். வட்டமேசை மாநாட்டில் அண்ணல் அம்பேத்கர் “ நாங்கள் வேறு, நாங்கள் வேறு” என உரத்துக் குரல் கொடுத்தார். நாங்கள் வேறு என்பதாலேயே எங்களுக்கு தொகுதி வாரி (அதாவது இப்போதுள்ள தேர்தல்முறை) பிரதிநிதித்துவம் போதாது, இனவாரிப் பிரதிநிதித்துவ்ம தேவை என்றார். அரசுப் பணிகளில் ஒதுக்கீடு வேண்டும் என்றார். தீண்டாமைக் கொடு மைகள் ஒழிய வேண்டும் என்றார். “இல்லை நாம் எல்லோரும் ஒன்று” என காந்தி விரித்த கதையையும் அதன் விளைவுகளையும் நாம் அறிவோம்.

ஈழத் தமிழ்ச் சமூகமும் இத்தகையதே. அதற்குள்ளும் பிரதேச,சாதி, மற்றும் மத ரீதியான வேறுபாடுகள் உண்டு. மலையகத் தமிழர்கள் இந்திய வம்சாவழியினர் என்கிற வகையில் பூர்விகத் தமிழர்களிடமிருந்து வேறுபட்டவர்களாக உள்ளனர். இன்று ஈழ விடுதலை பேசுகிற எல்லோராலும் புறக்கணிக்கப் பட்டுள்ள இம்மலையகத் தமிழர்கள் பெரும்பாலும் சென்ற நூற்றாண்டுகளில் இங்கிருந்து சென்ற தாழ்த்தப்பட்ட மற்றும் பிற்படுத்தப்பட்ட பிரிவினர் என்பது நினைவிற்குரியது.

ஈழத் தமிழ்ச் சமூகத்திலுள்ள சாதி, மத, பிரதேச வேறுபாடு களை எளியமுறையில் புரிந்து கொள்ள உங்களுக்கு உதவும் ஒரு சில புத்தகங்களை இங்கே குறிப்பிட விரும்புகிறேன். அவை:

1. ‘இலங்கையில் சாதியமும் அதற்கெதிரான போராட்டங் களும்’, ஆசிரியர்கள் : வெகுசனன், இராவணா, வெளியீடு : சவுத் விஷன், விலை ரூ. 100. 2. ‘முஸ்லிம் தேசமும் எதிர்காலமும்’, ஆசிரியர் : விக்டர், வெளியீடு : அடையாளம் விலை ரூ. 100.

விடுதலைப் புலி முகவர்களால் மூடி மறைக்கப்பட்ட பல உண்மைகளை வெளிக் கொணரும் ஆகச் சிறந்த நூற்களான இவ்விரண்டும் இடதுசாரிப் பின்புலத்திலிருந்து வந்துள்ளவை என்பது குறிப்பிடத்தக்கது. முன்னது ‘புதிய ஜனநாயகக் கட்சி’ என்கிற இயக்கத்தைச் சேர்ந்த ஆசிரியர்கள் இருவரால் எழுதப்பட்டது. பின்னது விக்டர் என்கிற பெயரில் முன்வைக்கப் பட்டிருந்தாலும் ஆயுதம்தாங்கிய போராட்டத்தின் மூலம் தமிழ் ஈழ விடுதலை என்கிற நோக்கத்தைக் கொண்டுள்ள உயிர்ப்பு என்கிற இடதுசாரிக் கருத்துடைய ஒரு அமைப்பின் கூட்டு முயற்சி. இவை தமிழகத்தில் தற்போது எளிதாகக் கிடைப்பவை. தோழர்கள் வாங்கிப் பயில வேண்டும்.

மேலும் பல நூற்கள் தமிழிலும் ஆங்கிலத்திலும் உள்ளன. எளிதாகக் கிடைக்கக்கூடியவற்றை இங்கே குறிப்பிடுகிறேன். ஈழச் சாதிமுறை குறித்து அறிய தமிழ்த் தலித் இலக்கிய முன்னோடி கே டானியலின் ஒவ்வொரு எழுத்தும் உங்களுக்கு பயன்படும். அவரது பஞ்சமர் வரிசை நூற்கள் யாழ்ப்பாணச் சமூகத்தின் சாதிக்கொடுமை மற்றும் அதற்கெதிரான போராட்டங்களின் 200 ஆண்டுகால வரலாற்றை சொல்பவை. அவரது நூற்களை 30 ஆண்டுகள் முன்னதாகவே நாங்கள் மிகவும் சிரமப்பட்டு வெளி யிட்டோம். சர்க்கரை நோயால் துன்புற்று இருந்த அவர் சிகிச்சைக் காக தமிழகம் வந்து எனது வீட்டில் தங்கியிருந்தபோதுதான் மறைந்தார். தஞ்சையில்தான் அவரது கல்லறையும் உள்ளது. அவர் எனக்கு எழுதிய கடிதங்களின் தொகுப்பு ('டானியல் கடிதங்கள்') நூலாக உள்ளது. ஒரு தாழ்த்தப்பட்ட தமிழன் தமிழ் ஈழப் பிரச்சினையை எப்படிப் பார்க்க முடியும் என்பதற்கு இது ஒரு அடிப்படையான ஆவணம்.

இன்றளவும் அதாவது ஆயுதப் போராட்டத்தின் பின்னும் அங்கு தீண்டாமைக் கொடுமை எப்படி உள்ளது என்பதை அறிய 'தீண்டத்தகாதவன் முதலான 14 ஈழத்து தலித் சிறு சிறு கதைகள்' நூலைப் படிக்கலாம். பிரான்சிலுள்ள NON என்கிற அமைப்பு ஒரு சில சிறு வெளியீடுகளை வெளியிட்டுள்ளது. வெளியீடு 'மாலிகா புக்ஸ்' விலை ரூ. 100.

மட்டக்களப்புத் தமிழர்களின் தனித்துவங்களைப் புரிந்து கொள்ள வி.சி, கந்தையா எழுதிய 'மட்டக்களப்புத் தமிழகம்' நூலை வாசிக்கலாம். 1964ம் ஆண்டில் யாழ்ப்பாணத்திலிருந்து வெளிபிடப்பட்ட இந்நூலை 2002ம் ஆண்டில் 'எக்ஸில்' நிறுவனம் தமிழகத்தில் மறுவெளியீடு செய்தது. விலை ரூ 275. அடுத்து இலங்கையிலுள்ள கிழக்குப் பல்கலைக் கழக நுண்கலைத் துறைப் பேராசிரியர் கலாநிதி சி. மௌனகுரு அவர்கள் கருத்தரங்கொன்றில் சமர்ப்பித்த 'ஈழத்தில் தமிழ் பேசும் மக்களின் வரலாற்றுருவாக்கமும் பதிற்குறிப்புகள் தரும் சில நுல்களும் ஓர் ஆய்வு' என்னும் கட்டுரையும் (2005) வாசிக்கத் தகுந்தது. இதைச் சிறுவெளியீடாக விரைவில் கொண்டுவர உள்ளோம். இலங்கை முஸ்லிம்களின் இன்றைய நிலை, அரசியல் ஆகியவற்றை அறிய அங்கிருந்து வருகிற 'எங்கள் தேசம்', 'மீள்பார்வை', 'பெருவெளி' மற்றும் லண்டனிலிருந்து வருகிற 'எதுவரை' முதலிய இதழ்களையும் வாசிக்கலாம். பேரா. கா. சிவத்தம்பியின் 'யார் இந்த யாழ்ப்பாணத்தான்?' கட்டுரையையும் தேடிப் பாருங்கள். புலிகளால் 19 ஆண்டுகளுக்கு முன்

துரத்தப்பட்டு, அனைத்தையும் இழந்து, இன்றளவும் அகதிகளாக வாழ்கிற சுமார் ஒரு லட்சம் தமிழ் முஸ்லிம்களின் கதை அறிய பரதேனிய பல்கலைக்கழகப் பேராசிரியர் எஸ். எச். ஹஸ்புல்லா எழுதிய Muslim Refuges : The Forgotten People in Sri Lanka's Ethnic Conflict நூலைக் காணலாம். இதையும் தமிழில் கொணடுவர முயற்சிக்கிறோம்.

மலையகத் தமிழர்கள் பிரச்சினையைப் புரிந்துகொள்ள 'ஈரோஸ்' (ஈழ ஆய்வு நிறுவனம்-EROS) அமைப்பு வெளியிட்டுள்ள 'இருபதாம் நூற்றாண்டின் நவீன அடிமைத்தனம்' (மலையக மக்கள் வரலாறு) என்கிற க.மோகன்ராஜ் (1984) எழுதிய நூலைப் பார்க்கலாம். சமீபத்தில் வெளிவந்துள்ள என்.மருத்துவமனி மற்றும் மா.இராமசாமி எழுதியுள்ள 'இலங்கை துப்பாக்கிகள் மௌனமான வரலாறு' (உழைப்பாளிகள் பதிப்பகம், 2009) என்னும் நூலைப் பார்க்கலாம். முதல் நூல் விரிவான தகவல்களைக் கொண்ட நூல். தோழர்களுக்கு ஒருவேளை இது கிடைக்காமல் போகலாம். இரண்டாவது நூல் எளிதில் கிடைக்கக்கூடிய ஒன்று.

முதலில் சில தகவல்களை தொகுத்துக் கொள்வோம். மேற்குறித்த நூல்களிலிருந்தும் பேராசிரியர் சிவத்தம்பியின் Srilankan Tamil Society and Politics, (NCBH First edn 1995, Second edn 2007 விலை, ரூ.120) என்கிற நூலிலிருந்தும் இத் தரவுகள் தொகுக்கப்படுகின்றன. மக்கள் தொகைக் கணக்கைப் பொருத்தமட்டில் நமக்கும் கிடைக்கும் ஓரளவு நம்பகத் தன்மையான அரசு புள்ளி விவரம் 1981ம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கீடுதான். 25 ஆண்டுகால யுத்தம் மிகப் பெரிய இடப் பெயர்வுகளையும் மக்கள் தொகைப் பரவல் மாற்றங்களையும் (demoraphic changes) ஏற்படுத்தியுள்ளது. எனவே இந்த எண்ணிக்கையில் இன்று பெரிய மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன என்கிற உணர்வோடு இவற்றை நாம் அணுகுதல் அவசியம்.

இலங்கையிலுள்ள தமிழ் பேசும் மக்கள் மூன்று வகையின ராக அரசால் வகைப்படுத்தப்படுகின்றனர். 1.ஶ்ரீலங்கா தமிழர்கள் (இலங்கைத் தமிழர்கள்) 2.இந்தியத் தமிழர்கள் (மலையகத் தமிழர்கள்) 3. முஸ்லிம்கள். இவர்களுள் முஸ்லிம்கள் குறித்து இறுதியில் பார்ப்போம். ஏனெனில் முஸ்லிம்கள் தம்மைத் தமிழர்களாவன்றி தனித்தேசிய இனத்தவராக இன்று அடையாளம் காண்கின்ற நிலை ஏற்பட்டுள்ளது.

1981ம் ஆண்டு கணக்கீட்டின் படி இலங்கையின் மொத்த மக்கள் தொகை 14,850,001 இவர்களில் இலங்கைத் தமிழர்

1,871,535 அதாவது 12.6 சதவீதம். இந்தியத் தமிழர்கள் 8,25,238 (5.6 சதம்) இரண்டையும் சேர்த்துக்கணக்கிட்டால் 17 சதம் ஆகிறது.

மலையகத் தமிழர் குறித்து சில தகவல்களை இறுதியில் சொல்வேன். எனினும் ஒன்றை நினைவிற் கொள்ள வேண்டும். தமிழர்களுள் மிக மோசமான பொருளாதாரச் சுரண்ட லுக்கு ஆட்பட்டவர்கள் அவர்கள். பெரும்பாலோர் குடியுரிமை யும் பறிக்கப்பட்டுள்ளனர். வடக்கிலுள்ள பூர்வீகத் தமிழர்கள் அளவிற்கு யுத்தத்தால் நேரடியாக இவர்கள் பாதிக்கப்படா விட்டாலும் பெரிய அளவில் அவர்களையும் அது பாதித் துள்ளது. பள்ளி செல்லும் வயதிலுள்ள மலையகக் குழந்தைகள் இன்று கொத்தடிமைகளாக மேல் தட்டினரின் வீடுகளில் பணி புரிகின்றனர். எல்லாவிதமான சுரண்டல்களுக்கும் ஆளாக்கப்படு கின்றனர். கடந்த ஜூலை, 14 (2009) அன்று கொழும்பு பௌத்தாலோக மாவத்தையில் கால்வாய் ஒன்றில் லெட்சுமண் சுமதி (14), மருதைவீரன் ஜீவராணி (14) என்கிற இரு மலையகப் பெண் குழந்தைகளின் உடல்கள் கண்டெடுக்கப்பட்டன. வீட்டு வேலை செய்து கொண்டிருந்த இவ்விரு குழந்தைகளின் மரணம் இக்கட்டுரையை எழுதிக் கொண்டுள்ளபோது சர்ச்சைக்குள்ளாகி யுள்ளது.

மலையகத் தமிழர்கள் மலையகத்தில் மட்டும் உள்ளனர் என்பதல்ல. வவுனியாவில் உள்ள மொத்த மக்கள் தொகையில் 19.4 சதம் மலையகத்தினர். முல்லைத் தீவில் 13.9 சதமும் மன்னாரில் 13.2 சதமும் உள்ளனர். கிளிநொச்சியில் அவர்களின் எண்ணிக்கை சுமார் 15 சதம் இருக்கலாம். (கிளிநொச்சி, 1981 மக்கள் தொகைக் கணக்கீட்டிற்குப் பின் உருவாக்கப்பட்ட மாவட்டம் என்பதால் உறுதியான தரவுகள் இல்லை.)

தமிழகச் சாதிமுறை பெரிய வேறுபாடுகளின்றி மலையக மக்கள் மத்தியில் அப்படியே பின்பற்றப்பட்டது. ஆறுநாட்டு வேளாளர் என்போர் அங்கே ஆதிக்க சாதியினர். முக்குலத்தோர் இடைநிலைச் சாதியினர். செட்டி, ரெட்டி, நாயுடு, முத்துராஜா, நாடார் போன்றோர் சிறுபான்மைச் சாதியினர் பள்ளர், பறையர். சக்கிலியர். வண்ணார் (தமிழ் வண்ணார், ரெட்டி வண்ணார், தொட்டி வண்ணார்), அம்பட்டர் ஆகியோர் தாழ்த்தப்பட்ட சாதியினர். பெருந்தோட்டச் சாகுபடிக்காக இந்தியாவிலிருந்து இம் மக்களின் கொண்டுவரப்பட்டு 8/10 அடி அளவுள்ள 'லயன்' களில் அவர்கள் குடியேற்றப்பட்டபோது இச் சாதிமுறை

அடிப்படையிலேயே அங்கு குடியேற்றம் மேற்கொள்ளப் பட்டது. இன்றளவும் தொழிற்சங்கம் உட்பட மேல் சாதி ஆதிக்கமே நிலவுகிறது.

## 2

இனி இலங்கைத் தமிழரை எடுத்துக்கொள்வோம். இவர்களின் மக்கள் தொகை கீழ்க்கண்டவாறு விரவியுள்ளது.

வடக்கு மாகாணங்கள் : கிளிநொச்சி உள்ளிட்ட யாழப்பாணம் 95.3 சதம், முல்லைத்தீவு 76 சதம், மன்னார். 50.6 சதம், வவுனியா 56.9 சதம். கிழக்கு மாகாணங்கள்: திரிகோணமலை 33.8 சதம், மட்டகளப்பு 70.8 சதம், அம்பாறை 20.1 சதம்.

மொத்த இலங்கை மக்கள் தொகையில் இலங்கைத் தமிழர்களின் வீதம் 12.6 சதம் என்பதை முன்பே பார்த்தோம்.

இலங்கைத் தமிழர்கள் மத்தியில் நிலவும் சாதிமுறை தமிழக சாதி முறையிலிருந்து வேறுபடும் புள்ளிகளாகக் கீழ்க்கண்ட வற்றை சிவத்தம்பி அடையாளப்படுத்துவார். அதைச் சொல்லு முன் ஒன்றை நினைவிற் கொள்ள வேண்டும். யாழப்பாணச் சாதிமுறைக்கும் பிற பகுதிகளிலுள்ள குறிப்பாக மட்டக்களப்பு சாதிமுறைக்கும் பாரிய வேறுபாடுகள் உண்டு. யாழப்பாணச் சாதிமுறை ரொம்ப இறுக்கமானது. அதற்குள் நிலவும் தீண்டாமை தமிழகத்தைக் காட்டிலும் கொடுமையானது. இனி சிவத்தம்பி துல்லியப்படுத்தும் வேறுபாடுகளில் சில. பெரும்பாலும் வட பகுதித் தமிழர்களை மனங்கொண்டே இத்தகைய துல்லியப் படுத்தலைப் பேராசிரியர் செய்துள்ளார்.

1. இந்தியாவைப் போல இலங்கையிலும் சடங்கு அடிப்படையில் பார்ப்பனர் களே ஆக உச்சியில் இருந்தபோதும் சமூக அதிகாரம் அவர்களிடம் கிடையாது. இந்த இடத்தை அங்கு நிரப்புபவர்கள் சைவ வேளாளர்களே. பார்ப்பனர் எண்ணிக்கை யில் வெகு சொற்பம் என்பது தவிர பெரிய மரியாதைக்குரிய வர்களும் அல்லர் 'புக்கை தின்னிப் பார்ப்பான்' என டானியலின் கதாபாத்திரங்கள் அவர்களை ஒதுக்கிச் செல்வர். ஆலயங்களிலும் கூட சிலவற்றி லேயே பார்ப்பனக் குருக்கள் உள்ளனர். மற்றவற்றில் சைவக்குருக்களே சடங்குகளை நிகழ்த்துவர்.

2. எல்லாச் சமூக அதிகாரங்களும் (குறிப்பாக வடக்கு மாகாணத்தில்) வெள்ளாளரிடமே குவிந்துள்ளன. கல்வியை வயப்படுத்திய இவர்கள் கிட்டதட்ட நம்மூர் பார்ப்பனர்கள்போல் அரசுப் பதவிகளை எல்லாம் ஆக்ரமித்துக் கொண்டதைக் காரணம்

சொல்லியே சிங்கள இனவாத அரசு தரப்படுத்துதலைக் கொண்டு வந்தது. (சிவத்தம்பியின் 'யார் இந்த யாழப்பாணத்தான்?' கட்டுரையை பார்க்கவும்.) யாழ்ப்பாண ஆதிக்கத்தைச் சிங்கள வர்கள் மட்டுமின்றி தமிழ்ப் பஞ்சமர்களும்,கிழக்கு மாகாணத்த வரும் வெறுத்தனர்.

3. தமிழகத்தைப் போலன்றி இலங்கைத்தமிழர்கள் மத்தியில் திருமண உறவுகள் தாய்வழித் தன்மையுடையதாக இருந்தது. கிட்டத்தட்ட நமது கேரள சமூகத்தைப்போல. திருமண உறவுகள் உள்ளூர் அளவில் குறுக்கப்பட்டன (matrilocal).

4. உறவின் முறை, சடங்கு முறைகள், வழிபாட்டு முறைகள் ஆகியவற்றிலும் வேறுபாடுகள் உண்டு.

5. உணவு முறையிலும் வேறுபாடுகள் உண்டு. தேங்காய், மீன் மற்றும் கார வகைகளை அவர்கள் அதிகம் பயன்படுத்துவர். பால்,மோர், தயிர் ஆகியவற்றைப் பயன்படுத்துவது குறைவு. புட்டு, அப்பம் முதலியவை அங்கு முக்கிய உணவு. அடித்தள மக்கள் மத்தியில் பனங்கிழங்கு ஒரு முக்கிய உணவுப் பொருள் (எடு: ஒடியல் புட்டு, ஒடியல் கூழ்).

6. ஈழத் தமிழர்களுக்கும் நமககும் உள்ள மொழி, உச்சரிப்பு வேறுபாடுகள் எல்லோரும் அறிந்த ஒன்று.

இனி பகுதிவாரியாக சமூக அமைப்பு எவ்வாறு உள்ளது எனக் காண்போம்.

வடமராட்சி, தென்மராட்சி, தீவுகள், யாழ்ப்பாணம் நகரம், வண்ணார்பண்ணை, நல்லுர் முதல் கோப்பாய் வரையிலான பகுதி, மாணிப்பாய்,தெல்லிப் பழை, சுன்னாகம், சுழிபுரம், பண்ணாகம், காங்கேசன் துறையிலிருந்து பலாலி வரையிலான கடலோரப் பகுதி, வட்டுக்கோட்டை, அராலி ஆகியவை இணைந்த பகுதி யாழ்ப்பாணப் பிரதேசம் எனப்படும்.

யாழ்ப்பாணப் பகுதியிலுள்ள முக்கிய சாதிகளைப் பார்ப் போம். மேல்நிலையினர் : வெள்ளாளர், கரையார், பார்ப்பனர், வெள்ளாள குருக்கள். இடைநிலையினர் : கோவியர், தட்டார், தச்சர், கொல்லர், நட்டுவர், கைக்குளர், செட்டிகை, திமிலர், முக்குவர், குசவர். பஞ்சமர் : பள்ளர், பறையர், நளவர், அம்பட்டர், துரும்பர், வண்ணார் முதலானோர்.

கரையார் எனப்படும் சாதி குறித்து ஒரு சொல் மறைந்த விடுதலைப்புலிகளின் தலைவர் பிரபாகரன், பேராசிரியர் சிவத்தம்பி முதலானோர் இச்சாதியினர். கரையிலிருந்து மீன்

வணிகம் செய்யும் இவர்கள் கடலோரப் பகுதியில் ஆதிக்க சாதியினராக உள்ளனர். சைவ மரபுடன் கூடிய வாழ்நிலையை இவர்களிடமும் காணலாம். எனினும் வேளாளர்கள் அவர்களைக் கீழாகவே நடத்துவர். தான் கரையான் என்பதற்காகவே தகுதியிருந்தும் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் பதவி தனக்கு அளிக்கப்படவில்லை எனப் பேரா. சிவத்தம்பிக்கு ஒரு தீரா வருத்தமுள்ளதை நானறிவேன். கரையான் தலைமை தாங்கியதால்தான் ஆயுதப்போராட்டம் வீழ்ச்சியடைந்தது என இன்று சில வெள்ளாளர்கள் குற்றம் சாட்டுவது கவனிக்கத்தக்கது.

வேளாள ஆதிக்கத்தையும் பஞ்சமர் மீதான தீண்டாமைக் கொடுமைகளையும் ஒரு சிறு கட்டுரையுள் சொல்லி முடியாது. டேனியல் நூற்களையும் வெகுசனன் - இராவணா ஆகியோரின் நூலையும் காண்க. தாழ்த்தப்பட்டோருக்கு மறுக்கப்பட்டவை (மேலாங்கி அணியக்கூடாது, தாலி அணியக்கூடாது, குடை/ செருப்பு அணியக்கூடாது முதலியன) என 26 உரிமைகள் வெகுசனன் நூலில் பட்டியலிடப்படுகின்றன (பக். 55, 56).

ஒவ்வொரு வெள்ளாள நிலவுடைமையாளருக்கும் பஞ்சம, கோவிய சாதிகளைச் சேர்ந்த கொத்தடிமைகள் உண்டு. இவர்கள் ‘சிறைக்குட்டிகள்’ எனப்படுவர். திருமணங்களில் வெள்ளாளப் பெண்ணுக்குச் சீதனமாக இந்தச் சிறைக்குட்டிகளும் பிற சீர்வரிசைகளுடன் அனுப்பப்படுவர். பிறப்பு முதல் இறப்பு வரையிலான சமூகச் சடங்குகள் ஒவ்வொன்றிலும் பஞ்சமர் களுக்கு துடக்கு கழித்தல் முதலான இழிவான கடமைகள் ஒதுக்கப்பட்டன. யாழ்ப்பாணத்தில் வழங்கிய தேச வழமைச் சட்டமும் மட்டக்களப்பில் நிலவிய முக்குவச் சட்டமும் இந்த அடிமைமுறையை உறுதி செய்தன. வெள்ளைக்காரர்கள் கொண்டுவந்த அடிமை ஒழிப்புச் சட்டத்தால் இவற்றை ஏதும் செய்ய இயலவில்லை. வெள்ளைக்காரர்கள் கொண்டு வந்த எந்த மாற்றங்களானாலும் பெரிய அளவில் பஞ்சமர்களைச் சென் றடையவில்லை. வழக்கம்போல் கிறிஸ்தவம் அங்கும் சாதிக்கும் பலியாகியது.

எல்லோருக்கும் வாக்குரிமை என்கிற கருத்தை எதிர்த்து டொனமூர் ஆணைக்குழுவின் முன் அன்றைய தமிழர் தலைவர் சேர்.பொன். இராமநாதன் வாக்களித்தார். 1929ல் சைவப் பெரியார்கள் யாழப்பாணம் ராயல் தியேட்டரில் இந்து மகாசபையின் தலைமையில் ஒன்று கூடி கோப்பாய் அரசினர் ஆசிரியப் பயிற்சிக் கலாசாலையை உயர்சாதியினருக்கான தனி நிறுவனமாக்கவேண்டும் எனத் தீர்மானம் இயற்றினர். 1930ல்

டொனமூர் அறிக்கையின் அடிப்படையில் பள்ளிகளில் 'சம ஆசனம், சம போசனம்' முறை சட்டமாக்கப்பட்டபோது 12 பள்ளிகள் தீவைத்து எரியூட்டப்பட்டன. முன்னதாக யாழ்ப் பாணத்திற்கு ரயில் போககுவரத்து மேற்கொள்ளப்பட்டபோது பஞ்சமர்களும் பக்கத்தில் உட்கார்வார்கள் என அதை வெள்ளாளர்கள் எதிர்த்தனர். இப்படி நிறையத் தகவல்களை மேற்குறித்த நூற்களில் காண்க.

சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் சாதிக் கொடுமை களுக்கு எதிராகத் தாழ்த்தப்பட்டோர் இயக்கங்கள் உருவாயின. 1913ல் உருவான 'சிறுபான்மைத் தமிழர் மகாசபை' முக்கியமான ஒன்று. ஆலய நுழைவு முதலான இவர்களின் உரிமைப் போராட் டங்களை தமிழர் இயக்கத் தலைவர்கள் கடுமையாக எதிர்த்தனர். சங்கானை, நிச்சாமம் முதலான இடங்களில் தாழ்த்தப்பட்ட தமிழர்கள் வரலாற்றுச் சிறப்புமிக்க போராட்டங்களை நடத்திய போது இலங்கைப் பாராளுமன்றத்தில் தமிழர் தலைவர்கள், "சங்கானை ஷங்காய் ஆகிவிட்டது" எனக் கூச்சலிட்டனர். அதாவது மாவோ சார்புள்ள இலங்கைக் கம்யூனிஸ்ட் கட்சி அப்போராட்டத்தை ஆதுரிப்பதால் சீனாவைப்போல யாழ்ப் பாணம் ஆகிவிட்டது என்கிற பொருளில் அவ்வாறு கூறப்பட்டது.

இதெல்லாம் பழைய கதை. இனப் போராட்டம் சாதிக் கொடுமைகளை ஒழித்துவிட்டது. புலிகளின் இராணுவத்தில் கடைசிக் கட்டத்தில் தாழ்த்தப்பட்டவர்கள் மிகுதியாக இருந்தனர். இன்று சாதியைப் பற்றிப் பேசுவது தமிழர்களைப் பிரிக்கும் சதி என இங்குள்ள புலி முகவர்கள் கூறுகின்றனர். அதெல்லாம் ஒன்றுமில்லை இன்றளவும் சாதி அங்கே வலிமை யாகவே உள்ளது. புலம் பெயர்ந்த சூழலிலும் சாதி பாராட்டப் படவே செய்கிறது. வெள்ளாளர்கள் பெரும்பாலும் ஐரோப்பிய நாடுகளுக்குப் புலம் பெயர்ந்துவிட்டதால் அடிநிலை மக்கள் புலிகளின் இராணுவத்தில் இருந்தது தவிர்க்க இயலாத ஒன்று. கட்டாய ஆளெடுப்பில் பாதிக்கப்பட்டவர்களாகவே இவர் களைக் காண வேண்டும் என்பது 'தலித் சமூக மேம்பாட்டுப் பேரவை' முதலான அமைப்புகளின் வாதம். 'தூ' என்றொரு இதழை அவர்கள் வெளியிடுகின்றனர். இரு மாநாடுகளை அவர்கள் ஐரோப்பாவில் நடத்தியுள்ளனர். புலிகளின் கட்டுப்பாட் டில் யாழ்ப்பாணம் இருந்தபோதும் சாதியம் கோலோச்சியது என்பதற்குச் சில எடுத்துக்காட்டுகளையும் முன் வைக்கின்றனர். 'Non' என்கிற அமைப்பின் சார்பாக சில சிறு வெளியீடுகளையும் அவர்கள் கொண்டு வந்துள்ளனர்.

எது எப்படியோ இலங்கையில் சாதிவாரிக் கணக்கெடுப்பு கிடையாது. இட ஒதுக்கீடு, தீண்டாமை ஒழிப்பு வன்கொடுமைத் தடுப்புச் சட்டம் முதலியன கிடையாது. தாழ்த்தப்பட்டவர்களுக்கு உரிய பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டது இல்லை. புதிய அரசியல் தீர்வு, அரசியல் சட்டம், அதிகாரப் பகிர்வு முதலியன பற்றிப் பேசப்படும் இன்றைய சூழலில் இவை கணக்கில் கொள்ளப்பட வேண்டும். வரலாற்று ரீதியாக இங்கு தாழ்த்தப்பட்டோர் தம்மைச் சிறுபான்மையினராகவே உணர்ந்து வந்துள்ளனர். எனவே வழங்கப்படும் பிரதிநிதித்துவம் தொகுதிவாரிப் பிரதி நிதித்துவமாக (reserved constitueneies) இல்லாமல் தாழ்த்தப்பட்ட வர்களே வாக்களித்து தம் பிரதிநிதிகளைத் தேர்வு செய்யும் இனவாரிப் பிரதிநிதித்துவமாக (communal representation) அமைய வேண்டும். இட ஒதுக்கீடு, தீண்டாமை ஒழிப்பு, வன்கொடுமைத் தடுப்பு முதலியன சட்டமாக்கப்பட வேண்டும் இது தொடர்பான எல்லாவிதப் பேச்சுவார்த்தைகளிலும் தாழ்த்தப்பட்ட அமைப்பு களின் பிரதிநிதிகள் உரிய அளவில் இடம்பெற வேண்டும்.

யாழ்ப்பாணத்திற்குக் கீழாக உள்ளது கிளிநொச்சி. இங்கு மேற்கொள்ளப்பட்ட விவசாய வளாச்சியினூடாக யாழ்ப்பாணத் திலிருந்து இங்கும் பரந்தனிலும் குடிபெயர்ந்தவர்கள் இங்குள்ள விவசாய உற்பத்தி முறைக்கு ஏற்ப ஒரு சமூக அமைப்பை உருவாக்கினர். எனினும் யாழ்ப்பாணத்திலுள்ள தமது சொந்த கிராமங்கள் மற்றும் உறவுமுறையுடன் தொடர்பைப் பேணு கின்றனர்.

தமிழகத்திற்கு மிக அருகாக இலங்கையின் வடமேற்கு எல்லையில் அமைந்துள்ளது மன்னார். நீண்ட கடற்கரை அமைந்த இப்பகுதியில் மீன் பிடிப்பு முக்கிய தொழில். முத்துக்குளிப்பும் உண்டு. கடற்புரத்திலிருந்து உள்ளே சென்றால் வன்னிப் பகுதியை ஒத்த ஏரிப் பாசன அடிப்படையில் விவசாயமும் மேற்கொள்ளப் படுகிறது. மொத்த மக்கள் தொகையில் இங்கு 26.6 சதம் முஸ்லிம்கள் உள்ளனர். கத்தோலிக்க கிறிஸ்தவமும் இங்கு ஆழமாக வேறூன்றியுள்ளது. இந்துக்களும் முஸ்லிம்களும் ஒற்றுமையாகவே இங்கு வாழ்ந்திருந்தனர். சைவத்திற்கும் கிறிஸ்தவத்திற்கும் இருந்த முரண்பாடுகள் இனப் பிரச்சினையி னூடாக மட்டுப்பட்டுள்ளது. கிறிஸ்தவப் பாதிரிகளின் ஈழ ஆதுரவு நிலை யாவரும் அறிந்த ஒன்று.

மாங்குளத்திற்கும் அனுராதபுரத்திற்கும் இடைப்பட்ட பகுதியே வன்னி. திரிகோணமலையின் வட எல்லை வரை விரிந்துள்ள இப் புவியியற் பிரிவில் தம்மாங்கடுவே, கேகிராகே

முதலான சிங்கள மாவட்டங்களைக் கழித்தால் எஞ்சும் வவுனியா மற்றும் முல்லைத்தீவு ஆகியன தமிழ் மாவட்டங்கள். இவற்றை சிங்கள வன்னி, தமிழ் வன்னி எனப் பிரித்துக் கூறுவதுமுண்டு. யானைகளுக்கும் மலேரியாவுக்கும் பெயர்பெற்ற வன்னிக் காடுகளுக்கு வெளியே ஏரிப் பாசனத்தில் அமைந்த மேட்டு நிலவிவசாயம் முக்கிய பொருளாதார செயல்பாடாக இருந்தது. 1890ல் உள்ள ஒரு கணக்கின்படி இங்கு 711 ஏரி, குளங்கள் இருந்தன.

விவசாயம் சார்ந்த கிராமங்கள் நிறைந்த அமைப்பான வன்னியில் யாழ்ப்பாணத்துடன் ஒப்பிடும்போது சாதி இறுக்கம் குறைவு. வேறுபட்ட ஒரு சாதியமைப்பு இங்கிருந்த போதிலும் தென்னீரூற்று, ஒட்டுசுட்டான், நெடுங்கேணி முதலிய கிராமங்களிலுள்ள வேளாளர்கள் யாழப்பாண மாவட்டத்திலுள்ள மட்டுவில், இடைக்காடு வேளாளர்களுடன் திருமண உறவுகள் வைத்துக் கொள்கின்றனர். அதேவேளை வன்னிக் கரையார்கள் வல்வெட்டித் துறை மற்றும் கரவெட்டிக் கரையார்களுடன் உறவு வைத்துள்ளனர். வன்னிக் கைக்குளர்கள் கண்ணிநங்காட்டுக் கைக்குளர்களுடன் திருமண உறவைப் பேணுகின்றனர்.

யாழ்ப்பாணத்திலுள்ள எல்லாச் சாதிகளும் இங்கும் உண்டு. குருவிச்சிந்து, குருவியாப் பள்ளு, முருகையன் சிந்து, அம்மன் சிந்து முதலிய வாய்மொழி இலக்கிய மரபு இங்குள்ள விவசாயம் சார்ந்த உற்பத்தி முறையுடன் தொடர்புடையது என்கிறார் சிவத்தம்பி.

இலங்கையின் தென் கடல் எல்லையில் மத்தியில் உள்ளது மட்டக்களப்பு. திருகோணமலைக்கு கிழக்காக அமைந்துள்ள மட்டக்களப்பு முற்றிலும் வேறுபட்ட வரலாற்றுப் பின்னணியை மட்டுமல்ல புவியியற் சூழலையும் கொண்டது. பிரிட்டிஷ் ஆட்சியில் யாழ்ப்பாணம் அடைந்த மாற்றங்கள் எதுவும் மட்டக்களப்பை எட்டவில்லை. ஏதாவது மாற்றங்கள் ஏற்பட்டதாயின் அது மட்டக்களப்பு நகரத்தைத் தாண்டவில்லை. மட்டக்களப்பு பகுதி தனது கிராமியத் தன்மையைத் தக்க வைத்துக் கொண்டது. சாதிமுறை, பண்பாட்டு வெளிப்பாடுகள் ஆகியவற்றில் யாழ்ப்பாணத்திற்கும் மட்டக்களப்பிற்கும் நிரம்ப வேறுபாடுகள் உண்டு.

மட்டக்களப்பில் உள்ள சாதிமுறையைப் பார்ப்போம். மேல்நிலையினர் : வெள்ளாளர், சீர்பாதக்காரர், முக்குவர், கரையார். இடைநிலையினர் : தனக்காரர், கைக்குளர்,வன்னியர்,

கொல்லர், தட்டார், தச்சர், வேடர். சிறைக்குட்டிகள் :மடுவர், கோயில் பண்டாரம், பண்டாரப்பிள்ளை, குசவர், கொல்லர் முதலிகள், வலிபன், நம்பிகள், வண்ணார், அம்பட்டர், சாணார், பள்ளர், பறையர், கோவியர், தவசிகள், கடையர் ஆகியோர்.

சீர்பாதக்காரர், வன்னியர், கடையர், வேடர் முதலான சாதிகள் மட்டக்களப்பிற்கே உரியவை. யாழப்பாணத்தில் அவை கிடையாது. குடிமுறை என்பதும் இங்குள்ள ஒரு தனித்துவமான அம்சம். வெள்ளார்களிடம் கந்தன்குடி, சருக்குப் பிள்ளிகுடி, சுட்டபட்டான்குடி, கவுந்தக்குடி, அட்டியன்குடி, பொன்னாசிக் குடி, முதலிய குடிவகைகள் உண்டு. இதேபோல முக்குவர், சீர்பாதச்காரர், கரையார், செட்டி, கம்மாளர் ஆகியோரிடமும் குடிமுறை உண்டு. திருமண உறவுகள் ஆலய நிர்வாகம் முதலியன இக்குடி முறையின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன.

இங்குள்ள நிலப்பிரபுத்துவ முறை 'போடி' எனப்படும் நிலப் பிரபுக்கள் போடியார் எனவும் வயலில் இறங்கி உழைப்போர் வயல்காரர் எனவும் அழைக்கப்படுவர். வயல்காரர் என்போர் கிட்டதட்ட நம்மூர் பண்ணையாள் போல.

மட்டக்களப்பு பகுதி எழுவான்கரை, படுவான்கரை என இரண்டாகப் பிரித்து அறியப்படுகிறது. முன்னது கடல் சார்ந்தது. பின்னது வயலும் காடும் சார்ந்தது. இரண்டையும் 25 மைல் நீளமுள்ள வாவி ஒன்று பிரிக்கிறது. படுவான்கரையில் பழைய நிலவுடமை முறை அப்படியே பேணப்படுகிறது- எழுவான்கரை யில் பணப் பொருளாதாரமும் முக்கியமாக உள்ளது. எனவே இங்கு சாதி இறுக்கமும் ஒப்பீட்டளவில் படுவான்கரையைக் காட்டிலும் குறைவு. படுவான்கரையிலுங்கூட யாழ்ப்பாணத்தைக் காட்டிலும் சாதி இறுக்கம் மிகக்குறைவு.

ஆலயங்கள், வழிபாட்டுமுறை, கூத்துவகை என எல்லா அம்சங்களிலும் மட்டகளப்பு யாழ்ப்பாணச் சமூக அமைவி லிருந்து வேறுபடுகிறது. கண்ணகி வழிபாடு இங்குள்ள ஒரு தனித்துவம். வடமோடி,தென்மோடி மற்றும் வசந்தன்கூத்து முதலியவையும் இப்பகுதியில் சிறப்பம்சங்களாக உள்ளன. மட்டக்களப்பில் 24 சதமும், அம்பாறையில் 14 சதமும் முஸ்லிம்கள் உள்ளனர்.

மொத்தத்தில் பேராசிரியர் மௌனகுரு சொல்வதுபோல மட்டக்களப்புச் சமூகம் யாழ்ப்பாணத்தைப் போல 'பிராமணமய மாக்கம்' பெறவில்லை. கொக்கட்டிச்சோலை தான்தோன்றீஸ் வரர் கோயில், மண்டூர் கந்தசாமி கோயில் என்பவற்றில் கூட

ஆகம முறையிலமைந்த பிராமண வழிபாட்டு முறைகள் இல்லை. இதனால் யாழ்ப்பாணம் போன்று இங்கு சாதியமைப்பு இறுக்கமானதாக இல்லை. யாழ்ப்பாணத்தைவிட வேறுபட்ட பண்பாடுகளையும் சமூக அமைப்பையும் கொண்டதாக இப் பிரதேசம் அமைந்தது.

கிழக்கு மாகாணத்தின் வட உச்சியில் அமைந்த திரிகோண மலையின் சமூக அமைப்பு யாழ்ப்பாணம் மற்றும் மட்டகளப்பு இரண்டிற்கும் இடைப்பட்ட ஒன்றாக உள்ளது. அங்குள்ள புகழ்பெற்ற திருகோணேஸ்வரர் ஆலயம் தேவாரப் பாடல் பெற்றது.

இதுவரை இலங்கைத் தமிழர் என்போரிடையே உளள பிரதேச வேறுபாடுகள் குறித்து விரிவாகக் கண்டோம். யாழ்ப்பாணத்த வர்கள் ஆதிக்கம் குறித்து பிற பகுதியினருக்கு, குறிப்பாக கிழக்கு மாகாணத்தவருக்கு எப்போதும் அதிருப்தி உண்டு. இந்த அதிருப்தியின் விளைவாக கிழக்கு மாகாணத்தைப் பிரதிநிதித் துவப்படுத்துபவர்கள் யாழ்ப்பாணத்தவர்கள் ஆதிக்கம் வகித்த தமிழர்கட்சிகளிலிருந்து விலகி சிங்கள அரசியல் கட்சி களுடன் இணைந்து நின்ற வரலாறு கருணாவிலிருந்து தொடங்கி யதாக நாம் நினைக்க வேண்டியதில்லை. மட்டக்களப்பு தொகுதி யின் முதலாவது பாராளுமன்ற உறுப்பினர் செ. இராசதுரை தமிழர் விடுதலைக்கூட்டணியிலிருந்து விலகி ஐக்கிய தேசியக் கட்சியில் சேர்ந்தார். கிழக்கு மாகாணத் தமிழர்கள் 'அபிவிருத்திக்காக' தாம் அப்படிச் செய்வதாகக் காரணமும் கூறினார்.

எனினும் ஆயுதப் போராட்டம் தொடங்கியபோது கிழக்கு மாகாண இளைஞர்கள் ஆர்வத்தோடு இயக்கங்களில் பங்கு பெற்றனர். மௌனகுரு சொல்வதுபோல என்ன இருந்தா லும் ஆயுதப்போராட்ட இயக்கங்கள் பாராளுமன்ற ஆசையில் லாதவை. எனவே சாதிய அணுகுமுறையில் வேறுபட்டிருந்தன. அந்த வகையில் கிழக்கு மாகாணத்தவர்கள் உற்சாகத்துடன் இயக்கங்களில் பங்கு பெற்றபோதும் விரைவில் அவர்களிடமும் அதிருப்தி உருவாகியது. வி.சி. கந்தையாவின் மட்டகளப்பு தமிழகம் நூலை, ஒரு காலத்தில் இயக்கங்களில் இருந்த கிழக்கு மாகாணத்தைச் சேர்ந்த இளைஞர்கள் ('எக்ஸில்') தேடி எடுத்து 2002ல் மறு பதிப்பு செய்தது இதற்கொரு எடுத்துக்காட்டு. பதிப்புரையில்,

> "ஆரியரின் பார்ப்பன மயமாக்கலின் நீட்சியாகவே இலங்கையில் ஆறுமுக நாவலனின் செயல்பாடுகள்

அமைந்தன. சைவத்தையும் தமிழையும் காப்பதாகக் கூறிக்கொண்டு நடத்தப்பட்ட பிராமணியமயமாக்கல் இலங்கையில் வாழ்ந்துவந்த மக்களின் சொந்த வழிபாட்டு முறைகளை ஒதுக்கித் தள்ளியது. ஆலயங்களை ஆகம விதிகளுக்குட்பட்ட நிறுவன மயமாக்கியதால் சொந்தமண் சார்ந்ததும் வாழ்வு சார்ந்ததுமான நம்பிக்கைகளும் வழிபாட்டுமுறைகளும் கொன்றொழிக்கப்பட்டன. மக்களின் கலை வடிவங்கள் இழி நிலைப்படுத்தப்பட்டன. அந்த இடத்தை பார்ப்பனிய கலை இலக்கிய வடிவங்கள் நிரப்பிக்கொண்டன. இவற்றோடு ஒத்தோடக்கூடிய வேளாளத்துவம் தலைதூக்கி பார்ப்பனியத்துக்குப் பதிலீடாய் அமைந்தது.

இத்தோடமைந்த போக்கெனே இலங்கையில் தொடர்ந்து வந்த தமிழ்த் தேசியத்தில் கருத்தியலாக சைவமும் தமிழும் முன்னிறுத்தப்பட்டு **சங்கிலியன் போன்ற தலித் விரோதிகளான மன்னர்களின் மீள்** உருவாக்கம் நடைபெற்றது. இந்த ஆளும் மேட்டுக்குடி களின் கருத்தியலில் சைவ வேளாளமும் சேர்ந்து மையப் படுத்தப்பட்டது. தமிழரின் வரலாறு என்பது யாழ்ப் பாணத்தை மையமாகக் கொண்ட சைவ வேளாள மன்னர் களின் வரலாறாகவும், தமிழர்களின் அரசியல் அபிலாசைகள் என்பவை அது சார்ந்ததாகவும் கட்டமைக் கப்பட்டது. இந்தச் சூழ்நிலையில் இலங்கைத் தமிழ்த் தேசியம் கட்டமைத்த புவியியற் எல்லைக்குள் தங்கள் மண்ணின் தொன்மங்களையும் சிறு மரபுகளையும் இன்றுவரை பேணி வருவதுதான் மட்டகளப்பு - (அழுத்தம் நம்முடையது).

எனக் கூறும்போது யாழ்ப்பாண ஆதிக்கம் குறித்த அதிருப்தி எத்தகைய வெறுப்பாக மாறியுள்ளது என்பது வெளிப்படுகிறது. ஈழத் தமிழ் வரலாற்றை அறிந்தவர்கள் இதைப் படிக்கும்போது பேரதிர்ச்சிக்குள்ளாவது தவிர்க்க இயலாது. தமிழுணர்வின் ஊற்றுக் கண்ணாய் போற்றப்படும் ஆறுமுக நாவலரை குறைந்த பட்ச மரியாதையுமின்றி 'நாவலன்' எனக் குறிப்பிடுவதும் தமிழர் வீரத்தின் அடையாளமாக முன்னிருத்தப்படும் சங்கிலியனை ஒரு தலித் விரோதியாகச் சித்திரிப்பதும் 90களிற்கு முன் கற்பனையி லும் சிந்திக்க இயலாத ஒன்று.

## 3

இப்போது முஸ்லிம்கள் பிரச்சனைக்கு வருவோம். 1981ம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கீட்டின்படி இலங்கையிலுள்ள மொத்த முஸ்லிம்களின் எண்ணிக்கை 10,6,972, அதாவது 7.12 சதம். இவர்களில் 40 சதம் வடகிழக்கில் உள்ளனர். தென்னிலங்கையில் 60 சதம். எனினும் தென்னிலங்கையின்மொத்த மக்கள் தொகையில் முஸ்லிம்களின் எண்ணிக்கை வெறும் 5 சதம் மட்டுமே. வடகிழக்கின் மொத்த மக்கள் தொகையில் முஸ்லிம்கள் 17.59 சதம். கிழக்கில் மட்டும் எனக்கொண்டால் மூன்றில் ஒரு பங்கினர் (32 சதம்) முஸ்லிம்கள். கிழக்கு மட்டும் தனி ஆட்சி அலகாக இருக்கையில் 32 சதமாக உள்ளவர்கள் வடகிழக்கு இணைக்கப்பட்ட ஒற்றைத் தமிழ் ஈழ அலகில் 17.59 சதமாகக் குறுகுவது என்பது முஸ்லிம்கள் இத்தகைய இணைப்பு குறித்து அச்சம் கொள்வதற்கு ஒரு காரணமாக உள்ளது.

தென்னிலங்கையில் முஸ்லிம்களின் வீதம் கீழ்க்கண்டவாறு அமைகிறது. கொழும்பு 8.27; களுத்துறை 7.46; கண்டி 9.95; மாத்தளை 7.23; புத்தனம் 9.72; அனுராதபுரம் 7.12 சதம்.

வடக்கிலங்கையில் முஸ்லிம்களின் வீதம்: யாழ்ப்பாணம் 1.66; மன்னார் 26.62; வவுனியா 6.92; முல்லைத்தீவு 4.87 சதம்.

'இலங்கைச் சோனகர்' எனப்படும் முஸ்லிம்களின் வரலாற்றை முழுமையாக எழுத இது இடமன்று. அரபு நாடுகளிடமிருந்து வணிக நிமித்தமாய் வந்து குடியேறியவர்கள், பூர்விகக் குடிகளாக இருந்து மதம்மாறியவர்கள் என இரு நிலையினரும் உள்ளனர். தெற்கிலிருப்பவர்கள் கூடுதலாக அரபு இன அடையாளங்களுடனும், வடகிழக்கில் இருப்போர் கூடுதலாக திராவிட இன அடையாளங்களுடன் இருப்பதாக ஒரு கருத்தும் உண்டு. எப்படியோ வட கிழக்கில் உள்ளோர் தமிழ் மட்டுமே பேசுகிறவர்கள். இங்குள்ளதுபோல உருது பேசுபவர் கள்கூட அங்கு அதிகமில்லை. தென்னிலங்கைவாழ் முஸ்லிம்கள் தவிர்க்க இயலாமல் சிங்களம் பேசுபவர்களாக உள்ளனர்.

தெற்கு முஸ்லிம்கள் வணிகப் பின்புலத்தாலும், கொழும்பின் அருகாமையாலும் கூடுதல் அரசியல் விழிப்புணர்வு கொண்டிருந்தனர். ஓரளவிற்கு கல்வியையும் அவர்கள் வசப்படுத்தியிருந்தனர். கிழக்கு முஸ்லிம்கள் பெரும்பாலும் நிலவுடைமை முறையிலேயே தேங்கியிருந்தனர்.

இலங்கைத் தமிழர்கள் இன்று தம்மைத் தனி இனமாக முன்னிறுத்திக் கொள்ளக்கூடிய நிலை ஏற்பட்ட வரலாற்றை

மட்டும் வெகு சுருக்கமாகக் காண்போம். இது குறித்து விக்டர் சொல்வது:

> "1899ம் ஆண்டு வரை சட்டசபைப் பிரதிநிதித்துவ மானது இலங்கைத் தமிழர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் எனத் தனித்தனியாக வழங்கப்படவில்லை. மாறாக அவ்விரு சமூகங்களுக்கும் என ஒன்றிணைந்த பிரதிநிதித்து வத்திற்கு தமிழ்த் தலைவர்களே நியமிக்கப்பட்டு வந்தார்கள். எனினும் 1880களில் தெற்கு முஸ்லிம்க ளிடையே புதிதாக உருவாகி வந்த படித்த பிரிவினர் இலங்கை சோனகர்கள் தனித்துவமான சமூகம் என்றும் என்வே தமக்கான தனியான சட்டசபைப் பிரதிநிதித்துவம் வழங்கப்பட வேண்டும் என்றும் கோரிக்கை எழுப்பி னார்கள். இதற்கு எதிராக அவர்களுக்கு தனியான சட்ட சபைப் பிரதிநிதித்து வம் வழங்கப்படத் தேவையில்லை என்றும் பொன். இராமநாதன் போன்ற தமிழ்த் தலைவர்கள் வாதிட்டார்கள். எனினும் இவர்களின் வாதங்களைத் தொடர்ச்சியாகவும் உறுதியாகவும் எதிர்த்ததினூடாக தெற்கு முஸ்லிம் தலைமை இலங்கை முஸ்லிம்களுக்கு என தனியான சட்டசபைப் பிரதிநிதித்துவத்தை 1899ல் பெற்றுக்கொண் டது. இவ்வாறு முதன் முதலாக இலங்கை முஸ்லிம்களுக் கும் தமிழ் மக்களுக்கும் இடையில் அரசியல்ரீதியான பிளவு தோன்றியது (பக்.27, 28)".

இதில் நாம் கவனிக்கவேண்டிய அம்சங்கள் உண்டு. தமிழர் தலைவர்கள் எந்த நோக்கத்திற்காக முஸ்லிம்களையும் தமிழர் களாக ஏற்றுக்கொண்டார்கள் என்பது ஒன்று. முஸ்லிம்களின் பிரதிநிதியாகவும் தாங்களே இருக்க வேண்டும் என்பதற்காகவே அவர்களைத் தமிழர்கள் எனக் கூறினர். முஸ்லிம்கள் தனக்குரிய பிரதிநிதித்துவத்தை உறுதி செய்வதற்கு தாங்ககள் தனித் தேசிய இனம் எனச் சொல்ல வேண்டியதாயிற்று. இத்தகைய தனித் தேசிய உணர்வு அரசியல் ரீதியில் விழிப்புற்றிருந்த தென் னிலங்கை முஸ்லிம்களிடம்தான் முதலில் தோன்றியது என்பது நாம் கவனிக்க வேண்டிய இரண்டாவது அம்சம். வட கிழக்கு முஸ்லிம்களை வேண்டுமானால் தமிழர்களாகக் கருதலாம், நாங்கள் தமிழர்களல்ல என்றும் அவர்கள் கூறத் தயங்க வில்லை.எனினும் தொடர்ந்து தமிழர் அரசியல் தலைமைகளும் ஆயுத இயக்கங்களும் செய்த கொடுந்தவறுகளும், வடகிழக்கு முஸ்லிம்கள் மத்தியில் ஏற்பட்ட அரசியல் விழிப்புணர்வும் இன்று

அவர்களையும் நாங்கள் தனித்தேசிய இனம்தான் என முஸ்லிம் அடையாளத்தில் ஒன்றுபட வைத்துவிட்டது-

தெற்கிலங்கையில் சிங்கள-முஸ்லிம் முரண் எப்போதும் இருந்து வந்தது. வணிகப்போட்டி இதற்கொரு அடிப்படை. 1915ல் தெற்கிலங்கை முழுவதும் முஸ்லிம்கள் மீது சிங்களர் பெரும் வன்முறையை ஏவிவிட்டனர். எனினும் அப்போதிருந்த பிரிட்டிஷ் அரசு சிங்கள வன்முறையாளர்கள் மீது கடும் நடவடிக்கை எடுத்தது. 20ம் நூற்றாண்டில் ஆசியாவில் பௌத்த விழிப்புணர்க்குக் காரணமானவர் எனக் கருதப்படும் அநகாரிக தர்மபாலாவின் சகோதரர் எட்மண்ட் ஹேம விதரண, பெர்னாண்டோ விஜய சேகர, என்.எஸ். பெர்னாண்டோ போன்ற சிங்களத் தலைவர்கள் சிறையிலடைக்கப்பட்டனர். சிலருக்கு மரணதண்டனையும் விதிக்கப்பட்டது.

'முஸ்லிம்களும் தமிழர்களே' என்று வாதிட்ட பொன். இராமநாதன் அப்போது சிறையிலிருந்த சிங்களத் தலைவர்கள் சார்பாக லண்டன் சென்று மகாராணியிடம் அவர்களை விடுதலை செய்யக் கோரினர். கலவரங்களுக்கு முஸ்லிம்களே பொறுப்பு என்றார். 19ம் நூற்றாண்டில் ஆறுமுக நாவரால் தமிழர் அரசியல் யாழ்-சைவ-வேளாளஆண்களின் நலன்களை மையமாகக் கொண்டே செயல்பட்டது என இதை முஸ்லிம் தேசமும் எதிர் காலமும் நூலாசிரியர் விக்டர் விளங்குவது கவனிக்கத் தக்கது (பக்.31).

முதலாம் உலகப்போருக்குப்பின் புதிய அரசியல் யாப்பு குறித்து விவாதங்கள் நடைபெற்றபோது அப்போது நடைமுறையிலிருந்த இனவாரிப் பிரதிநிதித்துவத்திற்குப் (அதாவது முஸ்லிம் களுக்குத் தனிப் பிரதிநிதித்துவம்) பதிலாக இந்தியாவில் நடைமுறையிலுள்ள தொகுதிவாரிப் பிரதிநிதித்துவத்தை தமிழர்கள் வலியுறுத்தினர். பிரிட்டிஷ் ஆட்சி தமிழர்களின் கோரிக்கையை ஏற்றது. இனவாரிப் பிரதிநிதித்துவம் முடிவுக்கும் கொண்டு வரப்பட்டது (இந்தியாவிலும் அதுதானே நடந்தது). எந்த இடத்திலும் பெரும்பான்மையாகக் குவிந்திராத மக்கள் தம் பிரதிநிதித்துவ வாய்ப்புகளை இழந்தனர். கிழக்கில் மட்டுமே முஸ்லிம்கள் தம் பிரதிநிதிகளைத் தேர்வு செய்யும் வாய்ப்புப் பெற்றனர். இவ்வாறாக முஸ்லிம்களின் அரசியலில் கிழக்கு முஸ்லிம்கள் முக்கியத்துவம் கூடியது. தெற்கு முஸ்லிம்கள் 1952ல் லண்டன் சென்று வேண்டிக்கொண்டபோது மேலதிகமாக இரு நியமன உறுப்பினர்கள் மட்டும் அவர்களுக்கு வழங்கப்பட்டது.

இந்த இரு உறுப்பினரையுங் கூட சிங்களர் பெரும்பான்மையாக உள்ள அமைச்சரையே தேர்வு செய்யும் என்பதால் தெற்கிலங்கை முஸ்லிம்கள் சிங்கள அரசியலைச் சார்ந்து நிற்கும் நிலை கூடியது.

சிங்கள அரசியலார் தெற்கு முஸ்லிம்களை வட கிழக்கு முஸ்லிம்களிடமிருந்து பிரிக்கும் தந்திரத்தை ஒருபுறம் மேற் கொண்டபோதே இன்னொரு பக்கம் முஸ்லிம்கள் பெரும் பான்மையாக இருந்த அம்பாறைப் பகுதியில் சிங்களக் குடியேற் றத்தை ஊக்குவித்தனர். இதன் விளைவாக கிழக்கில், இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் 40 சதமாக இருந்த முஸ்லிம்களில் எண்ணிக்கை இன்று 30 சத அளவுக்குக் குறைந்தது.

1970 களின் பிற்பகுதியில் தனி ஈழக் கோரிக்கையுடன் ஆயுதப் போராட்ட இயக்கங்கள் உருப்பெற்றபோது தொடக்கத் தில் முஸ்லிம்கள் அதை எதிர்க்கவில்லை. பல்வேறு வகைகளில் ஆதரவாகவே இருந்தனர். எல்லா ஆயுதக் குழுக்களிலும் முஸ்லிம்களும் இருந்தனர். எனினும் அவற்றின் ஜனநாயக விரோத, மேலாதிக்க நடவடிக்கைகள் முஸ்லிம்களை தமிழர் களிடமிருந்து மேலும் ஒதுக்கியது. ஒருபக்கம் தென்னிலங்கை முஸ்லிம்கள் இப்போராட்டங்களைக் கடுமையாக எதிர்த்தார்கள் என்றால் இன்னொரு பக்கம் தமிழ் இயக்கங்கள் வடகிழக்கு முஸ்லிம்கள் அன்னியப்படுத்தப்படுவதை விரைவாக்கின. வடகிழக்கு முஸ்லிம்கள் பெரிய எதிர்ப்பு ஏதும் காட்டாதபோதும் முஸ்லிம் வர்த்தகர்கள் மற்றும் அரசுப் பணியாளர்களிடம் ஆயுதப்போராட்ட அமைப்புகள் வரி என்கிற பெயரில் பெரிய அளவில் பணம் பறிக்கத் தொடங்கின. முஸ்லிம்கள் பணம் போட்டிருந்த வங்கிகள் (எடு: காத்தான் குடி, கிண்ணியா) கொள்ளையடிக்கப்பட்டன. முஸ்லிம்களுக்குச் சொந்தமான சம்மான்துறை தொழில்நுட்பக் கல்லூரி, அக்கறைப்பற்று முஸ்லிம் மத்திய கல்லூரி ஆகியவற்றிலும் விடுதலை அமைப்புகள் தாக்குதல் நடத்தின (விக்டர் பக். 81). உளவாளிகள், சமூகவிரோதிகள் என முத்திரை குத்தப்பட்டு முஸ்லிம் வணிகர்களும் தொழிலாளர்களும் கொல்லப்பட்டனர். தமிழ் அமைப்புக்கள் தமது கல்வி, பொருளாதாரம் ஆகியவற்றை குறி வைத்துத் தாக்குவதாக முஸ்லிம்கள் கவலை கொண்டனர். இதுகாறும் தாம் ஆயுதப் போராளிகளுக்குச் செய்த உதவிகள், அளித்த பாதுகாப்புகள் ஆகியவற்றிக்கு எள்ளளவும் நன்றியற்ற வர்களாகத் தமிழ் இயக்கங்களை அவர்கள் கண்டனர்.

அமைதியாயிருப்பதில் பயனில்லை என்று கண்ட முஸ்லிம் இளைஞர்கள் சிலர் சாத்தியமான இடங்களில் அதே போன்று

திருப்பித் தாக்குதல்களை மேற்கொண்டனர். 1985லும் அதற்குப் பின் சில ஆண்டுகளும் இந்நிலை தொடர்ந்தது- முஸ்லிம்கள் பக்கமே இழப்புகள் அதிகமாக இருந்தன என்பதை விளக்க வேண்டியதில்லை.

கிழக்கில் இடம் பெற்ற தமிழ் முஸ்லிம் வன்முறை மோதல்களை வெறுமனே இரு சமூகங்களிடையே தன்னியல்பாக வெடித்துக் கிளம்பிய மோதல்களாகக் கருத முடியாது இத்தகைய மோதல்களில் விடுதலை அமைப்புகள் தீவிரமாகப் பங்கு பெற்றிருந்தன என்பதையும், பெரும்பாலான சந்தர்ப்பங்களில் இவ்வமைப்புகள் முஸ்லிம்கள் மீது திட்டமிட்ட வகையில் தாக்குதல்களை நடத்தியிருந்தன என்பதையும் கவனத்தில் கொல்லும்போது இவற்றை முஸ்லிம் இனச் சுத்திகரிப்பின் (ethnic cleansing) ஒரு வடிவமாகக் கருதுவதே பொருத்தமாக அமையும் என்கிறார் விக்டர். பொன்.ராமநாதனின் மனநிலைக்கும் விடுதலைப்புலிகள் முதலான தமிழ் இயக்கங்களின் அணுகல் முறைக்கும் பெரிய வித்தியாசம் ஏதும் இருக்கவில்லை. ஒருபுறம் முஸ்லிம்களும் தமிழர்கள்தான் எனச் சொல்லிக் கொண்டே இன்னொருபுறம் தமது சைவ வேளாளக் கருத்தியலின்பாற்பட்ட முஸ்லிம் வெறுப்பைச் செயலாக்கினர்.

இதன் உச்சகட்டமாக அம்பாறை மாவட்டத்தில் போலிஸ் படை ஒன்றைச் சுற்றிவளைத்த விடுதலைப் புலியினர் அதிலிருந்த தமிழ்ப் போலிசாரை மட்டும் விடுவித்துவிட்டு 44 முஸ்லிம் போலிசாரைச் சுட்டுக் கொன்றனர். உலக வரலாற்றில் எங்கும் நடந்திராத வகையில் காத்தான்குடியில் தொழுதுகொண்டிருந்த முஸ்லிம்களைச் சுட்டுக்கொன்றனர். வட பகுதி முஸ்லிம்களுக்கு 48 மணிநேர அவகாசமும் யாழ்ப்பாண முஸ்லிம்களுக்கு 2 மணி நேர அவகாசமும் கொடுத்து வெளியேற்றினர்.

வடபகுதியில் மன்னார் மாவட்டத்திலும் யாழ்ப்பாண நகரத்திலும் முல்லைத்தீவு நகரத்திலும் குறிப்பிடத்தக்க அளவு முஸ்லிம்கள் பாரம்பரியமாக இருந்து வந்ததை ஏற்கனவே குறிப்பிட்டேன். வணிகம், விவசாயம், மீன்பிடிப்பு, முத்துக் குளிப்பு ஆகியன அவர்களின் முக்கிய தொழில்கள். பெரும்பாலும் அவர்களின் திருமண உறவுகள் வட பகுதிக்குள்ளேயே அமைந்தன. தமிழர்களும் முஸ்லிம்களும் சொல்லிக்கொள்ளத் தக்க அளவிற்கு ஒற்றுமையாகவே வாழ்ந்திருந்தனர். யாழ்ப்பாண தீபகற்பத்தில் 10 இடங்களில் முஸ்லிம் குடியிருப்புக்கள் இருந்தன. புகழ்பெற்ற மூர் தெருவில் 75 சதம் முஸ்லிம்கள்

குவிந்திருந்தனர். அங்கே அவர்களுக்கு 17 மசூதிகள், 4 மதரஸாக்கள் இருந்தன. இது தவிர 6 அரசுப் பள்ளிகளும் இருந்தன. இன்று விடுதலைப்புலிகளால் விரட்டப்பட்டு அகதிக ளாக்கப்பட்டுள்ளோரில் 45 சதத்தினர் பல்வேறு வணிகங்களில் ஈடுபட்டிருந்ததாக ஒரு ஆய்வு கூறுகிறது (எஸ். எச். ஹஸ்புல்லா, பக். 20). தையல், வாகனம் ஓட்டுதல் முதலான தொழில் செய்தோர்கள் 35 சதம்.

முல்லைத்தீவு மாவட்டத்தில் முல்லைத் தீவு நகரம், தண்ணியூத்து, நிரவிப்பட்டி, ஹிஜ்ராபுரம், முத்தையன் காடு, முரிப்பு, தண்ணிமுரிப்பு முதலான இடங்களில் முஸ்லிம்கள் செறிந்திருந்தனர். மன்னாரில் முஸாலியில் உள்ள மொத்த மக்களில் 62 சதம்பேர் முஸ்லிம்கள். இவர்கள் பெரும்பாலும் விவசாயிகள். வன்னி முஸ்லிம்கள் விவசாயம் மற்றும் மீன் பிடிப்பில் ஈடுபட்டிருந்தனர்.

ஆயுதப்போராட்டத் தொடக்கத்தில் எல்லா இயக்கங்களி லும் முஸ்லிம்களும் பங்கு பெற்றனர். வெகுசிலர் முக்கிய பொறுப்பு களிலும் இருந்தனர். கொஞ்சம் கொஞ்சமாக அவர்கள் ஓரங் கட்டப்பட்டனர் அல்லது அழித்தொழிக்கப்பட்டனர். முஸ்லிம் களில் ஒரு சிலர் காட்டிக் கொடுத்தனர் எனப் புலி முகவர்கள் இன்று கூறுகின்றனர். இருந்திருக்கலாம். அவ்வா றாயின் இத்தகைய சந்தர்ப்பங்களில் இந்துக்களாயின் அப்படிச் செய்தவர்களை மட்டுமே அழித்தொழித்த விடுதலைப்புலிகள் முஸ்லிம்கள் விசயத்தில் முஸ்லிம் இனத்தையே தண்டித்தனர். முஸ்லிம் இனத்தையே குற்றஞ்சாட்டினர். துரோகிப் பட்டம் வழங்கினர்.

1990அக்டோபர் 3ஆம் வாரம். முஸ்லிம்கள் அனைவரும் உடனடியாக அனைத்து உடைமைகளையும் விட்டுவிட்டு வட மாகாணத்தை விட்டு வெளியேற வேண்டும் என வடமாகாணம் முழுவதும் ஒலிபெருக்கியின் மூலம் விடுதலைப்புலியினர் ஆணையிட்டனர். மீறுபவர்கள் கொல்லப்படுவார்கள் எனவும் அறிவிக்கப்பட்டது. எல்லோருக்கும் 48 மணிநேர அவகாசம். யாழ்ப்பாணத்திலிருந்த 15,000 முஸ்லிம்களுக்கோ வெறும் 2 மணிநேர அவகாசம்.

முஸ்லிம் மக்கள் விடுதலைப்புலியினரைச் சந்தித்துக் கெஞ்சிய போது அவர்களது வேண்டுதல்கள் மூர்க்கமாக மறுக்கப்பட்டன. கும்பல் கும்பலாக 75,000 முஸ்லிம்கள் அடுத்த இரு நாட்களில் வெளியேறியபோது இதுகாறும் அவர்களுடன் வாழ்ந்திருந்த

வடக்கு மாகாண தமிழ் மக்கள் கண்ணீருடன் விடைகொடுக்க மட்டுமே முடிந்தது. சிங்கள அரச படைகளும் அவர்களைக் காப்பாற்ற முனையவில்லை.

மன்னார் மாவட்டத்திலிருந்த பெரும்பாலான முஸ்லிம்கள் படகுகள் மூலம் புத்தளம் மற்றும் கல்பிட்டியா கடலோரப் பகுதிகளை அடைந்தனர். எஞ்சியோர் வில்பட்டு மற்றும் மடுகாடுகளைக் கடந்து அனுராதபுரம் மாவட்டத்திலிருந்த மேடவாச்சியா, ஹோரரோயு, புதானா, கம்பிரிகஸ்வேவா ஆகிய பகுதிகளை அடைந்தனர். யாழ்ப்பாணத்திலும் கிளிநொச்சியிலு மிருந்த முஸ்லிம்கள் கேரத்தீவிலிருந்து தண்டிகுளம் வரையிலான மனித நடமாட்டமற்ற பகுதிகளைக் கடந்து வவுனியா வந்தடைந்தனர். முல்லைத்தீவு முஸ்லிம்களும் காடுகளைக் கடந்து வவுனியா வந்தடைந்தனர்.

மனித வாழ்வின் பேரவலங்களில் ஒன்று இப்படிக் கட்டாயமாக இடம் பெயர்க்கப்படுதல். உடமைகளை, சொத்துகளை, செய்து வந்த தொழிலை அனைத்தையும் இழந்து கால் நடையாகப் புதிய இடங்களுக்கு வந்து ஒரு வாழ்வைத் துவங்குவது எத்தகைய கொடுமை என்பதை வார்த்தைகளால் விளக்கிவிட இயலாது. அந்தக் கொடுமையை வடக்கு முஸ்லிம்கள் கடந்த 19 ஆண்டுகளாக அனுபவித்து வருகின்றனர். விடுதலைப்புலி முகவர்கள் யாரும் இந்த வரலாற்றை உங்களுக்கு இதற்கு முன் சொல்லியதுண்டா? இந்த அநீதியை எதிர்த்து வாய்திறந்ததுண்டா? அன்று நாங்கள் நடத்திய கருத்தரங் கொன்றில் பெரியவர் மறவன் புலவு சச்சிதானந்தம் "நான் கண்டித்தேன்" என்றார். ரொம்பவும் ரகசியமாகச் செய்திருப்பார் போலும். அவர் வணங்கும் கைலாயநாதருக்குத்தான் வெளிச்சம்.

நான்காண்டுகளுக்குப் பிறகு, செப்டம்பர் 1994ல் பி.பி.சிக்கு அளித்த பேட்டி ஒன்றில் விடுதலைப்புலிகளின் தலைவர் பிரபாகரனிடம் இது குறித்துக் கேட்டபோது, "துரதிர்ஷ்டவசமாக சில நெருக்கடியான சூழல்களின் விளைவாக முஸ்லிம்கள் அகதிகளாக நேரிட்டுள்ளது. அதற்காக நாங்கள் வருந்துகிறோம்" என்று பெரிய மனது பண்ணிச் சொன்னார். எனினும் அவர் கடைசிவரை அவர்களைத் திரும்பி வரலாம் எனச் சொன்ன தில்லை. "முஸ்லிம்களில் பிரச்சினையை நாம் வித்தியாசமாகப் பார்க்கவேண்டும். முஸ்லிம் ஆயுதக் குழுக்கள் ஏராளமான வன்முறைகளில் ஈடுபட்டனர். எதிர்வன்முறையைத் தடுப்பதற் காகவே அவர்களை நாங்கள் வெளியேற்றினோம். எனினும்

நிலைமை சீரானவுடன் அவர்கள் திரும்பி வர அனுமதிக்கப் படுவார்கள் என அவர்களிடம் நாங்கள் கூறியுள்ளோம்" என்று கூறிய ஆன்டன் பாலசிங்கம் 1993க்குப் பின் அதை மறந்து போனார். வடக்கு மாகாண முஸ்லிம்கள் தமது 128 மசூதிகள், 26 தர்ஹாக்கள், 189 மதரசாக்கள், 65 அரசுப்பள்ளிகள் தமது ஏராளமான சொத்துக்கள், விவசாய நிலங்கள், வணிகம், குடியிருந்த வீடுகள், எல்லாவற்றையும் இழந்து அகதிகளான கதை இதுதான்.

போர்முடிவுற்றுள்ளதாக இன்று அறிவித்துள்ள ராஜபக்சே தனது முதற்பணிகளில் ஒன்று முஸ்லிம் அகதிகளை மீள்குடியமர்த்துவதுதான் என்றார். வழக்கம்போல ராஜபக்சேயின் ஏமாற்று வாக்குறுதிகளில் ஒன்றாகவே இதுவும் உள்ளது. சமீபத்தில் வந்துள்ள செய்தி ஒன்று இதற்குச் சான்று. திருமலை தோப்பூர் உப்பூறல் கிராமத்திலிருந்து 1987 ல் விடுதலைப் புலிகளால் வெளியேற்றப்பட்ட முஸ்லிம்கள் 22 ஆண்டுகளுக்குப் பின் சென்ற ஆகஸ்டு 13, 2009 அன்று அமைச்சர் நஜீப் ஏ.மஜீத் தலைமையில் விழாவொன்று நடத்தி மீள்குடியேற்றம் செய்யப் பட்டனர். அடுத்த 5ம்நாள் (18 ந்தேதி) சேருவில போலிசார் வந்து அவர்களை வெளியேற்றியுள்ளனர். மேலிடத்து உத்தரவு எனக் காரணம் சொல்லப்பட்டுள்ளது (எங்கள் தேசம், செப் 1-14.2009).

இதையெல்லாம் இப்போது ஏன் பேசுகிறீர்கள் என்கிற குரல் காதில் விழுகிறது. ஆனால் இப்படிக் கேட்பதற்கு அந்தக் குரலை ஒலிப்பவர்களுக்கு என்ன யோக்கியதை உள்ளது என்று தான் தெரியவில்லை. இப்பொழுதும் இல்லாவிட்டால் வேறு எப்போதுதான் பேசுவது. முந்தைய காலமில்லை இது. நாம் 21ம் நூற்றாண்டில் வாழ்கிறோம். எந்தச் சிறு அடையாளங்களையும் நீங்கள் புறக்கணித்துவிட முடியாது. தலித்கள், முஸ்லிம்கள் முதலானோரின் பிரச்சினைகளுக்கு முன்னுரிமை கொடுத்துச் செயல்பட்டு வரும் நாங்களும் பேசாவிட்டால் பின் யார் பேசுவது. முதன் முதலாக கிழக்கு மாகாண முஸ்லிம் ஒருவரை (திரு. சிராஜ் மசூர்) அழைத்துப்பேச வைத்ததற்கு தமிழ்ச் சூழலில் எத்தனை எதிர்ப்புகள். 'காலச்சுவடு' போன்ற பார்ப்பன இதழ்களில் வெளிப்பட்ட கருத்துக்கள் அவர்களிடம் ஒளிந்துள்ள முஸ்லிம் வெறுப்பு மற்றும் தலித் இகழ்ச்சியைத் தவிர வேறெதைக் காட்டுகின்றன?

தொண்ணூறுகளுக்குப்பின்னர்இதுகாறும் அடையாளம் மறுக்கபட்ட பல்வேறு உயர் அடையாளத்தினரும் தம் அடையாளத்தை வலியுறுத்தத் தொடங்கியதை நான் முதலில்

குறிப்பிட்ட பேராசிரியர் மௌனகுருவின் ஆய்விலிருந்து விளங்கிக்கொள்வோம். பிரதேச மற்றும் சாதி வரலாறுகள் பல அப்போது புதிதாக எழுதப்படத் தொடங்கின. வி.சி. கந்தையா வின் மட்டகளப்பு தமிழகம் நூலை ஒரு காலத்தில் இயக்கங்களில் இருந்த இளைஞர்கள் 2001 ல் மறுபதிப்புச் செய்ததை முன்பே கண்டோம். இதுதவிர,

1. 'சீர்பாத குல வரலாறு', ஆசிரியர் அருள் செல்வநாயம், 1982
2. 'மட்டக்களப்பு குகன்குல முக்குவர் வரலாறு', சி.சண்முகமூர்த்தி, 2000
3. 'மத்திய கிழக்கிலிருந்து மட்டகளப்பு வரை', மணிப்புலவர் மருதூர் ஏ.மஜீத், 1995
4. 'அக்கரைப்பற்று வரலாறு', ஏ.ஆர். எம். சலிம், 1990

என்பன பேராசிரியர் சுட்டிக்காட்டும் இதர சில நூல்கள்.

சாதி, பிரதேச, மத ரீதியான அடையாளங்கள் உலகெங்கி லும் நிகழ்ந்தது போலவே ஈழத் தமிழ்ச் சமூகத்திலும் 1990 களுக்குப் பின் உறுதியானதையே மௌனகுரு அவர்களின் ஆய்வு வெளிப்படுத்துகிறது. இனப் போராட்டத்தில் இந்த அடையா ளங்கள் எல்லாம் மறைந்து விட்டன என அங்கே சொல்லப்பட்டது முழுப்பூசணியை ஊறுகாய்க்குள் மறைக்க முயலும் அபத்தம் அன்றி வேறென்ன?

முஸ்லிம்கள் இன்று ஒத்த குரலில் தான்தனி தேசிய இனம் என்கின்றனர். அதை மறுப்பதற்கு நாம் யார். தேசங்களின் சுய நிர்ணய உரிமையைப் பற்றி வாய் கிழியும் நாம் எப்படி அவர்களுக்கு அதை மறுக்கஇயலும்? இன்று சுய நிர்ணய உரிமை என்பதெல்லாங்கூட சாத்தியமில்லை என்றாகிவிட்ட போது இதென்னபேச்சு என நீங்கள் கேட்கலாம். அப்படி இல்லாவிட்டா லுங்கூட வேறு எந்த அரசியல் தீர்வான போதும் முஸ்லிம்களின் விருப்பை அறியாது, அதற்காக ஒரு வாக்கெடுப்பை நடத்தாது அவர்கள் மீது ஒரு தீர்வைத் திணிப்பது எங்ஙனம்? வடகிழக்கு இணைப்பை முஸ்லிம்கள் ஏற்றுக்கொள்கிறார்களா? மட்டக் களப்புத் தமிழர்கள் ஏற்றுக்கொள்கிறார்களா? இல்லையெனில் வேறென்ன சாத்தியம்? ஆம் எனில் கிழக்கு மாகாணத்தினர், தலித்கள், முஸ்லிம்கள் உரிய பிரதிநிதித்துவம் பெறும் வகையில் தேர்தல் முறை மாற்றியமைக்கப்படுமா? தென்னிலங்கையில் பரந்து கிடக்கும் முஸ்லிம்கள், நாடெங்கிலும் பரந்து கிடக்கும் தலித்கள் உரிய பிரதிநிதித்துவம் பெறும் வகையில் தனி வாக்காளர் தொகுதி முறை உருவாக்கப்படுமா?

13வது சட்டத்திருத்தம் பற்றி இன்று அதிகம் பேசப்படு கிறது. வடக்கு-கிழக்கு இணைப்பிலிருந்து இன்று வெகுதூரம் வந்தாயிற்று. மீண்டும் அது ஏற்றுக்கொள்ளப்பட்டாலுங்கூட தலித்கள், முஸ்லிம்கள் தலித்கள் உரிமை பெற, கவுரவத்துடன் வாழ அது போதுமானதா? சென்ற மாதம் நாங்கள் (இலங்கையில் போரை நிறுத்தி ஜனநாயகத்தை நிலைநாட்டு வதற்கான பிரச்சாரக்குழு) நடத்திய கருத்தரங்கில் முனைவர் பாலகோபால் சொன்னது போல இலங்கையில் நிறைவேற்றப் பட்ட13 வது திருத்தம் இந்திய அரசியல் சட்டத்தின் ஒரு மோசமான பிரதி. அது ஒரு நல்ல பிரதியானாலுங் கூட அது எப்படி போதுமானதாக அமையும்? மையத்தில் அதிகாரம் குவிக்கப்பட்ட இந்திய ஆட்சிமுறை எப்படி ஒரு நல்லுதாரணமாக விளங்க இயலும்?

அதனால்தான் சொல்கிறோம் தனி ஈழம் ஒன்றே தீர்வு என்பார்கள் விடுதலைப்புலி முகவர்கள். இதுகாறும் சொல்லப் பட்ட செய்திகளின் அடிப்படையில் சிந்தியுங்கள். தனி ஈழம் எப்படி இந்தப் பிரச்சனைகளைத் தீர்க்கும்? பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு முதலில் இந்தப் பிரச்சினைகள் உள்ளதை ஏற்றுக் கொள்ளும் மனநிலை வேண்டும். நேபாளம் குறித்து நான் நிறையப் பேசிவிட்டேன். மீண்டும் ஒரு முறை பேசப் போவ தில்லை. தலித்கள், மாதேசிகள், ஜனஜாதிகள், சிறுபான்மையினர் என அனைத்துத் தரப்பின் பிரச்சினைகளையும் கணக்கில் எடுத்ததால்தானே இன்று அங்கு முடியாட்சியைத் தூக்கி எறிய முடிந்தள்ளது.

ஈழத்தில் இன்று தலித் பிரச்சனை உள்ளது. கிழக்கு மாகாணப் பிரச்சினை உள்ளது. முஸ்லிம்கள் பிரச்சனை உள்ளது. மலையகத் தமிழர் பிரச்சினை உள்ளது. இவற்றை ஏற்று அரசியல் தீர்வு குறித்த விவாதத்தில் இறங்குவோம்.

- அம்ருதா, அக். 2009

# தெரியுமா? : மலையகத் தமிழர் வஞ்சிக்கப்பட்ட வரலாறு

(முன் கட்டுரையின் தொடர்ச்சியாக இதை வாசிக்கவும்)

**1823**ம் ஆண்டு கம்பளை - சிங்கபிட்டிய பகுதியில் Ceylon Riffles பிரிவில் இராணுவ சேவை செய்து கொண்டிருந்த கேப்டன் ஹென்றி பர்ட் என்பவன் இந்தியாவிலிருந்து கொண்டு வரப்பட்ட 14 தொழிலாளிகளைப் பயன்படுத்தி 'காப்பி'ச் செடி வளர்த்து 600 பவுண்ட் சம்பாதித்ததை ஒட்டி மலையகத்தில் மிக விரைவாக காப்பிப் பெருந்தோட்டச் சாகுபடி வளர்ந்தது. 1880 வரை காப்பி மட்டுமே மலையகப் பகுதியில் பயிர் செய்யும் நிலை இருந்தது. இலங்கைத் தீவின் காலனியப் பொருளாதாரத்தில் மிக முக்கிய பங்கை பெருந்தோட்டப் பயிர்ச்செய்கை வகிக்கும் நிலை இப்படியாக உருவாகியது. இந்தியாவிலிருந்து, குறிப்பாக தமிழகத்திலிருந்து பெரிய அளவில் இப் பயிர்ச் செய்கைக்காக அடிமைத் தொழிலாளிகள் கொண்டுவரப்பட்டனர். பெரும்பாலோர் திருநெல்வேலி, மதுரை, இராமநாதபுரம், தஞ்சை, புதுக்கோட்டை முதலான தென் மாவட்டங்களைச் சேர்ந்தோர். பெரும்பாலும் தாழ்த்தப்பட்டோர் மற்றும் பிற்படுத்தப்பட்ட சமூகத்தைச் சேர்ந்த இவர்களை இலங்கையிலிருந்த பூர்வீகத் தமிழர்கள் மதித்ததில்லை. 'கள்ளத்தோணிகள்', 'பறத் தமிழர்கள்' என்கிற சொற்களால் இவர்கள் அழைக்கப்பட்டனர். இனவெறி தலைதூக்கிய பின் சிங்களர்களும் அதே பிரயோகங்களைப் பயன்படுத்தினர்.

1800களின் முற்பாதியில் பெரும் பஞ்சத்தாலும் படை எடுப்புகளாலும் பாதிக்கப்பட்டிருந்த தமிழகத்திலிருந்து மிக எளிதாக இந்தக் கூலி அடிமைகள் ஒரு சில தேங்காய்கள், சில மரக்கால்கள் அரிசி என விலை கூறி வாங்கப்பட்டுக் கடல்வழியாகக் கொண்டு வரப்பட்டனர். சரியான உணவு, பாதுகாப்பு ஏதுமின்றி பல கல் தொலைவு காட்டு வழியில் நடத்தி இழுத்து

வரப்பட்டு மிக மோசமான வதிவிடங்களில் குடியமர்த்தப்பட்ட இவர்களில் 25 சதம் பேர் இந்தப் பாடுகளின் ஊடாகவே இறந்து போயினர். 'முன்னால் சென்று மரித்தவர்களின் எலும்புக் கூடுகள் மீது பின்னால் வந்தவர்கள் ஏறிச் சென்றதால், அவை பொடித்துப் போய் இந்த நடைபாதையே சுண்ணாம்பு பூசியது போல இருந்தது' என ஒரு கிறிஸ்தவப் பாதிரி இது குறித்து எழுதி யுள்ளதை நான் வேறொரு நூலில் ('சிற்றிலக்கியங்கள் சில குறிப்புகள்') குறிப்பிட்டுள்ளேன். 1877க்குள் 1,46,000 பேர் இவ்வாறு கொண்டுவந்து குடியமர்த்தப்பட்டனர்.

1880களுக்குப் பின் மலையகத்தில் தேயிலை மற்றும் ரப்பர் தோட்டங்களும் பெரிய அளவில் உருவாயின. நிலப்பிரபுத்துவப் பொருளாதாரமும் அதனூடான பிரபுத்துவ மனப்பாங்கும் கொண்டிருந்த சிங்களர்கள் கூலி அடிமைப் பணி செய்யத் தயாராக இல்லாததால் இலங்கைப் பெருங் தோட்டச் சாகுபடி யும் அதனூடாக இலங்கைப் பொருளாதாரமும் இந்தியாவி லிருந்து அடிமையாகக் கொண்டு வரப்பட்டவர்களையே நம்பியிருந்தது. தோட்டத் துரைமார்களின் ஆட்சியில் எந்தவித உரிமைகளும், வெளித் தொடர்புகளும் இல்லாது குடியமர்த்தப் பட்ட இவர்கள் மீது மேற்கொள்ளப்பட்ட அடக்குமுறைகள், சுரண்டல்கள் சொல்லி மாளாது. வடகிழக்குத் தமிழர்கள் இவர்கள் நிலை குறித்து எள்ளளவும் கவலைப்பட்டதில்லை. 'தீவுக்குள் தீவாக' இவர்கள் முடக்கப்பட்டிருந்த சோக வரலாற்றை 'ஈரோஸ்' ஆய்வு நூலில் காண்க. 'மலையகத் தமிழர்கள்' என இன்று நம்மால் அழைக்கப்படும் இவர்களில் 90 சதம் தொழிலாளிகள்; 86 சதம் தோட்டத் தொழிலாளிகள். கேரளத்திலிருந்து வந்த மலையாளிகளும் ஒரு குறிப்பிட்ட அளவு இருந்தனர். இவர்களில் சிலர் தேநீர்க்கடை முதலானவற்றை வைத்திருந்த சிறு வணிகர்களாக இருந்தனர். ஆலைத் தொழலாளி களில் மூன்றில் இரண்டு பங்கினர் மலையாளிகளாகவும் மீதி மூன்றில் ஒரு பங்கினர் சிங்களர்களாகவும் இருந்தனர். 1951 வாக்கில் மலையகத் தமிழர்களின் தொகை சுமார் 8,25,000.

20ம் நூற்றாண்டின் முற்பாதி வரை பொருளாதார வீழ்ச்சிக் காலங்களில் இவர்கள் கட்டாயமாக இந்தியாவிற்கு வெளியேற் றப்படுவதும், பெருந்தோட்டச் சாகுபடி லாபம் கொழிக்கும் நேரங்களில் அங்கிருந்து கூலி அடிமைகளை இறக்குமதி செய்வ தும் வாடிக்கையாக இருந்தது. 1920களில் இலங்கையில் தொழிற் சங்க இயக்கம் தோன்றியபோது சிங்களரான ஏ.இ.குணசிங்கா வின் தலைமையில் நகர்ப்புற இந்தியத் தொழிலாளர் திரண்டனர்.

எனினும் போகப்போக குணசிங்காவிடம் இந்திய எதிர்ப்புணர்வும் அதனடிப்படையிலான சிங்கள இனவாதமும் வெளிப்படத் தொடங்கியபோது இந்தியத் தொழிலாளர்கள் அவரிடமிருந்து விலகினர். தோட்டத் தொழிலாளர்கள் நடேச அய்யரின் 'அகில இலங்கை தோட்டத் தொழிலாளர் சம்மேளனத்தில்' பெரிய அளவில் பங்கு பெற்றனர். ஒரு தோட்டத்தில் பணியாற்றுகிற மலையகத் தமிழர் அங்கிருந்து விலகி வேறெங்கும் வேலைக்குச் சேரவேண்டுமானால் அப்போதைய முதலாளிகளிடம் அனுமதிச் 'சீட்டு' வாங்க வேண்டும் என்கிற கொடிய கொத்தடிமை முறையை நடேச அய்யரின் சங்கம் ஒழித்துக் கட்டியது.

1848 வாக்கிலேயே அநகாரிக தர்மபாலா போன்றோரால் உருவாக்கப்பட்ட இந்திய எதிர்ப்புணர்வு சிங்களர்கள் மத்தியில் இருந்தபோதும், அன்றைய கலவரங்களின் இலக்கு (எ.டு: மாத்தளை கலகம், 1848) பிரிட்டிஷ்காரர்கள்தான். 1930களில் தான் சிங்களர்கள் மத்தியில் பெரிய அளவில் இந்திய எதிர்ப்பு தலைதூக்கியது. இன்றளவும் மலையகத் தமிழர்களின் வேதனைகளுக்கெல்லாம் காரணமானது.

எனினும் இதில் நாம் ஒன்றைப் புரிந்து கொள்வது அவசியம். 1930களில் பரிணமித்த இந்திய எதிர்ப்பு கூலி அடிமைகளான மலையகத் தமிழர்களை நோக்கி உருவாகவில்லை. இலங்கைப் பொருளாதாரத்தில் ஆதிக்கம் செய்திருந்த கொழும்புவாழ் இந்திய வணிகர்கள் (பெரும்பாலும் தமிழர்கள் ஓரளவு குஜராத்திகள், மார்வாரிகள் ஆகியோர்) மற்றும் அரசு ஊழியர்களாக இருந்த மத்தியதர வர்க்கத்தினரை (மலையாளிகள், தமிழர்கள்) நோக்கியே இருந்தது. 'ஈரோஸ்' வெளியீடாக வந்துள்ள மோகன்ராஜின் நூலிலிருந்து சில தகவல்கள்:

1945 வாக்கில் 750 செட்டியார் நிறுவனங்கள் 10 கோடி ரூபாய் வங்கி மூலதனத்தைக் கட்டுப்படுத்தின. அன்று உள்ளூர் கடன் வங்கிகளாக இவையே செயல்பட்டன. இதைத்தவிர மொத்த வணிகத்தில் 90 சதமும், இடை வணிகத்தில் 60 சதமும், சில்லறை வணிகத்தில் 40 சதமும் இந்தியர் வசம் இருந்தது. ஒரு சில இந்திய முதலாளிகள் இலங்கையில் முதலீடும் செய்திருந்தனர். ஒரு லட்சம் ஏக்கர் நிலத்தைச் சொந்தமாக வைத்திருந்த அண்ணாமலைச் செட்டியார் தன் நிலத்தில் விளைந்த அரிசிக்கு இலங்கைச் சந்தையையே பெரிதும் நம்பியிருந்தார். அரிசி இறக்குமதிக்கென அவர் சொந்தமாகக் கப்பல்களையே வைத்திருந்தார்.

அரசுப் பணியாளர்களாகவும் இடைமட்ட நிர்வாகிகளாகவும் பெருமளவு இந்தியர்கள் இருந்தனர். 1936ல் அரசுப் பணியாளர் களில் 36 சதம் இந்தியர்கள். இந்திய எதிர்ப்பு உருவானதன் விளைவாக இந்த அளவு 1939ல் 19 சதமாகவும், 1941ல் 12 சதமாகவும் குறைந்தது. இதுதவிர ரயில்வே, துறைமுகம், நெசவாலை (வெள்ளவத்தை) ஆகியவற்றிலும் பெரும்பாலான தொழிலாளிகள் இந்தியர்களாகவே இருந்தனர். மலையாளத் தொழிலாளர்கள் இடதுசாரி தொழிற்சங்கங்கள் உருவானபோது அப்பக்கம் இயல்பாகவே சாயத் தொடங்கினர்.

இதே காலகட்டத்தில், அதாவது 1930களில் சிங்கள மக்கள் மத்தியில் வர்த்தக மூலன உருவாக்கமும் நடைபெற்றது. இவ்வாறு உருவான சிங்கள வணிக வர்க்கம் ஏற்கவே இலங்கைப் பொருளாதாரத்தில் ஆழமாகக் காலூன்றியிருந்த இந்திய வணிக வர்க்கத்தை எதிரியாகக் கண்டது. இலங்கையின் வணிகச் சந்தையை இந்தியர்களிடமிருந்து மீட்கும் நோக்குடன் களத்தில் இறங்கியது. இந்திய எதிர்ப்பு வாதத்தின் மூலவர்களாக இவர்கள் அமைந்தனர். அதே நேரத்தில் படித்த இளைஞர் வர்க்கம் ஒன்றும் சிங்களர்கள் மத்தியில் முளைத்தது. இவர்கள் அரசுப் பணிகளி லிருந்து இந்தியர்களை விரட்டி அவ்விடத்தில் அமரத் துடித்தனர். இவ்வாறு வெறுப்புக்கு ஆளான இந்தியர்கள் அனைவரும் இந்தியாவைத் தாயமாகக் கொண்டு, சொத்துக்களை இந்தியாவி லேயே வாங்கிக்கொண்டு, போய் வந்த கொண்டிருந்த வர்க்கத்தி னர் என்பது குறிப்பிடத்தக்கது. சிலருக்குக் குடும்பங்களும்கூட இந்தியாவிலேயே இருந்தது. தமது பூர்வீகத்தை மறந்து இலங்கையையே தாயமாகக் கொண்டு வாழ்ந்திருந்த மலையகத் தமிழர்கள் தொடக்கத்தில் இந்திய எதிர்ப்பு மனநிலையின் இலக்காக இருக்கவில்லை. தவிரவும் பெருந்தோட்டச் சாகுபடிக் கும், அதனடிப்படையிலான பொருளாதாரத்திற்கும் சிங்கள முதலாளிகள் மலையகத் தமிழர்களின் உழைப்பை நம்பி யிருந்தனர். மலையகத் தமிழர்கள் மீதான கொடுஞ் சுரண்டலுக்கு உலக அளவில் எதிர்ப்புத் தொடங்கியதை ஒட்டி அன்றைய பிரிட்டிஷ் இந்திய அரசு 1920, 30களில் 'பயிற்சி பெறாத தொழிலாளர்கள் ஏற்றுமதி'யை தடை செய்த போது இவர்கள் துடித்துப் போகவும் செய்தனர். பின்னாளில் முதலமைச்சர்களான சேனநாயகா, பண்டாரநாயகா எல்லோரும் டெல்லி ஓடிவந்து தடை நீக்கத்திற்காக ஆதரவு திரட்டினர்.

இன்னொரு பக்கம் தொழிற்சங்க இயக்கம் இடதுசாரிப் பரிமாணம் எடுத்ததையும், இந்தியத் தொழிலாளர் பலர் இந்த

இயக்கங்கள்பாற் சென்றதையும், வேலைநிறுத்தப் போராட்டங் களை இவ்வியக்கங்கள் எடுக்க நேர்ந்ததையும் சிங்கள முதலாளிகள் மட்டுமின்றி சிங்கள வலதுசாரி தொழிற்சங்கவாதி களும் அச்சத்துடன் நோக்கினர். தொழிற்சங்கத் தலைவரான ஏ.ஈ.குணசிங்கே முழுக்க முழுக்க ஒரு இனவாத அரசியலை முன்வைத்தார். வெள்ளவத்தை ஆலைத் தொழிலாளிகள் போராட்டத்தில் இந்தியத் தொழிலாளிகள் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டபோது குணசிங்கே சிங்களத் தொழிலாளிகளை வேலைக்கு அனுப்பி வேலைநிறுத்தத்தை முறியடித்தார். சிங்கள முதலாளிமார்களோ இந்தியாவிலிருந்து இறக்குமதியாகும் மார்க்சிய சிந்தனைகள் சிங்கள பவுத்த கலாச்சாரத்தை அழிக்கப்போவதாக அச்சமூட்டினர்.

சிங்கள மக்கள் ஒரு தேசிய இனமாக உருப்பெற்றதின் பின்புலமாக இத்தகைய வர்க்க அடிப்படையும் கருத்தியற் உருவாக்கமும் இருந்ததை நாம் விளங்கிக் கொள்ள வேண்டும். தேசிய இனம் இயற்கையாக உருவாவதல்ல. குறிப்பான அரசியல் நோக்குடன் சமூக மேற்தட்டினரால் கட்டமைக்கப்படுவது என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. மேற்தட்டினர் குறிப்பாக பூர்சுவாக்கள் மத்தியில் உருவாகும் இக்கருத்தியல் அப்பட்டமான இனவாதச் சொல்லாடல்களுடன் பின்னர் கீழிறக்கப்படும். வரலாறு, பண்பாடு ஆகியவை எல்லாம் இந்த நோக்கில் ஆயுதமாகும்.

இந்திய எதிர்ப்பால் கவலையுற்ற இந்திய வணிகர்கள் மற்றும் நடுத்தர வர்க்கத்தினரின் நலனைப் பாதுகாக்க எஸ்.தேசாய் தலைமையில் 'இலங்கை இந்தியர் சங்கமும்', வள்ளியப்பச் செட்டியார் தலைமையில் 'இந்திய சேவா சங்கமும்' உருவாக்கப்பட்டன.

"இந்தியரை வெளியேற்று" முழக்கம் உச்சகட்டத்தை அடைந்த நிலையில் போக்குவரத்துத் துறையில் பணியாற்றிக் கொண்டிருந்த 8000 இந்தியத் தொழிலாளர்களை ஒரு மாத அவகாசத்தில் வெளியேறுமாறு அரசு ஆணையிட்டது. எத்தனை ஆண்டுகள் அவர்கள் பணிபுரிந்தபோதும் ஒரு மாத ஊதியம் மட்டுமே வழங்கப்படும் எனவும் அதுவும்கூட அவர்கள் இந்தியா சென்றடைந்த பின்னரே கொடுக்கப்படும் எனவும் அரசு கறாராகச் சொன்னது.

இந்தப் பிரச்சினையை ஒட்டியும் இலங்கையிலிருந்த இந்திய மேட்டுக் குடியினரின் நலனைக் காக்கவும் ஜவஹர்லால் நேரு

கொழும்புக்கு விரைந்தார் (1939). அப்போது அவர் பிரதமராக இல்லாதபோதும் இப்படியான பேச்சுவார்த்தை மேற்கொள்ளக் கூடிய ஆளுமையுடைய அரசியல் தலைவராக இருந்தார். எனினும் நேருவின் தூது வெற்றி பெறவில்லை. அதற்குள் 4000 போக்குவரத்துப் பணியாளர்கள் திருப்பி அனுப்பப்பட்டு விட்டனர். சினம் கொண்ட நேரு இரண்டு வேலைகளைச் செய்தார். நாடு திரும்பிய கையோடு இந்தியத் தொழிலாளர் ஏற்றுமதியைத் தடை செய்யுமாறு அரசுக்குப் பரிந்துரைத்தார். அரசும் அதை ஏற்று 1939 ஆகஸ்டு 1 அன்று 'பயிற்றப்படாத தொழிலாளர் வெளியேற்றத் தடை'ச் சட்டத்தை நிறைவேற்றியது. அடுத்து இந்தியா திரும்புமுன்னதாக இந்தியத் தலைவர்களை நோக்கி இலங்கை இந்தியர் நலனுக்கான அரசியல் கட்சி ஒன்றைத் தொடங்குமாறு அறிவுரைத்தார். நேருவின் ஆசியுடன் 'இலங்கை இந்திய காங்கிரஸ்' 1939 ஜூலை 15 இரவு 1 மணி அளவில் கொழும்பில் உருவாக்கப்பட்டது. வீ.ஆர்.எம். லட்சுமணன் செட்டியார் அதன் முதல் தலைவர். நாவலப் பிட்டியில் இதன் முதலாவது கிளை உருவாக்கப்பட்டது. இலங்கை இந்திய முதலாளிகளின் அரசியல் கட்சி இப்படித்தான் உருவாகியது.

பூர்சுவாக்களின் மட்டத்தில் உருவாகும் தேசியக் கட்டமைப்பு பின்னர் சாத்தியமான பொருளாதாரக் கோரிக்கையுடன் கீழே இறக்கப்படும். இனவாதக் கருத்தியல் இதில் முக்கிய பங்கு வகிக்கும். அந்த வகையில் இலங்கை இந்திய முதலாளிகளுக்கு தம் கீழ் மலையகத் தமிழர்களை ஒருங்கிணைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இலங்கை இந்தியர் காங்கிரஸ் மலையகத்திற்குள் விரிவாக்கப்பட்டது. முழுக்க முழுக்கத் தொழிலாளர்களாக இருந்த இவர்கள் மத்தியில் இது தொழிற்சங்க வடிவெடுத்தது. அப்பட்டமான வலதுசாரித் தன்மையுடன் அது விளங்கியது என்பதை விளக்க வேண்டியதில்லை. பெருந் தோட்ட உரிமையாளர்களில் ஒருவரான தொண்டைமான் தலைமையில் அது 'இலங்கை இந்திய தொழிலாளர் காங்கிரசாக வும்', பின்னர் 'இலங்கைத் தொழிலாளர் காங்கிரசாகவும்' (1950) வடிவெடுத்தது. மாத்தளை, தெல்தெனிய, தலாத்துலெ முதலான இடங்களில் ஓரளவு நில உரிமையாளர்களாகவும், தோட்டத் தொழிலாளராகவும், வணிகர்களாகவும் நிலைகொள்ளத் தொடங்கியிருந்த இந்திய இலங்கை முதலாளிகள் இந்திய எதிர்ப்பிற்கு எதிரான தேசியவாதத்தில் முன்னின்றனர்.

இதற்கிடையில் இலங்கை இந்திய காங்கிரஸ் இப்படியான ஒரு விரிவாக்கம் மேற்கொள்வது குறித்த அச்சம் சிங்களர் மத்தியில்

உருவாகியது. இதை ஒரு மோசமான இனவெறியாக அவர்கள் மாற்றத் தயங்கவில்லை. வரலாறு முழுவதும் நடைபெற்ற இந்தியப் படையெடுப்புகளும், ஆக்ரமிப்புகளும் அவர்களுக்குக் கைகொடுத்தன. அதேநேரத்தில் மலையகத் தமிழர்களை முற்றாக விரட்டிவிடவும் அவர்கள் தயாராக இல்லை. சுரண்டுவதற்கு அவர்கள் தேவைப்பட்டனர். நூற்றாண்டுகளாகத் தாயகத்தை விட்டு வந்து இலங்கைப் பொருளாதாரத்தைக் கட்டமைத்த அவர்களின் குடியுரிமை, வாக்குரிமை ஆகியவற்றில் சிங்கள அரசியல்வாதிகள் வெற்றிகரமாகக் கைவைத்தனர்.

'சர்வஜன வாக்குரிமை' (அனைவருக்கும் வாக்குரிமை) வழங்கிய டொனமூர் யாப்பின் விளைவாக 1931 தேர்தலில் 1,00,000 இந்திய வம்சாவழியினரும், 1936 தேர்தலில் 1,45,000 பேர்களும், 1939ல் 2,25,000 பேர்களும் வாக்குரிமை பெற்று குறிப்பிடத்தக்க அளவிற்கு தமது பிரதிநிதிகளைச் சட்டமன்றத் திற்கு அனுப்பியிருந்தது சிங்கள முதலாளிகளின் கண்களை உருத்திற்று. மலையத் தமிழர் தலைவர்களும் இடதுசாரித் தொழிற்சங்கத்தினரும் தேர்வு செய்யப்பட்டதை அவர்களால் செரிக்க இயலவில்லை. குறிப்பாக கண்டிய சிங்கள முதலாளிகள் இதை ஏற்கவில்லை. முன்னதாக சர்வஜன வாக்குரிமை தொடர்பாக டொனமூர் ஆணையம் ஆய்வு செய்த போதே (1929) மலையகத் தொழிலாளருக்கு வாக்குரிமை அளிப்பதைச் சிங்கள அரசியலார் எதிர்த்தது குறிப்பிடத்தக்கது. சிங்களர் மட்டுமல்ல அன்றைய தமிழர் தலைவர்களும் எதிர்த்தனர். சேர்.பொன். அருணாசலம் 'தோட்டக் கூலிக்கு' வாக்குரிமை அளிக்கக் கூடாது என வெளிப்படையாகவே பேசினர்.

1937ல் உள்ளூராட்சித் தேர்தலில் தோட்டத் தொழிலாளர் களின் வாக்களிக்கும் உரிமை புதிய சட்டமொன்றால் பறிக்கப்பட்டது. 1940ல் 'வாழ்விடத் தெரிவுத் தகைமை'யைப் புகுத்தி குடியுரிமைப் பதிவில் பல நிபந்தனைகளை விதித்து மலையகத் தமிழர்களின் வாக்குரிமை குறைக்கப்பட்டது. இப்படியாக 1943ல் மலையக வாக்காளர் எண்ணிக்கை 1,68,000 ஆகக் குறைக்கப்பட்டது.

டி.எஸ்.சேனநாயகாவின் ஆட்சிக் காலத்தில் இயற்றப்பட்ட மூன்று சட்டங்கள் (1. குடியுரிமைச் சட்டம்-1948; 2. இந்தியா-பாகிஸ்தானியர் வதிவிடச் சட்டம்-1949; 3. தேர்தல் திருத்தச் சட்டம், 1949) மலையகத் தமிழர்களின் வாழ்வாதாரக் குடியுரிமைகளைப் பறித்தன. தமிழ் மற்றும் முஸ்லிம்

பெயர்களைத் தாங்கியவர்கள் குடியுரிமை உள்ளவர்களாகக் கருதப்பட மாட்டார்; தமது தந்தை அல்லது தந்தைவழிப் பாட்டன் இலங்கையில் பிறந்தவர் என நிரூபிப்பவர்களுக்கு மட்டுமே குடியுரிமை வழங்கப்படும் முதலான நிபந்தனைகளை அவை கொண்டிருந்தன.

அமைச்சர் பதவி பெற்ற தமிழர் தலைவர் ஜி.ஜி.பொன்னம்பலத்தின் ஒப்புதலுடன் இது சட்டமாக்கப்பட்டதை எதிர்த்து தந்தை செல்வா 'இலங்கைத் தமிழர் காங்கிரசை' விட்டுவிலகி தமிழரசுக் கட்சியைத் தொடங்கினார் (1949). எனினும் 1956 பண்டா-செல்வா ஒப்பந்தத்தின்போது அவரும் மலையகத் தமிழருக்கான குடியுரிமைக் கோரிக்கையைக் கைவிட்டார். இடதுசாரிகளும், பின்னாளில் நா.சண்முகதாசன் உட்பட, இதைப் பெரிதாகக் கருதவில்லை. இடதுசாரிகளைப் பொருத்தமட்டில் குடியுரிமை எல்லாம் ஒரு பிரச்சினையாக இருக்கவில்லை. கூலி உயர்வை மட்டுமே தொழிலாளர் பிரச்சினையாகக் கருதினர். மேற்குறிப்பிட்ட மூன்றாவது சட்டம் குடியுரிமை உள்ளவர்களுக்கு மட்டுமே வாக்குரிமை என்றதால் குடியுரிமையற்ற மலையகத் தமிழர்கள் வாக்குரிமையையும் இழந்தனர் (1949).

புதிய சட்டம் விதித்த கெடுவான 1951 ஆகஸ்டு 5க்குள் 8,25,000 மலையகத் தமிழர்கள் குடியுரிமை கோரி விண்ணப்பித்தனர். இவர்களில் 50 சதத்திற்கும் மேற்பட்டோர் இந்தியாவையே அறிந்திராதவர்கள். எனினும் இந்திய பாஸ்போர்ட் வைத்திருந்த 1,84,771 பேர் 1964க்குள் இந்தியாவுக்கு அனுப்பப்பட்டனர். 11 வருட பரிசீலனையினூடாக 1962 வரை 1,34,188 பேர்களுக்கு (16.2 சதம்) மட்டும் குடியுரிமை வழங்கப்பட்டது. இந்த இரு வகையிலும் அடங்காதவர்கள் 'நாடற்றவர்கள்' என்கிற பிரிவின் கீழ் கொண்டு வரப்பட்டனர். 1949 வரை குடியுரிமையுடன் வாழ்ந்தவர்கள் இவர்கள்.

இவர்களையும் ஒழித்துக் கட்டுவதற்கான முயற்சியை அடுத்தடுத்த இலங்கை அரசுகள் தொடர்ந்தன. 1960கள் இந்திய அரசு வெளியுறவுக் கொள்கையில் பல தோல்விகளைச் சந்தித்த காலகட்டம். அண்டை நாடுகள் யாவற்றுடனும் சுமூக உறவை அது பேணவில்லை என்பது வெளிப்பட்ட காலகட்டம். உகாண்டாவிலிருந்தும் (28,755) பர்மாவிலிருந்தும் (3,00,000) இந்தியர்கள் விரட்டியனுப்பப்பட்டபோது மௌனமாக இந்தியா அதை ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. இலங்கை இந்தியர்களையும் திருப்பி அழைத்துக் கொள்ளுமாறு சிரிமாவோ

பண்டாரநாயகா நேருவுக்கு அழுத்தம் கொடுத்தார். நேருவின் மறைவிற்குப் பின் 1964 அக்டோபர் 30 அன்று மலையகத் தமிழரின் தலையில் இடியாய் இறங்கிய சிரிமா-சாஸ்திரி ஒப்பந்தம் கையெழுத்தானது.

இந்த ஒப்பந்தப்படி 1964 செப்டம்பர் 25 தேதியில் இலங்கையிலிருந்த இந்தியர்களின் எண்ணிக்கை 10,08,269 பேர். இதில் இந்திய பாஸ்போர்ட் வைத்திருந்த 28,269 பேர் போக மீதி 9,75,000 பேர். இதில் 5,25,000 பேருக்கு அடுத்த 15 ஆண்டுகளில் இந்தியா குடியுரிமை வழங்க வேண்டும். அதே காலகட்டத்தில் இலங்கை 3,00,000 பேருக்குக் குடியுரிமை வழங்க வேண்டும். எஞ்சியுள்ள 1,50,000 பேரின் விதியை 1974 ஜனவரியில் தீர்மானிப்பது என்பன இந்த ஒப்பந்தத்தின் சாரம். 1974 சிரிமா-இந்திரா ஒப்பந்தத்தின்படி எஞ்சியவர்களை இந்தியாவும் இலங்கையும் ஒவ்வொரு நாடும் 75,000 என சமமாகப் பங்கிட்டுக் கொண்டன.

எந்த மக்களின் தலைவிதியை இந்த ஒப்பந்தம் தீர்மானித்ததோ அந்த மக்களின் ஒப்புதலின்றி அவர்கள் மீது திணிக்கப்பட்ட அப்பட்டமான மனித உரிமை மீறல் ஒப்பந்தம் இது.

மூன்று லட்சம் பேருக்கு மட்டுமே குடியுரிமை வழங்க இலங்கை இசைந்திருந்த நிலையில் ஏழு லட்சம் பேர் குடியுரிமைக்கு விண்ணப்பித்தனர். இந்திய அரசிடம் நாலு லட்சம் பேர் விண்ணப்பித்தனர். விருப்பம் இல்லாவிட்டாலும் வேறு வழியின்றி விண்ணப்பித்தவர்களே இவர்களில் அதிகம்.

குடியுரிமை மறுக்கப்பட்டவர்கள் அழ அழ ரயிலில் ஏற்றி அனுப்பப்பட்டனர். அவர்களை ஏற்றிவந்த ரயில் 'அழுகை கோச்சி' என்றே அழைக்கப்பட்டது. இவர்களில் பலர் இந்தியாவை ஏற்கனவே பார்த்திராதவர்கள். சராசரியாக இவர்களிடமிருந்த சொத்து ரூ. 4,000. 15 சதத்தினர் மட்டுமே 10,000 ரூ. மதிப்புள்ள சொத்துக்களை வைத்திருந்தனர். இவர்களில் 85 சதம் பேர் கல்வியற்றவர்கள். வேறு தொழிலறியாதவர்கள். பெரும்பாலும் அடித்தளச் சாதியினர். இங்கே வந்து அகதிக் குடியிருப்புகளில் 45 ஆண்டுகளாக வசித்துவரும் பர்மா-இலங்கை அகதிகள் வாழ்க்கையை நான் உங்களுக்கு விளக்கிச் சொல்லத் தேவையில்லை. புலப்பெயர்வின் கொடுமைகளை வெறும் எண்களால், எண்ணிக்கைகளால் உணர்த்திவிட இயலாது.

தொடர்ந்தும் மலையகத் தமிழர்களின் நிலை புறக்கணிக்கப்பட்டது. தொடர்ந்தவை இனவாதம் அதன் உச்சத்தை எட்டியிருந்த காலங்கள் என்பதைச் சொல்ல வேண்டிய தில்லை. இரண்டாந்தரக் குடிமக்களாக நடத்தப்பட்ட மலையகத் தமிழர்களுக்கு நிதி ஒதுக்கீட்டில் ஒதுக்கப்படும் தொகைகள் கூடச் செலவிடப்படாத அவலம், பள்ளி, மருத்துவமனைகள் இயங்காத நிலை என அவர்கள் அனுபவித்த துன்பங்கள் ஏராளம். 1989-92 ஆண்டுகளில் எல்லோருக்கும் வழங்கப்பட்ட 675 ரூ. சம்பள உயர்வு மலையகத் தமிழர்களுக்கு மட்டும் மறுக்கப்பட்டது. அரசு தன் வசமிருந்த தோட்டங்களை 99 ஆண்டு குத்தகைக்கு தனியார்களுக்கு விட்டு தொழிலாளரின் வைப்பு நிதி முதலான உரிமைகளைப் பறித்தது. எல்லாவற்றையும் விரித்துச் சொல்ல இங்கு இடமில்லை. ஒரு சில முக்கிய போக்குகளை மட்டும் இங்கே அடையாளம் காணலாம்.

1. தோட்டங்கள், பள்ளிகள் ஆகியவற்றை தேசியமயமாக்கல், அதாவது நாட்டுடைமை ஆக்குதல் என்பது ஒரு முற்போக்கான செயல்பாடு என்பதே நம் புரிதல். தனியார்களிடமிருந்து அரசுக்கு உரிமை செல்லும்போது அது தொழிலாளருக்கும் பயனாளர்களுக்கும் நன்மை பயக்கும் என்பதே எதிர்பார்ப்பு. ஆனால் இனவாதத் தின்கீழ் எதுவுமே நீதியாக இராது, எல்லாமே இனவாதச் சாய்வு பெறும் என்பதற்கு எடுத்துக்காட்டுகளாக இந் நிகழ்வுகள் அமைந்தன.

1970களில் பெருந்தோட்டங்கள் பல இவ்வாறு தேசவுடைமை யாக்கப்பட்டன. பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் இது ஒரு ஏகாதிபத்திய எதிர்ப்பு கோரிக்கையாக முன்வைக்கப்பட்டது. ஆனால் 70களில் இந்த முழக்கமும் செயல்படுத்தப்பட்டபோது தேசியமயமாக்கல்=சிங்களமயமாக்கல் என்பதாகவும் மலையகத் தமிழர்களுக்கு எதிரானதாகவும் அமைந்தது. மலையக மக்கள் தேயிலைத் தோட்டங்களில் கொடுமையாகச் சுரண்டப்படுவதை உலக நாடுகள் எதிர்த்ததை ஒட்டி தேயிலைத் தோட்ட முதலாளிகள் அவர்களது வாழ்நிலையை உயர்த்த வேண்டும் என்கிற நிலை 1970களில் ஏற்பட்டது. இதற்கு சுமார் ஆயிரம் மில்லியன் பவுண்ட் செலவாகும் எனக் கணக்கிட்ட வெளிநாட்டு நிறுவனங்கள் அரசின் தேசியமயமாக்கல் கொள்கையை ஏற்கச் சம்மதித்தன.

இந்த அடிப்படையில் 1972ல் இயற்றப்பட்ட முதலாவது காணிச் சீர்திருத்தச் சட்டத்தின்படி பூண்டுலோயா முதலான பகுதிகளில் சுமார் 80,000 ஏக்கர் தேயிலைத் தோட்டங்கள்

தேசவுடைமையாக்கப்பட்டன. வாக்குறுதிகளை மீறி இக் காணிகளில் குடியிருந்த, பணிபுரிந்த மலையகத் தமிழர்கள் விரட்டப்பட்டு அவை சிங்களக் கிராமவாசிகளுக்குப் பிரித்துக் கொடுக்கப்பட்டன. 1976ல் கம்பளை புஸ்ஸல்லாவைக்கு அருகிலுள்ள டெல்டா சங்குவாரி தோட்டங்களில் ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சி தலைவர் ஜயரத்னாவின் ஆட்கள் அரசாங்க வாகனங்களில் சென்று மலையகத் தமிழர்களின் வீடுகளைத் தாக்கித் தீக்கிரையாக்கினர். சிரிமாவோவின் மகன் அனுரா பண்டாரநாயகா சிங்களரின் நிலத்தை மீட்ட கண்டிய சிங்கள வீரன் 'கொப்பே கடுவே'வாகத் தன்னை முன்னிறுத்திக் கொண்டு செயல்பட்டார். டெவன் தோட்டத்தில் இவ்வாறு சிங்களவருக்குக் காணிப் பகிர்வு செய்ய முயற்சிக்கப்பட்டபோது அதை எதிர்த்து நின்ற மலையகத் தமிழர்கள் மீது துப்பாக்கிச் சூடு நடத்தப்பட்டு சிவனு லட்சுமணன் என்ற இளைஞர் பலியானார்.

தொடர்ந்து தோட்ட வேலைக்குப் பழக்கமற்ற சிங்கள கிராமவாசிகள் அதில் ஈடுபடுத்தப்பட்டனர். நிர்வாகப் பொறுப்பு களில் நியமிக்கப்பட்டனர். நட்சா குடியேற்றத் திட்டம், நகர விரிவாக்கத் திட்டம், கிராமப்புற தோட்டப்புற ஒன்றிணைப்பு, மீன் காடாக்கம், மாதிரி கிராம உருவாக்கம் முதலான பெயர்களில் சிங்கள விரிவாக்கம் தொடர்ந்தது.

1963ல் தனியார் பாடசாலைகள் தேசியமயமாக்கப்பட்ட போதும் இதுவே நடந்தது. தமிழ் அடையாளங்களுடன் திகழ்ந்த தோட்டத்துப் பாடசாலைகள் நாட்டுடைமையாக்கப்பட்டபின் அவை சிங்கள, பவுத்த பாடசாலைகளாக்கப்பட்டன.

இங்கொன்றைச் சொல்ல வேண்டும். இவ்வாறு மலையகத் தமிழர்களை விரட்டி தோட்டக் காணிகளை சிங்களவருக்குப் பகிர்ந்தளிக்கும் முயற்சிகள் 1950களிலும் நடைபெற்றன. உருளவள்ளி தோட்டத்தில் இம் முயற்சியை டி.எஸ்.சேனா நாயக்கா அரசு மேற்கொண்டபோது தோட்டத் தொழிலாளர் சங்கம் வேலை நிறுத்தத்தில் குதித்தது. தொண்டமானின் இ.தொ.க. தலைமை ஏற்றது. உச்ச நீதிமன்றத்தில் அது தொடர்ந்த வழக்கு தோற்றதை ஒட்டி லண்டனிலிருந்த 'பிரிவு கவுன்சிலுக்கு' மேல் முறையீடு செய்து வெற்றி பெற்றது. இவ் வழக்கினால் ஏற்பட்ட பெருஞ் செலவை தொண்டமான் ஏற்றார். தனது தோட்டங்களில் ஒன்றை விற்றுச் செலவழித்தார். பெரிய அளவில் அதற்கு விளம்பரம் செய்துகொண்டார். மலையக மக்களின் தனிப்பெருந் தலைவராக அவர் மாறிய கதை இதுவே. அன்று தென் கிழக்காசியாவின் மிகப்பெரிய தொழிற்சங்கம் அது.

இலங்கைப் பொருளாதாரத்தில் 80 சதம் இவர்களின் உழைப்பை நம்பியிருந்தது. தொண்டமான் இந்தப் போராட்டத்தை வேலை நிறுத்தப் போராட்டமாக்கி அரசைப் பணிய வைக்காமல் நீதிமன்றப் பாதையைத் தேர்வு செய்து தன் செல்வாக்கைப் பெருக்கிக் கொண்டார்.

2. சென்ற காலங்களில் நடைபெற்ற இனக் கலவரங்களின் போது வட-கிழக்குத் தமிழர்கள் மட்டுமே பாதிக்கப்பட்டுள்ள தாக நாம் நினைத்துக் கொண்டுள்ளோம். ஒவ்வொரு முறையும் பெரிய அளவில் மலையகத் தமிழரும் பாதிக்கப்பட்டுள்ளனர். அகதிகளாக்கப்பட்டுள்ளனர். இரத்தினபுரி, கோகாலை, காலி, மாத்தறை, கண்டி ஆகியன அதிகம் பாதிப்புக்குள்ளாகின. 1958 தொடங்கி இந்தப் பாதிப்புகளை அவர்கள் எதிர்கொண்டனர்.

1958 கலவரத்தில் மலையக மக்கள் அடைந்த பாதிப்பைக் காட்டிலும் 1977 ஆகஸ்டு வன்முறையின்போது அதிகம் பாதிப்படைந்தனர். தன்னிச்சைக் கலவரமாகவன்றி அரசியல் பயங்கரவாதமாக அது அமைந்தது. “நூற்றுக்கணக்கான தமிழ்ப் பெண்கள் பாலியல் வன்முறைக்குள்ளாயினர். ஆயிரக்கணக்கான வீடுகளும், கடைகளும் தீக்கிரையாக்கப்பட்டன. பலர் படுகொலை செய்யப்பட்டனர். 50,000 பேர் அகதிகளாயினர்” என்கிறது ஈரோஸ் வெளியிட்ட நூல்.

1981 ஆகஸ்டு வன்முறை மலையகத் தமிழரை மேலும் மோசமாகப் பாதித்தது. இம்முறை கலவரங்களைத் தொழில் ரீதியாக மேற்கொள்ளக்கூடிய காடையர்களும் போலீசாரும் வன்முறையில் ஈடுபடுத்தப்பட்டனர். 1,50,000 பேர் அகதிகளாயினர். 17 பேர் கொல்லப்பட்டனர். 30 ஊர்கள் தீக்கிரையாக்கப்பட்டன.

1983 ஜூலைக் கலவரத்தில் லயன் குடியிருப்புகள் பல தீக்கிரையாக்கப்பட்டன. திரிகோணமலையில் இருந்த மலையகத்தினரும் இம்முறைத் தாக்குதலுக்குத் தப்பவில்லை. 450 பேர் கொல்லப்பட்டனர். 1488 வீடுகள், 1049 கடைகள், 10 தேயிலைத் தொழிற்சாலைகள், 44 லயன் குடியிருப்புகள் அழிக்கப்பட்டன. 29,682 பேர் அகதிகளாயினர். 1986ல் தலவாக்கெல நகரத்தில் நடந்த தாக்குதலில் 18 கடைகள் தீ வைத்துக் கொளுத்தப்பட்டன.

பாதிக்கப்பட்டவர்களுக்கு எந்தப் பெரிய நிவாரண நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்படவில்லை. 1977 கலவரத் தில் பாதிக்கப்பட்ட மலையகத் தமிழர் பேருந்துகளில் ஏற்றி

வடக்கிற்கு அனுப்பப்பட்டதோடு சரி. தொழிற்சங்கங்களும் பெரிதாக இவர்களைக் கண்டுகொள்ளவில்லை. வடக்கிலுள்ள பூர்வீகத் தமிழர்களும் அவர்களை வேண்டாத விருந்தாளிக ளாகவே எதிர்கொண்டனர். 1981 கலவரத்தில் சப்ரகமுவ மாகாணத்தில் பாதிக்கப்பட்ட மலையகத்தினர் வடக்கே செல்ல ஆர்வம் காட்டவில்லை. பொகவந்தலா போன்ற மத்திய மலை நாட்டை நோக்கியே அவர்கள் நகர்ந்தனர். அப்படி ஓடிய அகதிகள் வழிமறிக்கப்பட்டு இராணுவ ட்ரக்குகளில் ஏற்றி அவர்களின் விருப்பத்திற்கு மாறாக துப்பாக்கி முனையில் பழைய இடங்களுக்கு அனுப்பி வைக்கப்பட்டனர்.

வடக்கில் சரண் புகுந்திருந்த அகதிகளுக்கு கே.சி. நித்தியானந் தாவின் 'அகதிகள் புனருத்தாரண இயக்கம்' (TRO) மறைந்த எஸ்.ஏ. டேவிட் அவர்களின் 'காந்திய இயக்கம்' ஆகியனவே அளப்பரிய சேவைகளை ஆற்றின. காந்திய இயக்கத்தின் செயலாளர் ராஜசுந்தரம் வெலிக்கடைச் சிறைப் படுகொலையின் போது கொல்லப்பட்டார். இன்றுங்கூட மலையகத் தமிழர்கள் மீதான தாக்குதல்கள் ஓயவில்லை. 1978ல் வேல்வத்தை தோட்டத்திலும் 2001ல் பாம்காடன் தோட்டத்திலும், 2006ல் பம்பேகம தோட்டத்திலும் கலவரங்கள் வெடித்துள்ளன.

வடகிழக்கில் ஆயுதப் போராட்டம் கூர்மையடைந்தபோது அத்துடன் மலையகத் தமிழர்கள் தம்மை இணைத்துக் கொள்ளாததை நாம் புரிந்து கொள்வதற்கு இந்த வரலாறு தெரிந்திருக்க வேண்டும். எனினும் ஆயுதப் போராட்டம் உச்சமடைந்தபோது இயக்கங்களைச் சார்ந்த தேடப்பட்டோர் மலையகத்தில் அடைக்கலம் புகுந்தபோது மலையகத்தினர் அவர்களை ஆதரிக்கவே செய்தனர்.

நமக்குச் சில கேள்விகள் எஞ்சுகின்றன. சிரிமாவோ-சாஸ்திரி ஒப்பந்தத்தின்போதும், மலையகத் தமிழர்கள் அழஅழ இந்தியாவிற்கு அனுப்பப்பட்ட போதும் ஏன் தமிழகத்தில் பெரிய அனுதாப அலைகள் வீசவில்லை? மலையகத் தமிழர் குறித்த இந்த வரலாறுகளை எல்லாம் உங்களுக்கு யாராவது சொன்னதுண்டா?

இன்று ஒரு புதிய அரசியல் தீர்வு உருவாகும்பட்சத்தில் மலையகத் தமிழரின் இப் பிரச்சினைகள் கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். அவர்கள் முழுமையான குடிமக்களாக அனைத்து உரிமைகளுடனும் வாழ வழி வகுக்கப்பட வேண்டும்.

# புலிகளுக்குப் பிறகு

இந்தக் கட்டுரையை நான் எழுதத் தொடங்குகிறபோது 'கர்னல்' கருணா எனப்படும் வினாயகமூர்த்தி முரளிதரன் ஆளும் கட்சியில் சேர்ந்து அமைச்சராகப் பதவிப் பிரமாணம் ஏற்றுக் கொள்ளும் செய்தி வெளிவந்துள்ளது. எனது கணக்குப்படி அவர் இலங்கையின் 106வது அமைச்சர் என நினைக்கிறேன். தேசிய ஒருமைப்பாட்டுத் துறைக்கு அவர் பொறுப்பேற்றுள்ளார். அவரது திறமையை மெச்சிப் பேசிய ஜனாதிபதி ராஜபக்சே அபிவிருத்தி மற்றும் சமூகநலம் என்கிற அம்சங்களில் கருணாவின் கொள்கை தமது சுதந்திராக் கட்சியின் கொள்கையுடன் பொருந்தி வருகிறது என்று சொல்லியுள்ளார். சில தசாப்தங்களுக்கு முன் மட்டக் களப்பு தொகுதியின் முதலாவது பாராளுமன்ற உறுப்பினர் செ. இராஜதுரை தமிழர் விடுதலைக் கூட்டணியிலிருந்து விலகி ஐக்கிய தேசியக் கட்சியின் சேர்ந்தபோது 'கிழக்கு மாகாணத் தமிழரின் அபிவிருத்திக்காக' இப்படிச் செய்வதாகக் கூறியது நினைவுக்கு வருகிறது.

முல்லைத் தீவுப் பகுதியில் மேலும் மேலும் புலிகளின் ஆடற் களம் சுருங்கிக் கொண்டே போகிறது. வெகு விரைவில் அவர்களின் கதை முடிக்கப்படலாம் எனப் பத்திரிகைகள் ஆரூடங்கள் எழுதுகின்றன. கெரில்லாப் போர்முறைக்குத் தாவலாம் அல்லது வேறு நாடுகளுக்குத் தப்பி ஓடலாம் என்கிற ஊகங்களும் சொல்லப்படுகின்றன. ஸ்ரீலங்காவிலுள்ள ஐ.நா. அவை ஒருங்கிணைப்பாளர் (Resident Humanitarian Co-ordinator-UN) சமீபத்தில் வெளியிட்டுள்ள அறிக்கை ஒன்றின்படி சுமார் 2,00,000 சிவிலியன்கள் போர்ப் பகுதியில் சிக்கிக் கொண்டுள்ளனர். பெரிய அளவில் பெண்கள், குழந்தைகள் இதில் அடக்கம். உணவு, மருந்து, தண்ணீர்ப் பற்றாக்குறைகளால் அவதியுறும் இம்மக்கள் ஒரு பக்கம் இராணுவத் தாக்குதலால் சாகிறார்கள் என்றால் இன்னொரு பக்கம் தப்பி ஓடுபவர்களைப் புலிகள் சுட்டுக் கொல்வதாகவும் அவ்வறிக்கை சொல்கிறது.

ராஜபக்சேவைப் பொருத்தமட்டில் குறைந்தபட்ச சிவிலியன் இழப்புகளுடனே யுத்தத்தை நடத்துவதாக இந்தியாவின் காதில் விழுமாறு அடிக்கடி உரக்கக் குரல் கொடுத்த போதிலும், அவருக்கு எல்லாத் தமிழர்களும் 'பயங்கரவாதிகள்' அல்லது 'பயங்கரவாத ஆதரவாளர்கள்'தான். தமிழ் சிவிலியன்கள் போரின் விளைவாகவே கொல்லப்பட்ட போதிலும், புலிகள் அவர்களைப் பிடித்து வைத்திருப்பதன் விளைவாகவே அது நடக்கிறது எனக் காரணம் சொல்லி இதை 'இனப்படுகொலை' (Genocide) என வரையறுக்க மறுக்கின்றன ஐ.நா. நிறுவனங்கள்.

ஆக, இத்தனை இழப்புகளுக்கும் மத்தியில் இங்கு உடனடியாகவோ, இல்லை சற்றுத் தாமதமாகவோ ஏற்படப் போகிற போர் முடிவு அல்லது போர் நிறுத்தம் இருதரப்பு உடன்பாட்டின் அடிப்படையில் ஏற்படப் போகிற ஒன்றல்ல. மாறாக ஒருதரப்பு வெற்றியின் மீது கட்டப்படுகிற போர்நிறுத்தம். இதன் விளைவுகள் சிங்களவர்கள், தமிழர்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள் இன்னும் பல சிறுபான்மையினர் ஆகியோர் மனநிலையில் என்ன மாதிரி விளைவுகளை ஏற்படுத்தும்? இன்று நாம் கரிசனம் கொள்ள வேண்டிய அம்சம் இதுவே.

இந்தக் கால் நூற்றாண்டுப் போரில் தமிழர்கள் கிட்டத்தட்ட 70,000க்கும் மேற்பட்ட உயிர்கள், உடைமைகள், எல்லாவற்றையும் தொலைத்துவிட்டு நிற்கிறார்கள். உள்நாட்டு இடப் பெயர்வுகள், வெளிநாட்டுப் புலப் பெயர்வுகள், குடும்பச் சிதைவுகள் எல்லாவற்றோடும் ஒரு போரையும் தோற்றுவிட்டு வெறுங்கையோடு நிற்கிறார்கள். வெற்றி பெற்றவர்களின் நிழலின் வாழ வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளனர். அழிந்துபோன கிராமங்கள், இடிந்துபோன பள்ளிகள், மருத்துவமனைகள் எல்லாம் இனி புனர் நிர்மாணம் செய்யப்பட வேண்டும்.

இன்னொரு பக்கம் வெற்றிப் பெருமிதம் இனவாத உணர்வை அதன் உச்சத்திற்குக் கொண்டு நிறுத்தியுள்ளது. "கொழும்பு முதல் திரிகோணமலை வரை, பாயிண்ட் பெட்ரோ முதல் டோன்ட்ரா ஹெட் வரை ஒவ்வொரு வீட்டு உச்சியிலும் சிங்கக் கொடி பறக்கும் நாள் வெகு தொலைவில் இல்லை" எனக் கொக்கரிக்கிறார் ராஜபக்சே (ஜன. 17, 2009). இராணுவ தளபதி சரத் பொன்சேகா இரண்டாண்டுகட்கு முன்பே கனடா இதழ் ஒன்றிற்கு அளித்த பேட்டியில் இது சிங்களவர்களின் நாடு, தமிழர்கள் இதை உணர்ந்து நடந்து கொள்ள வேண்டும் என அறிவுரை பகர்ந்தார். அதிகாரப் பரவல் தொடர்பாக 2006ல் அமைக்கப்பட்ட

அனைத்துக் கட்சி பிரதிநிதிகள் குழுவின் (APRC) முன் கருத்துரை வழங்கும்போது 'ஜாதீய ஹெல உருமய' எனப்படும் பிக்குகளின் கட்சி சார்பாக, 'தமிழர்களின் தாய்நாடு (இந்தியாவிலுள்ள) தமிழ்நாடுதான். இங்கே அவர்கள் சிறுபான்மையினர் மட்டுமே' எனக் கூறப்பட்டது. இக்கட்சியின் பிரதிநிதியாக அமைச்சரவையில் இடம் பெற்றுள்ள சம்பில்கா ரணவகே, "சிங்களர்கள் மட்டுமே இந்நாட்டின் குடிமக்கள். மற்றவர்கள் எல்லோரும் இங்கே வருகை புரிந்தவர்களே (Visitors). பவுத்தத்தின் அடிப்படையான கருணையின் விளைவாக அவர்களின் வருகையை நாங்கள் எதிர்க்கவில்லை. இந்தக் கருணையை அவர்கள் என்றென்றைக்குமானதாக எடுத்துக் கொள்ளக் கூடாது. எங்கள் மன்னர்கள் வணிகம் செய்வதற்கு அனுமதி அளித்ததாலேயே இங்கே முஸ்லிம்கள் வந்தனர். மொகலாயப் படையெடுப்புக்கு அஞ்சி இங்கே தமிழர்கள் தஞ்சமடைந்தனர். இவர்கள் எல்லோரும் இன்று நன்றி மறந்து நின்கின்றனர்" என மிகச் சமீபத்தில் குறிப்பிட்டார் (Daily Mirror, 16 அக்., 2008).

சென்ற வாரத்தில் இணையத் தளத்தில் இப்படியொரு வாசகத்தைப் பார்த்தேன். "சிங்களவர்கள் இன்று தமிழ்ச் சமூகத்திடம் எதிர்பார்ப்பது என்னவெனில், ஒற்றை ஸ்ரீலங்கா என்கிற கொள்கைக்கு மனப்பூர்வமாக விசுவாசம் காட்டுவதைத் தான். இந்தத் தீவு எல்லா மக்களுக்குமானது. இனத்தாயகம் (ethnic homeland) எனச் சொல்லி 'ஒற்றை இனநிலப் பகுதி'களை (mono ethnic regions) யாரும் கோரக் கூடாது". அரசியல் தீர்வு பற்றி எழுதப்படும் கட்டுரைகள் எல்லாம் இந்தியாவைப் போல ஒரு கடுமையான பிரிவினை எதிர்ப்பு தடைச் சட்டம் இயற்றப்பட வேண்டும் என்றுதான் தொடங்குகின்றன. சுய நிர்ணய உரிமை என்றெல்லாம் கூட இன்று யாரும் வாய் திறக்க முடியாது.

இப்படி நிறையச் சொல்லலாம். மாகாண சபைகளுக்கான தேர்தல் இந்த பிப்ரவரியிலேயே நடந்திருக்க வேண்டியது. வெகு விரைவில் இந்தத் தேர்தலும் அதற்குப்பின் ஜனாதிபதி தேர்தலும் வர உள்ளன. இந்த இராணுவ வெற்றியை இனவாதப் பெருமையாக்கி வாக்குகளாகக் குவித்துக் கொள்ள ஸ்ரீலங்கா சுதந்திராக் கட்சி தயங்காது. ஜாதிய ஹெல உருமய, ஜனதா விமுக்தி பெரமுனா முதலான இனவாதக் கட்சிகளும் அதைத்தான் செய்யப் போகின்றன. ஆக ஸ்ரீலங்காவின் ஒவ்வொரு மக்கட் பிரிவும் மற்றவைகளிலிருந்து முற்றாக விலகி (polarisation) ஒதுங்கி நிற்கும் நிலைக்கு இன்று வந்துள்ளன. இந்தச் சூழல் தமிழ் மக்களுக்கு மட்டுமின்றி சிங்களப் பெரும்பான்மையினருக்கும்

ஜனநாயகத்தையும் அடிப்படை மனித உரிமைகளையும் மறுப்பதற்கே கொண்டுவிடும்.

1948ல் ஸ்ரீலங்கா சுதந்திரமடைந்தபோது இந்தியாவைப் போலன்றி பெரும் போராட்டங்கள், பிளவுகள், இனப்படு கொலைகள், மதக் கலவரங்கள் என்றெல்லாம் இல்லாமல் ஒப்பீட்டளவில் அமைதியாக அது நடந்தேறியது. மனித வளர்ச்சி நிலை, பொருளாதாரம் ஆகிய அம்சங்களிலும் கூட அன்று சிங்கப்பூர், தென் கொரியா முதலான நாடுகளுக்கு அது ஒரு 'மாடலாக' இருந்தது. பிற ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளைக் காட்டிலும் வளர்ச்சி நிலையில் உயர்ந்திருந்தது. ஆனால், இன்று ஸ்ரீலங்கா தனது 60ம் சுதந்திர நாளைக் கொண்டாடியபோது அது போரினால் சீரழிந்த ஒரு நாடு. 25 ஆண்டு கால சிவில் யுத்தம் அதன் பொருளாதாரத்தையும் அகக் கட்டுமானங்களையும் மட்டும் அழித்துவிடவில்லை. வீங்கிப்போன ஒரு அதிகார வர்க்கம், ஊதிப்போன ஒரு அமைச்சரவை (106 பேர்), ஒப்பிடச் சொல்ல இயலாத ஊழல், குடும்ப ஆட்சி, இராணுவத்தின் ஆசியுடன் வெளிப்படையாக இயங்கும் கொலைப் படைகள், ஆள் கடத்தல்கள், சித்திரவதைகள், பாலியல் வன்முறைகள், மனித உரிமை மீறல்கள்... இதுதான் இன்றைய ஸ்ரீலங்கா. 'நாட்டெல்லைகள் இல்லாப் பத்திரிகையாளர்கள்' (Reporters without borders) என்னும் அமைப்பு ஒன்று சமீபத்தில் வெளியிட்ட அறிக்கை ஒன்றின்படி (BBC News, 2008) உலகிலுள்ள ஜனநாயக நாடுகளிலேயே பத்திரிகைச் சுதந்திரத்தில் ஆகக் கடைசியாக உள்ள நாடு ஸ்ரீலங்கா.

'Fund for Peace' என்னும் அமைப்பும் 'Foreign Policy' என்னும் இதழும் நடத்திய கணக்கெடுப்பில் 'தோல்வியுற்ற அரசுக்கான குறியெண்'களின் (Failed state Index) ஸ்ரீலங்காவின் இடம் 20 எனக் கண்டறியப்பட்டுள்ளது (2008). சுமார் 12 தரவுக்குறி (indicators) களின் அடிப்படையில் கணக்கிடப்படும் குறியெண் இது. ஒரு தனியார் தொலைக்காட்சி நிறுவனம் ஆயுதம் தாங்கிய 20 குண்டர்களால் வெடி வைத்துக் தகர்த்து 2 பில்லியன் டாலர் இழப்பு ஏற்படுத்தப்பட்டதுடன் தொடங்கியது 2009ம் ஆண்டு. அடுத்த இரண்டு நாட்களில் 'மோட்டார் சைக்கிள் ஸ்குவாட்' எனச் சொல்லப்படும் கொலைப் படையினரால் பலரின் கண்முன் லசந்தா விக்ரமதுங்கா என்கிற ஸ்ரீலங்காவின் தலைசிறந்த பத்திரிகையாளர் சுட்டுக் கொல்லப்பட்டார். ராஜபக்சே ஆட்சிக்கு வந்தபின் தமிழர் தேசிய கூட்டணியின் (TNA) மூன்று பாராளு மன்ற உறுப்பினர்கள் கொல்லப்பட்டுள்ளனர். ஈராக்கைக்

காட்டிலும் பத்திரிகையாளர்களுக்கு ஆபத்தான நாடு இலங்கை என இன்று கூறப்படுகிறது.

ஒரு சிறு கும்பலிடம் அனைத்து அதிகாரங்களும், முடிவெடுக்கும் உரிமைகளும் குவிந்துள்ளன. ஜனாதிபதியின் இரு இளைய சகோதரர்கள் பேசிலும் கோத்தபயாவும் இன்று இலங்கையின் மிக முக்கியமான அதிகார மையங்கள். பாராளு மன்ற உறுப்பினரான பேசில் ஜனாதிபதியின் எண்ணற்ற ஆலோசனைக் குழுக்களின் உறுப்பினர். பாதுகாப்புத் துறைக்குப் பொறுப்பான கோத்தபயா இன்று இராணுவத் தீர்வைத் தவிர வேறு வழிமுறைகளுக்கே இடமில்லை என முனைப்புடன் இயங்குபவர். மூத்த சகோதரர் சமல் ஒரு அமைச்சர். அப்புறம் இராணுவ தளபதி சரத் பொன்சேகா, பிரதமர் ரத்னஸ்ரீ விக்ரமநாயகா, ஜாதிய ஹெல உருமயாவின் சம்பில்கா ரணவகே ஆகியோரோடு ஹாரி ஜெயவர்தனே, சஜின் வாஸ் குணவர்தனே முதலான கார்ப்பரேட் முதலாளிகள் இவர்கள்தான் இன்று இலங்கை அரசைக் கையில் வைத்திருப்பவர்கள். இவர்கள் வைத்ததுதான் அங்கே சட்டம்.

போர் மிகப்பெரிய அழிவுகளுக்கு மட்டுமல்ல, ஊழல் களுக்கும் வழிவகுத்துள்ளது. புலிகளின் மிக எளிய தயாரிப்பான, ஒப்பீட்டளவில் மெதுவாகச் செல்லக்கூடிய 'செஙனார்' விமானம் கொழும்பில் தாக்குதல் நடத்தியதை ஒட்டி உலகின் மிக நவீனமான, அதிவேக மிக் 29 விமானங்கள் ஐந்து வாங்கப் பட்டதில் 8 பில்லியன் இலங்கை ரூபாய்கள் அளவு ஊழல் நடந்துள்ளது. முன்னாள் கப்பற் படை தளபதி தயா சாந்தகிரி மீது இன்று ஊழல் விசாரணை நடந்து கொண்டுள்ளது. இஸ்ரேலி லிருந்து 'ஆர்டிலெரி' துப்பாக்கிகள் வாங்குவதில் 400 மில்லியன் இலங்கை ரூபாய்கள் 'இழப்பு' ஏற்பட்டுள்ளதாகக் குற்றம் சாட்டப்பட்டுள்ளது. தற்போதைய தளபதி வைஸ் அட்மிரல் வசந்த கனங்கோடா மீதும் இராணுவ 'சோனார்' கருவி வாங்கிய வகையில் 56 மில்லியன் இலங்கை ரூபாய்கள் ஊழல் குற்றச்சாட்டு உள்ளது.

அரசு வசம் இருந்த ஓய்வூதிய நிதி, 'பாங்க் ஆப் சிலோன்' எனப்படும் அரசு வங்கி ஆகியவற்றிலிருந்து 3 மில்லியன் ரூபாய்கள் கடன் பெற்று ஜனாதிபதியின் பெயரில் தொடங்கப் பட்டுள்ள 'மிகின் ஏர்வேய்ஸ்' என்னும் அரசு விமான நிறுவனம் நான் சற்று முன் குறிப்பிட்ட இரு கார்ப்பரேட் முதலாளிகளால் நிர்வகிக்கப்பட உள்ளது. லஞ்ச ஊழல் விசாரணையில் முனைப்

பாக இருந்ததற்காக விசாரணை ஆணையத் தலைவர் வியசேனா ரணசிங்கேவை அப்பதவியிலிருந்து நீக்கியுள்ளார் ராஜபக்சே.

இனவாத உணர்வில் கட்டமைக்கப்பட்டுள்ள இன்றைய இலங்கை அரசை அரசியல் ஆய்வாளர்கள் 'இனவாத ஆட்சி' (ethnocracy) என்கின்றனர். Ethnocentric democracy, Illiberal democracy என்கிற கருத்தாக்கங்களும் பயன்படுத்தப்படுகின்றன. ஆட்சியில் பவுத்த பிக்குகளின் (தேரர்) செல்வாக்கை முன்னிட்டு இதை ஒரு 'தேரராட்சி' என்றும் சொல்வதுண்டு. (பார்க்க : Neil Devotta, Sri Lanka at Sixty, EPW, Jan. 31, 2009). ஆக ஜனநாயகமும், மனித உரிமைகளும் மறுக்கப்படுவது தமிழர்களுக்கு மட்டுமல்ல, சிங்களப் பொது மக்களுக்கும்தான் என்பதை மறந்துவிடக் கூடாது. ஜனநாயகத்தின் அடிப்படைப் பண்புகளான மதச்சார்பின்மை, தாராளவாதம், பன்மைத்துவம், நல்லாளுகை, இன ஒருமைப்பாடு எதுவும் செயல்படாத ஒருஅரசின் கீழ்தான் இன்று இலங்கை மக்கள் எல்லோரும் வாழ்கின்றனர்.

சேனநாயகா முதல் ராஜபக்சே வரை அடுத்தடுத்து வந்த ஆட்சியாளர்கள் அவ்வளவு பேரும் இனவாதத்தை முன் வைத்தே தம் அதிகாரத்தைத் தக்கவைத்துக் கொண்டனர். 1948ல் உருவாக்கப்பட்ட அரசியல் யாப்பின் 29ம் பிரிவு தமிழர்களின் அடையாளத்தை ஏற்று 'குழு உரிமைகளை' (groups rights) அளித்தது. 1972ல் உருவாக்கப்பட்ட ஜனாதிபதி ஆட்சி முறையில் 'குழு உரிமை' மறுக்கப்பட்டு தனிநபர் உரிமைகள் மட்டுமே வழங்கப்பட்டன. இடையில் உருவான 13வது திருத்தம் ஒரு ஒற்றை அரசின்கீழ் அதிகாரப் பரவலுக்கு வழிவகுத்தது. சுமார் 10 ஆண்டு காலம் (1994-2004) அது பரவலாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தபோதும், இன்று அது நீதிமன்றத் தீர்ப்பு ஒன்றின் மூலம் நீக்கப்பட்டுள்ளது.

2006ல் உருவாக்கப்பட்ட 'அனைத்துக் கட்சி பிரதிநிதிகள் குழு'வில் சிறுபான்மை அறிக்கை, பெரும்பான்மை அறிக்கை என இரண்டு அறிக்கைகள் உருவாயின. 11 உறுப்பினர்கள் (மொத்த உறுப்பினர் 17) கையெழுத்திட்ட பெரும்பான்மை அறிக்கை ஒற்றை ஆட்சியின்கீழ் அதிகாரப் பரவல், குழு உரிமை என்கிற வகையில் தமிழர்களின் அடையாளத்தை ஏற்பது என்கிற பரிந்துரைகளைச் செய்துள்ளதாக அறிகிறோம். இத்தோடு சிங்களத்துடன் தமிழுக்குச் சம உரிமை, பவுத்தத்திற்கான சிறப்புரிமை நீக்கப்பட்டு மதச்சார்பற்ற அரசு அமைய வழிவகுக் கும் திருத்தங்கள் ஆகியவற்றை உருவாக்குவதற்கு இன்று உலக

நாடுகள் அழுத்தம் கொடுக்க வேண்டும். அதிகாரப் பரவல் என்பது ஜனநாயகத்துடன் இணைந்ததாக இருத்தல் அவசியம். எந்த ஒரு இன அடிப்படையிலான அடையாளமும் பல உள் அடையாளங் களை ஒடுக்குவதாகவே அமையும். இலங்கையில் கடந்த கால் நூற்றாண்டாக நடைபெறும் சிவில் யுத்தம் இரண்டு ஒற்றை யாட்சிக் கோரிக்கைகளுக்கு இடையேயான போராகவே இருந்து வந்துள்ளது. வெறுமனே ஒற்றையாட்சி அமைதல் மட்டுமே ஜனநாயகத்திற்கான உத்தரவாதமாக முடியாது.

வடக்கு-கிழக்கு மாநில ஒருங்கிணைவு என்கிற 80களின் கோரிக்கையை இன்று தமிழ் பேசும் மக்கள் எந்த அளவு ஏற்கிறார்கள் என்கிற மதிப்பீடும் இன்று தேவையாகிறது. முஸ்லிம்கள், கிழக்குப் பகுதியினர், தலித்கள் ஆகியோரின் கருத்துக்களை அறிய பொது வாக்கெடுப்பு ஒன்றும் தேவை யாகிறது. இதெல்லாம் இன்று எந்த அளவு உடனடிச் சாத்தியம் என்கிற ஐயம் இயல்புதான். ஆனால் இது குறித்த விவாதம் ஒன்று தேவை. இந்த விவாதத்திற்கான தேவையை இரு இன மக்களும் உணர வைப்பதில் இரு இனங்களையும் சேர்ந்த அறிவுஜீவிகள், ஜனநாயக சக்திகள், இடதுசாரிகளின் பங்கு இன்று முக்கிய மாகிறது. துருவங்களாக ஒதுங்கி நிற்கும் இனங்களிடையே ஒரு 'பகை மறப்பு' (Reconcilation) தேவைப்படுகிறது.

புலிகள் ஒழிக்கப்படுவதோடு பிரச்சினை முடிந்துவிடப் போவதில்லை. ஆனால் அப்படித்தான் ராஜபக்சே அரசு சொல்லி வருகிறது. புலிகளின் சில நடவடிக்கைகளின் அடிப்படையில் அவர்களைப் 'பயங்கரவாதிகள்' என ராஜபக்சே அரசு வரையறுப் பதை இன்று உலகம் ஏற்றுக் கொண்டுள்ளது. அப்படியே பார்த்தாலுங்கூட புலிகளின் மறைவோடு 'பயங்கரவாதம்' தான் மறையுமே ஒழிய இனப்பிரச்சினை ஒழிந்துவிடப் போவதில்லை. தமிழர்களின் சில அடிப்படையான உரிமைகள் நிலை நாட்டப் படும் வரை பிரச்சினை தொடரவே செய்யும். பிரச்சினை தொடரும் வரை தமிழர்களுக்கு மட்டுமல்ல, சிங்களவர்களுக்கும் ஜனநாயகமும், மனித உரிமைகளும் வழங்கப்படப் போவதில்லை.

வெற்றிப் பெருமிதத்துடன் இன்று உருவாக்கப்பட்டுள்ள பேரினவாதம் தமிழர்களுக்கு எதிராக மட்டுமல்ல முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள் என மதச்சிறுபான்மையினருக்கும் எதிராக உருப் பெற்றுள்ளது. இந்தியாவில் இன்று உருவாகியுள்ள இந்துத்துவப் பாசிசத்திற்கு இணையான சில நடவடிக்கைகள் இன்று இலங்கை யிலும் மேற்கொள்ளப்படுகின்றன. கிறிஸ்தவ வழிபாட்டு

இல்லங்கள் தாக்கப்படுகின்றன. தொண்டு நிறுவனங்கள் இலக்காக்கப்படுகின்றன. சமீபத்தில் சுற்றுக்கு விடப்பட்டுள்ள ஒரு 'ஈ மெய்ல்' கடிதம் முஸ்லிம்கள் மீது வெறுப்பைக் கக்குகிறது. இஸ்லாமிய அடிப்படைவாதிகள் எனவும் பவுத்தத்திற்கு எதிரானவர்களுடன் இணைந்து 'நாசரிஸ்தான்' ஒன்றை கிழக்கு மாகாணத்தில் உருவாக்கப் போகிறார்கள் எனவும் அது எச்சரிக்கிறது. முஸ்லிம்களுக்கு நிலங்களை விற்க வேண்டாமெனவும், சிங்களப் பெண்களை முஸ்லிம்களுடன் பழகவிட வேண்டாம் எனவும் அது சிங்கள பவுத்தர்களுக்கு வேண்டுகோள் விடுக்கிறது.

இந்த முயற்சிகள் இன்று சிறிய அளவில் இருக்கலாம். ஆனால், போர் முடிவுக்குப் பின் இது விசுவரூபம் எடுக்க வாய்ப்பு உண்டு. வெறுப்பின் அடிப்படையில் கட்டமைக்கப்படும் அடையாள உணர்வுகளுக்கு நிலையான எதிரி என்று ஒன்று கிடையாது. வெறுப்பதற்கு அதற்கு ஏதேனும் ஒரு எதிரி வேண்டும் என்பது மட்டுமே அடிப்படை. மீண்டும் இந்திய எடுத்துக்காட்டு ஒன்றையும் சொல்லலாம். மகாராஷ்டிரத்தின் வலுவான பாசிச அமைப்பான சிவசேனா தொடக்கத்தில் கம்யூனிஸ்டுகளைத்தான் இலக்காக்கியது. பின் அது தமிழர்கள், முஸ்லிம்கள், இன்று வட இந்தியர்கள் எனத் தன் இலக்கை மாற்றிக் கொண்டே போனது. "அவர்கள் கம்யூனிஸ்டுகளைத் தேடி வந்தார்கள். நான் பேசவில்லை. ஏனெனில் நான் கம்யூனிஸ்டு இல்லை..." என்று தொடங்குமே அந்தப் புகழ்பெற்ற பாஸ்டர் மார்டின் நிமோலரின் கவிதை அது இன்றைக்கும் பொருத்தமானதுதான்.

தமிழ், சிங்கள, முஸ்லிம் அறிவுஜீவிகள், ஜனநாயக சக்திகள், இடதுசாரிகள் ஒன்றாக இணைந்து இந்தச் சூழலுக்கு முகம் கொடுக்க வேண்டும். ஜனநாயகத்துடன் கூடிய அதிகாரப் பரவல், பகை மறப்பு, மனித உரிமைகளுக்கான போராட்டம், உயர் பாதுகாப்பு வலயங்கள் ஒழிக்கப்படுதல், இடம் பெயர்க்கப் பட்டோர் மீண்டும் தம் பகுதிகளில் குடியமர்த்தப்படுதல், உடனடிப் புனர் நிர்மானச் செயற்பாடுகள் ஆகிய மனிதாபிமானக் கோரிக்கைகளுடன் உலக அளவில் நாம் இயங்க வேண்டிய காலம் இது. சமீபத்தில் இந்தியா முழுவதும் சுற்றுப் பயணம் செய்து இந்தக் கருத்துக்களைப் பேசிச் சென்ற இலங்கை சோசலிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளர் ஸ்ரீதுங்க ஜெயசூர்யா அவர்களின் பேச்சுக்கள் இந்த வகையில் இங்கே குறிப்பிட்டுச் சொல்லப்பட வேண்டிய ஒன்று.

- எதுவரை, (போர் முடிவடையுமுன் எழுதப்பட்டது) 2009

## வேலுப்பிள்ளை பிரபாகரன் (1954-2009)

உலகெங்கிலுமுள்ள தமிழர்கள் அனைவரையும் துணுக்குற வைத்த அந்தச் செய்தி கடைசியில் வந்தேவிட்டது. 'தமிழ்ப் புதுப் புலிகள்' என்ற பெயருடன் அந்தப் 18 வயது இளைஞனால் தோற்றுவிக்கப்பட்ட இயக்கம் இன்று ஒரு மரபுவழி இராணுவம் என்கிற வகையில் முற்றாக ஒழிக்கப்பட்டுவிட்டது. பள்ளிப் படிப்பைப் பாதியில் நிறுத்திவிட்டு தனி ஈழம் அமைப்பது என்கிற லட்சியத்துடன் ஆயுதம் தாங்கிய அந்த இளைஞர், இன்று தன் 54 வயதில், தன் குடும்பத்துடனும் மூத்த படைத் தலைவர்கள் அத்தனை பேருடனும் சுட்டுக் கொல்லப்பட்டிருக்கிறார்.

வெல்லமுடியாத தேசியத் தலைவர் எனக் கிட்டத்தட்ட கடவுளுக்கு ஒப்பாக பிரபாகரனைக் கருதிவந்த அவரது ஆதரவாளர்களால் இந்தத் தோல்வியையும் மரணத்தையும் செரித்துக் கொள்ள இயலாதபோதும் தொடர்ந்துவரும் தகவல்கள் அவற்றை உறுதிப்படுத்தவே செய்கின்றன. விடுதலைப் புலிகள் அமைப்பு ஒரு அரசியல் கட்சியாகப் பதிவு செய்யப்பட்டிருந்த போதும், என்றைக்கும் அதற்கென தனியான, சுதந்திரமான அரசியல் பிரிவு இயங்கியது கிடையாது. எனவே, இராணுவ பலம்தான் அழிக்கப்பட்டுள்ளது, அரசியலமைப்பு இன்றும் இயங்குகிறது என்றும் யாரும் சொல்ல முடியாது.

ஒரு கெரில்லாக் குழுவாக உருவாகி, சுமார் 25,000 வீரர்களடங்கிய மரபுவழி இராணுவமாக வளர்ந்து சுமார் 15,000 சதுர கி.மீ. பரப்பளவில் நீண்ட காலம் ஒரு இணை அரசை நிறுவி, அரச படையிலிருந்த வீரர்கள் தம் உயிருக்குப் பயந்து படையை விட்டே அஞ்சி ஓடவும், புதிய ஆட்சேர்ப்பிற்குச் சாத்தியமில்லாமலும் செய்து ஸ்ரீலங்கா இனவாத அரசுக்கு ஒரு காலத்தில் சிம்ம சொப்பனமாக (சரியாகச் சொல்வதானால் 'புலி பீதியாக') இருந்த அந்த அமைப்பு இன்று தடயமின்றி அழிக்கப்பட்டது எப்படி?

புலிகளின் பலமாக நாம் பட்டியலிடுகிற அத்தனையுமே இன்னொரு பக்கம் அவர்களின் பலவீனமாகவும் இருந்தது.

உலகிலுள்ள ஆயுதப் போராட்ட இயக்கங்கள் அனைத்திலும் இராணுவப் பிரிவும் அரசியற் பிரிவும் தனித்தனியே இயங்கும். பேச்சுவார்த்தைகள், நெருக்கடியான சந்தர்ப்பங்களில் முடிவெடுத்தல் ஆகியவற்றில் அரசியல் பிரிவுக்கு உரிய முக்கியத்துவம் இருக்கும். புலிகளின் அமைப்பில் இராணுவமே எல்லாமுமாக இருந்தது. ஆன்டன் பாலசிங்கம் போன்ற அறிவுஜீவிகள் அதில் இருந்தபோதும் அவர்கள் பிரபாகரனின் கருத்துக்களைத்தான் பேச முடிந்தது. நார்வே அரசு முன்கை எடுத்து மேற்கொள்ளப்பட்ட ஆறுகட்டப் பேச்சுவார்த்தையின் போது (செப். 2002 - மார்ச் 2003) உருவாகி வந்த தீர்வுத் திட்டத்தை ஏற்றுக் கொள்ளலாம் என மாற்றுக் கருத்தை முன்வைத்தற்காகவே பாலசிங்கம் ஒதுக்கி வைக்கப்பட்ட கதையை ஊரறியும். பிரபாகரனுடன் கூட இருந்து, புலிகளின் அனைத்து மனித உரிமை மீறல்களிலும் பங்காளியாக இருந்து, இன்று சிங்களப் பாசிச அரசின் தத்துப் பிள்ளையாகியுள்ள வினாயகமூர்த்தி முரளிதரன் (எ) கர்னல் கருணாவும் கூட, தான் ஒதுக்கி வைக்கப்பட்டதற்குக் காரணம் இந்தப் பிரச்சினையில் கருத்து வேறுபட்டு நின்றது என்றுதான் சொல்லித் திரிகிறார்.

'ராம்போ' வரிசைப் படங்களிலும் ஹாலிவுட் நாயகன் கிளின்ட் ஈஸ்ட்வுட்டின் சாசகங்களிலும் மனம் பறிகொடுத்துத் தன் ஆளுமையை வரித்திருந்த பிரபாகரன் 1970களில் உருவாக்கி யிருந்த தனது போராட்ட இலக்கணத்தை இறுதிவரை மாற்றிக் கொள்ளவில்லை. இடையில் உலகில் ஏற்பட்டிருந்த பிரும்மாண்டமான அரசியல் மாற்றங்களை எல்லாம் அவர் உள்வாங்கிக் கொள்ளவில்லை. சர்வதேச அரசுகள் செப்டம்பர் 11 (2011)க்குப் பின் உருவாக்கியிருந்த "பயங்கரவாத"ச் சொல் லாடல்களின் ஆழ அகலங்களைப் புரிந்து கொள்ளவில்லை. வேறெப்போதும் இல்லாததைவிட 36 நாடுகள் புலிகள் இயக்கத்திற்குத் தடை விதிப்பதற்கான நியாயங்களை அவர் தொடர்ந்து உருவாக்கிக் கொண்டே இருந்தார். இறுதியாக, ஆகஸ்ட் 2005ல் மேற்கொள்ளப்பட்ட தற்கொலைத் தாக்குதலில் இலங்கையின் அயலுறவு அமைச்சர் லக்ஷ்மன் கதிர்காமர் கொல்லப்பட்டதை ஒட்டி ஐரோப்பிய யூனியன் நாடுகளும் கனடாவும்கூட புலிகள் இயக்கத்திற்குத் தடை விதித்தன.

தடைகளை ஒட்டி ஆயுதம் வாங்குவதற்கான வழிகள் மூடப்பட்டன. இந்திய அரசின் உளவு உதவிகளுடன் கடல்வழி ஆயுதக் கடத்தலும் முடிவுக்குக் கொண்டு வரப்பட்டது. 'கர்னல்' கருணா பிரிந்தது, கிழக்கு மாகாணத்திலிருந்து புலிகள் விரட்டப்

பட்டது ஆகியவற்றிற்குப் பிறகு அங்கிருந்து குழந்தைப் போராளிகளைக் கட்டாயமாகக் கொண்டு செல்வதும் (conscription) முடிவுக்குக் கொண்டு வரப்பட்டது.

அதே நேரத்தில், இலங்கை அரசோ மிகப்பெரிய அளவில் தன் இராணுவ வலிமையைப் பெருக்கி வந்தது. 2008ல் மட்டும் 40,000 வீரர்கள் இராணுவத்தில் புதிதாகச் சேர்க்கப்பட்டனர். 47 காலாட் படைப் பிரிவுகள், 13 பிரிகேட்கள், 4 சிறப்புப் படைகள் (task forces), 2 டிவிஷன்கள் புதிதாக உருவாக்கப்பட்டன. நாட்டுப் புறத்து ஆள் எனச் சொல்லப்படும் மகிந்த ராஜபக்சே ஆட்சிக்கு வந்த கையோடு (2005) புலிகளை ஒழித்தே தீருவது எனக் கங்கணம் கட்டிச் செயற்படத் துவங்கினார். உலக அரசுகளின் இயக்கப் போக்குகளையும், உள் முரண்பாடுகளையும் மிக லாவகமாகத் தனது புலிகள் ஒழிப்புத் திட்டத்திற்குப் பயன்படுத்தினார். பிரபாகரனைத் தேடப்படும் கொலைக் குற்றவாளியாக அறிவித்திருந்த இந்திய அரசுடன் நல்லுறவைப் பேணினார். இன்னொரு பக்கம் இந்திய-சீன முரண்களைப் பயன்படுத்தி சீனா, ரஷ்யா, ஜப்பான், வியட்நாம் முதலிய நாடுகளின் உறுதியான ஆதரவுகளைத் தொகுத்துக் கொண்டார்.

சொந்த முயற்சியில் இராணுவ நுட்பங்களைக் கற்று பல வெற்றிகளைக் குவித்த வகையிலும், ஆனையிறவுப் போர், கட்டுநாயக்கா விமானத் தளத் தாக்குதல் (சுமார் 26 விமானங்கள் அழிக்கப்பட்டன) முதலான சொல்லிக் கொள்ளத்தக்க பெரு வெற்றிகளைச் சாதித்தவராயினும் பிரபாகரனின் இராணுவ அறிவின் போதாமை (limitations) இந்த நான்காம் ஈழப் போரில் வெளிப்பட்டது. அனைத்து முக்கிய தலைவர்களும் ஒரே இடத்தில் குவிக்கப்பட்டனர். எல்லாம் முடிந்தபின் போர் நிறுத்தத்திற்கும் ஆயுதங்களைக் கீழே போடவும் தயார் என அவர்கள் அறிவித்தபோது காலங் கடந்திருந்தது.

சீனியர் தலைவர்கள் கடைசி நேரத்தில் தப்பி ஓடவும், சமாதானக் கொடி பிடித்துச் சரணடையவும் முயற்சித்தபோது சிங்களப் படையினர் வஞ்சகமாகக் கொன்றதாகச் சொல்லப்படுகிறது. இரக்கமற்ற வெறித் தாக்குதலை மேற்கொண்டிருந்த அரச படையினர் அப்படிச் செய்திருக்கக் கூடும். ஆனால், சரணடையும் இந்த முடிவையும் கூட அவர்கள் மிகத் தாமதமாகவே எடுத்தது சிங்களப் படையினரின் இந்தச் செயலுக்குச் சாதகமாக இருந்தது.

எந்த நாடும் அங்கீகரிக்காதபோதும் கிளிநொச்சியைத் தலைநகராகக் கொண்டு தான் அமைந்த 'தனி ஈழத்தை' ஒரு

நிரந்தர அரசாகவே பிரபாகரன் கருதினார். ஒரு கெரில்லாப் படையாக (insurgent force) தொடர்ந்து தாக்குதல்களை நடத்தி யிருக்க வேண்டிய தனது இயக்கத்தை சர்வதேச ஆதரவுடன் களத்தில் இறங்கிய அரச படைக்கு எதிரான மரபுவழி இராணுவ மாகவே முன்னிறுத்தியது வேரடி மண்ணோடான இன்றைய புலிகளின் அழிவிற்கு மூல காரணமாக அமைந்தது.

கிழக்கு மாகாணத்திலிருந்து தமது படைக்குக் குழந்தை களைச் சேர்ப்பதற்கு வாய்ப்பில்லாமல் போனபோது வன்னிப் பகுதியில் தமது கட்டுப்பாட்டிலிருந்த மக்களின் குழந்தைகள் துப்பாக்கி முனையில் பறித்தெடுத்துச் செல்லப்பட்டனர். எந்த மக்களைக் காப்பாற்றுவதற்காக ஆயுதம் ஏந்தியதாகச் சொன் னார்களோ அந்த மக்களே புலிகளின் இறுதி நேரப் பாதுகாப் பிற்கான மனிதக் கேடயங்களாகப் பயன்படுத்தப்பட்டனர். தப்பி ஓடுபவர்கள் சுட்டுக் கொல்லப்பட்டனர். ஒரு பக்கம் எள்ளளவும் இரக்கமின்றி ஷெல் தாக்குதலை அப்பாவி மக்கள் மீது நடத்திக் கொண்டிருந்த சிங்களப் படையினர், இன்னொரு பக்கம் தப்பி ஓடினால் சுட்டுக் கொல்லும் புலிகள் - இரண்டிற்கும் இடையில் 3 லட்சம் தமிழ் மக்கள் உணவும், தண்ணீரும், மருந்தும் இன்றி 'பங்கர்'களில் அனுபவித்த கொடுமை சொல்லி மாளாது. கடந்த ஜனவரியி லிருந்து மே 17 வரை கொல்லப்பட்ட அப்பாவி மக்களின் எண்ணிக்கை 7,000 என்கிறது ஐ.நா. நிறுவனம். 'கார்டியன்' இதழில் வெளிவந்த கட்டுரை ஒன்றின்படி மருத்துவ மனைப் பதிவேடுகளின் அடிப்படையில் கொல்லப்பட்ட சிவிலியன் களின் எண்ணிக்கை 15,000. இவர்களில் குழந்தைகள் மட்டும் 2,000.

இராணுவ ரீதியில் மட்டுமின்றி அரசியல் மட்டத்திலும் புலிகள் தமது கடைசிக் கட்டத்தில் தோற்றிருந்தனர். புலிகளின் தலைமையிலான தமிழ் ஈழம் என்கிற கோரிக்கைக்கான ஆதரவை தமிழ் மக்களிடமே அவர்கள் இழந்திருந்தனர். கருணாவின் பிரிவு என்பது ஏதோ ஆதிக்கப் போட்டியின் விளைவாக மட்டுமின்றி கிழக்கு மாகாணத்தினர் யாழ்ப்பாண ஆதிக்கத்தை ஏற்காத நிலையின் வெளிப்பாடாகவும் அமைந்தது. 80,000 முஸ்லிம்களை யாழ்ப்பாணத்திலிருந்து இரண்டு நாள் அவகாசத்தில் வெளியேற் றிய இனத்தூய்மை (ethnic cleaning) நடவடிக்கை, காத்தான்குடிப் பள்ளிவாசலில் தொழுது கொண்டிருந்த முஸ்லிம்களைச் சுட்டுச் கொன்றது ஆகியவற்றினூடாக முஸ்லிம் தமிழர்களின் நிரந்தரப் பகையைத் தேடிக் கொண்டனர். யாழ்ப்பாணத் தலித்களும் இன்று புலிகளுக்கு எதிராகத் தமது தனித்துவத்தை வற்புறுத்து

கின்றனர். சபாரத்னம், பத்மநாபா, அமிர்தலிங்கம், யோகேஸ்வரன், நீலன் திருச்செல்வன், கத்தீஸ்வரன், ஏ.தங்கதுரை, சாம் தம்பிமுத்து, பி. சிவபாலன், சரோஜினி யோகேஸ்வரன் ஆகிய சக இயக்கத்தவர்கள் மட்டுமின்றி ரஜனி திணகம முதலான மனித உரிமைப் போராளிகள், சபாலிங்கம் போன்ற புலம்பெயர் சூழலில் பணிபுரிந்த இலக்கியவாதி களையும் கூடக் கொன்று தீராப் பழி தேடிக் கொண்டனர்.

தற்கொலைப் படைப்பிரிவு (கரும் புலிகள்) ஒன்றை அமைத்த முதல் தீவிரவாத அமைப்பு என்கிற வகையில் தம் மீதான பயங்கரவாத முத்திரைக்கு அவர்களே வழிவகுத்தனர். ராஜீவ் காந்தி, பிரேமதாசா, காமினி திஸ்ஸநாயகா முதலான அரசியல் தலைவர்கள் மட்டுமின்றி, சிவிலியன்களைக் கொல்வதிலும் முன்நின்றனர். அநுராதபுரத்தில் அப்பாவிச் சிங்கள மக்கள் கொல்லப்பட்டதும், மத்திய வங்கி மீதான ட்ரக் தாக்குதலில் 100 பேர்கள் வரை கொல்லப்பட்டதும் புலிகளின் வரலாற்றில் தீராக் களங்கங்களாக அமைந்தன.

கடைசி மாவீரர் தின உரையைக் கிட்டத்தட்ட இந்திய அரசிடம் கொடுக்கப்பட்ட ஒரு கருணை மனுவைப் போல முன்வைத்த பிரபாகரன் அப்போதுங்கூட ராஜீவ் காந்தி கொலைக்காக, ஒரு அரசியல் சாதுரியமாகக்கூட, மன்னிப்புக் கோரவில்லை. தமிழ் முஸ்லிம்களுக்கு எதிராக இழைக்கப்பட்ட அநீதிகளுக்காகவும் அவர் மன்னிப்பு கோரவில்லை.

எப்படியோ கடைசி வரை களத்தில் நின்று போராடிக் குடும்பத்துடன் மடிந்தவர் என்கிற ஒரே பெருமையுடன் பிரபாகரன் நம்மிடமிருந்து விடைபெற்றுச் சென்றுவிட்டார். தன்னோடு 22,000 புலிகளையும் (சிங்கள அரசின் கணக்குப்படி) பலி கொடுத்து, 'புலிகளின் தாகம் தமிழ் ஈழத் தாயகம்' என்கிற தனது லட்சியம் நிறைவேறாமலேயே அவர் போய்விட்டார்.

விடுதலைப் புலிகளின் சர்வதேசத் தொடர்பாளராக அறிவிக்கப்பட்ட செல்வராசா பத்மநாபன் சமீபத்தில் வெளியிட்டுள்ள அறிக்கைகளில் வெளிப்படுத்தும் நிலைபாடுகள் பிரபாகரன் வாழ்ந்த காலத்தில் கடைபிடித்த இரண்டு முக்கிய நிலைபாடுகளிலிருந்து முற்றிலும் மாறுபட்டதாக உள்ளன. அவை: 1. இனி பேச்சுவார்த்தைகளில் பிற தமிழ் இயக்கங் களையும் இணைத்துக் கொள்வது; அவற்றுடன் இணைந்து செயல்படுவது 2. ஆயுதப் போராட்டத்தை ஒத்தி வைத்துவிட்டு அஹிம்சை வழியில் போராடுவது. இன்றைய சூழலுக்கு இதுவே

பொருத்தமானது என்று அவர் கருதுவது புரிகிறது. அப்படியானால் இதுவரை இன்றைய சூழலுக்குத் தகுந்த நிலைப்பாடுகளை மேற்கொள்வதற்குத் தடையாக இருந்தது பிரபாகரன்தானா?

இலங்கைத் தமிழ் மக்களின் உரிமைப் போரில் குறிப்பிடத் தக்க வெற்றிகள் ஏதுமின்றி ஒரு சகாப்தம் முடிந்துள்ளது. சிங்கள அரசின் (சித்திரவதை) முகாம்களில் உள்ள 3 லட்சம் அப்பாவி மக்கள் விடுதலை செய்யப்பட்டு உடனடி நிவாரணம் அளிக்கப்பட வேண்டும். 30 ஆண்டுப் போரில் சிதைந்துள்ள அகக் கட்டுமானங்கள் உடனடியாக புனர் நிர்மாணம் செய்யப்பட வேண்டும். முறையான ஒரு அரசியல் தீர்வுக்கான உரையாடல் களைத் தொடங்க வேண்டும். இது தொடர்பான திஸ்ஸ விதாரண குழுவின் அறிக்கையைத் தூசு தட்டி எடுத்து பேச்சுக்குரியதாக்க வேண்டும். வெற்றிக் களிப்பிலும் இனவெறியின் உச்சத்திலும் நின்று கொக்கரிக்கும் சிங்கள இனவாத அமைப்புகளின் முயற்சி களுக்கு எதிராக சர்வதேச அழுத்தத்திற்கு நாம் இணைந்து முயற்சிக்க வேண்டும். தமிழ் மக்களின் பிரச்சினையை இன்னுங் கூட பிரபாகரன் உயிருடன் இருக்கிறாரா இல்லையா என்கிற தளத்தில் விவாதித்துக் கொண்டுள்ள தமிழகப் புலி ஆதரவாளர்கள் இனிமேலாவது மனந்திருந்த வேண்டும்.

“வரலாறு எனக்கொரு வழிகாட்டி” என்பது பிரபாகரன் புகழ்பெற்ற வசனங்களில் ஒன்று. புலிகளின் வரலாற்றிலிருந்தும், பிரபாகரனின் வரலாற்றிலிருந்தும் நாம் கற்றுக் கொள்ளப் போகும் வழி என்ன என்பதே இன்று நம்முன் உள்ள கேள்வி.

*மக்கள் களம், ஜூன் 2009*

# ஈழப் போராட்டமும் தமிழக ஆதரவாளர்களும்

தமிழ் அறிவு ஜீவிகள் மத்தியில் ஒரு மரண அமைதி நிலவுவதாக சில நாட்களுக்கு முன் எழுத்தாள நண்பர் ஒருவர் கவலையோடு குறப்பிட்டார். ஒரு சிலர் மத்தியில் ஒருவகை கையறு நிலையும் வேதனையும் நிலவுவது உண்மைதான். மே 18லிருந்து கிட்டத்தட்ட அடுத்த ஒரு வாரம் முழுவதும், வழக்கமாக என்னிடம் பேசுகிற பழக்கமில்லாத சில எழுத்தாள நண்பர்களும் கூட என்னைத் தொடர்பு கொண்டு "கேள்விப் படுவது உண்மைதானா?'' என விசாரித்த வண்ணம் இருந்தனர். தொலைக் காட்சியில் காட்டப்படும் உடல் அவருடையது அல்ல, இலங்கை அரசு பொய்ச் செய்தியைப் பரப்புகிறது என்கிற பிரச்சாரம் அவர்களில் சிலருக்குத் தெம்பூட்டவும் செய்தது. கன்னியாகுமரி மாவட்டத்திலிருந்து ஒரு எழுத்தாள நண்பர் தனது குடும்ப அட்டையை (Family Ration Card) அரசிடம் திருப்பிக் கொடுக்கப்போவதாக திரும்பித் திரும்பிச் சொல்லிக் கொண்டே இருந்தார். கடும் போதையிலிருந்த அவரிடம் "யோசித்துச் செய்யுங்கள்'' என்று மட்டும் சொன்னேன். ஏற்கனவே பலமுறை depression-க்கு ஆளாகியுள்ள மதுரை எழுத்தாள நண்பர் ஒருவர் கடும் மன உளைச்சலுக்கு ஆளாகி நண்பர்களிடம் புலம்பிக் கொண்டிருந்தார். இனி கவிதை எழுதி என்ன செய்யப் போகிறேன், ஏதோ சம்பாதித்தோம். சாப்பிட்டோம் என எஞ்சியுள்ள காலத்தைக் கழிப்போம் என சென்னையில் உள்ள ஒரு கவிஞர் சொல்லியதாகவும் அறிந்தேன்.

மென்மையான மனம் கொண்ட எழுத்தாள நண்பர்கள் இப்படியான ஒரு எதிர்வினை காட்டியதை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது. மக்களின் எந்தப் பொதுப் பிரச்சினைகளிலும் இம்மியும் அக்கறை காட்டியிராத தமிழ் எழுத்தாளர்கள் இந்த அளவிற்கேனும் ஈழப் பிரச்சினையிலாவது அக்கறையுடன் இருக்கிறார்களே என்று நினைத்துக் கொண்டேன்.

இன்னொன்றும் என் மனதை உறுத்தியது. ஈழப் பிரச்சினை குறித்து நம் சக எழுத்தாளர்களுக்கு எந்த அளவுக்குத் தெரியும்? பிரச்சினையின் பன்முகப் பரிமாணங்களை இவர்கள் புரிந்து கொண்டு இருப்பார்களா? குறைந்த பட்சமான சில அடிப்படைத் தகவல்கள் - எடுத்துகாட்டாக இலங்கையின் மொத்த மக்கள் தொகையில் சுமார் 7.5 சதமுள்ள தமிழ் முஸ்லிம்கள் தம்மைத் தனித் தேசிய இனமாகக் கருதக் கூடிய நிலை உள்ளது - என்பது போன்றவற்றைக் கூட நம் எழுத்தாள நண்பர்கள் அறிந்திருக்க மாட்டார்கள். யாழ் பகுதியினருக்கும் கிழக்கு மாகாணத்தினருக் கும் உள்ள கலாச்சார, அரசியல் வேறுபாடுகள் முதலான வற்றையோ, யாழ் சமூகத்தில் கடைப்பிடிக்கப்படும் தீண்டாமை குறித்தோ கூடவும் அவர்கள் கிஞ்சித்தும் அறியார்கள்.

சமீபத்திய போரிலும் கூட ராஜபக்சே அரசின் வெறித்தன மான தாக்குதலில் "சுமார் ஒரு லட்சம் அப்பாவித் தமிழ் மக்கள் கொல்லப்பட்டுள்ளனர்'' என்கிற ரீதியில்தான் அவர்கள் அறிவார்களே தவிர, விடுதலைப் புலிகளால் 3 லட்சம் தமிழ் சிவிலியன்கள் பாதுகாப்பு அரணாகப் பயன்படுத்தப்பட்டதை அவர்கள் நினைத்தும் பார்த்ததில்லை. சில ஆண்டுகளுக்கு முன் லயோலா கல்லூரியில் நடைபெற்ற ஈழத் தமிழ்ப் பாதிரியார் ஒருவரின் கவிதை நூல் வெளியீட்டு விழாவில் பேசிய தலித் எழுத்தாளர் ஒருவர் ஒரு உயர்ந்த லட்சியத்திற்காக குழந்தைப் போராளிகளைப் பயன்படுத்தினால் என்ன என்று ஆவேசமாகக் கேட்டார். அவருக்கு முன் நான் பேசியபோது சொன்ன ஒரு கருத்தை மறுக்கத்தான் அவர் இதைச் சொன்னார். கூட்டம் முடிந்த பின் பேசிக் கொண்டிருந்தபோது கட்டாயமாகக் குழந்தைகளைப் பிடித்துச் சென்று போராளிகளாக்குவதாக விடுதலைப் புலிகளின் மீது ஒரு விமர்சனம் இருப்பது தமக்குத் தெரியாது என்றார். சாரு நிவேதிதா ஒரு முறை சொன்னதுதான் எனக்கு அடிக்கடி நினைவுக்கு வரும். பொதுப் பிரச்சினைகள் குறித்து நம் பொது மக்கள் அறிந்த அளவையும் விடக் குறைவாகத் தெரிந்தவர்கள் தான் எம் தமிழ் எழுத்தாளர்கள்.

இன்னொரு பக்கம் இணையத் தளங்களில் நாகார்ஜுனன், தமிழவன் முதலானோரின் அதிரடியான ஈழப் போராட்ட ஆதரவு, சரியாகச் சொல்வதானால் விடுதலைப் புலி ஆதரவுக் கருத்துக்கள் இணையத்தள வாசகர்கள் மத்தியில் சில சலசலப்புகளை ஏற்படுத்தின. இவர்களது தீவிர புலி ஆதரவுக் கட்டுரைகளை எல்லாம் நுனித்து ஆராய்ந்தால் 'புலிகள் தவறு செய்திருக்கலாம், ஆனால் அதையெல்லாம் பேச இது நேரமில்லை, உள் முரண்பாடு

களைப் பெரிதுபடுத்தி பொது எதிரிக்கான போராட்டத்தை பலவீனப்படுத்திவிடக் கூடாது என்கிற மட்டங்களைத் தாண்டி இவர்கள் பேசவில்லை என்பதை விளங்கிக் கொள்ளலாம். சரி இதையெல்லாம் பேசுவது ஒரு காலப்பிழை என்று வைத்துக் கொண்டால்கூட புலிகள் வெற்றிமுகத்தில் இருந்த காலத்தில் இவர்கள் இதை எல்லாம் பேசியதில்லை என்பது குறிப்பிடத் தக்கது. குறிப்பாக முஸ்லிம்கள் மீது மேற்கொள்ளப்பட்ட தாக்குதல்கள், கொலைகள், குழந்தைப் போராளிகளைக் களத்தில் இறக்கிப் பலி கொடுத்தல் ஆகியவை குறித்தெல்லாம் இவர்கள் என்றும் வாய் திறந்ததில்லை. இது குறித்து எந்தக் குற்ற உணர்ச்சியும் அவர்களுக்கு இல்லை.

நாகார்ஜுனனை எடுத்துக் கொண்டீர்களானால் அவர் தமிழ்ச் சூழலை விட்டு விலகிச் சென்று சுமார் பத்தாண்டு களுக்கும் மேலாகி விட்டது. இடைக் காலத்தில் அவரது பங்களிப்புகள் குறித்து யாருக்கும் எதுவும் தெரியாது. பி.பி.சி.யில் 10 ஆண்டுகள் இருந்ததாகக் கேள்விப்படுகிறோம். ஆம்னஸ்டி யில் இருப்பதாகவும் அறிகிறோம். மற்றவர்கள் பலருக்கு எளிதில் வாய்த்திராத நிலைகள் இவை. இந்தப் பொறுப்புகளைப் பயன்படுத்தி அவர் தமிழ் மக்களது பிரச்சினைகளை எந்த அளவிற்கு உலக அரங்கிற்கு எடுத்துச் சென்றுள்ளார்? ஈழத்தில் மட்டுமல்ல, இந்தியச் சூழலிலும் எத்தனையோ மனித உரிமை மீறல்கள், சாதிப் பிரச்சினைகள் எதையாவது விவாதப் பொருளாக்குவதற்கு இவர் எள்ளளவேனும் முயன்றிருப்பாரா?

திடீரென வந்தார். தமிழ் அறிவுச் சூழல் கடந்த 10 ஆண்டுகளுக்கு முன் தன்னால் எப்படி விட்டுச் செல்லப்பட்டதோ அப்படியே தேங்கிக் கிடக்கிறது என்பது போல பேட்டிகள் கொடுத்தார். இங்கிருந்தபோது தான் ஏதோ ஒரு தீவிர மாவோயிஸ்டாக இருந்ததுபோல கட்டுரை ஒன்று எழுதினார். நாகார்ஜுனன் இங்கிருந்து செயல்பட்டபோது எழுதிய கட்டுரைகள் சில முக்கியமானவை என்பதில் ஐயமில்லை. கூடங்குளம் அணு உலைத்திட்டம் கொண்டுவரப்பட்டபோது அவர் செய்த மிகச் சில பணிகளும் குறிப்பிடத்தக்கவை. இது தவிர அவர் இங்கிருந்தபோது இடதுசாரி இயக்கங்களுக்கோ, மனித உரிமைச் செயற்பாடுகளுக்கோ மக்கள் இயக்கங்களுக்கோ ஆதரவளித்தது கிடையாது. சொல்லப் போனால் எல்லோரையும் போல மார்க்சியத்தை வரட்டுக்கோட்பாடு என்று வாதாடிக் கொண்டிருந்தவர்தான் அவர்.

இப்போது உள்ள இந்தத் திடீர் மாற்றம்-? எப்படி இதைப் புரிந்து கொள்வது? இங்கிருந்து நிரந்தரமாகப் புலம் பெயர்ந்து அமெரிக்காவில் 'செட்டில்' ஆகிவிட்ட நமது மேற்சாதி (Elitist) அறிவுஜீவிகளின் மனநிலை குறித்து நான் முன்பே ஒரு சில முறை எழுதியுள்ளேன். அமெரிக்கச் சொகுசு வாழ்வை விட்டு அவர்கள் திரும்பி வர இயலாது. வீடு வாசல்களோடு வாழ்ந்துகொண்டு பிள்ளைகளையும் அமெரிக்க சூழலில் படிக்க வைத்துக் கொண்டிருப்பவர்கள் அவர்கள். அதே நேரத்தில் அவர்கள் அங்கே இரண்டாம் தரக் குடிமக்கள்தான். இது ஒருவகை உளச் சிக்கலை (NRI Syndrome) அவர்களுக்கு ஏற்படுத்தி விடுகிறது. தமது மண்ணுக்கு, தமது கலாச்சாரத்திற்கு ஏதாவது செய்தாக வேண்டும் என்கிற முடிவுக்கு வரும் அவர்கள் மிக எளிதாக இங்கு உருவாகி நிலைபெற்றுவிட்ட வலதுசாரி இந்து தேசிய வாதத்தில் சரண்புகுகின்றனர். இங்குள்ள வலது பாசிச அமைப்புகளுக்கு நிதி உதவி, இணையத் தளங்கள் மூலமாக Logistic Support, அமெரிக்க அரசியலில் இத்தகைய இயக்கங்களுக்காக Lobbying செய்வது முதலிய நடவடிக்கைகளில் தம்மை ஈடுபடுத்திக் கொள்கின்றனர். 'திண்ணை' இணையத் தளம், 'வார்த்தை' மாத இதழ், கோபால் ராஜாராம், சிவக்குமார் போன்ற அறிவு ஜீவிகள்... இந்நிலையின் சில எடுத்துக்காட்டுகள். இப்படியான ஒரு வலதுசாரி 'இமேஜ்' ஏற்பட்டு விடாமல் தமது தூர தேச தேசியத்தை (Long Distance Nationalism) நிலைநாட்டிக் கொள்ளும் ஒரு வழிமுறையாகத்தான் நாகார்ஜுனன் முதலானோரின் இந்தத் தீவிர புலி ஆதரவு நிலைபாட்டைச் சொல்ல முடியும். பல்வேறு அம்சங்களில் இவ்விரு நிலையினரும் எதிர்காலத்தில் ஒத்துப் போவதற்கான வாய்ப்புக்கள்தான் அதிகம். தமிழ் வலதுசாரி இதழாகிய காலச்சுவட்டில் நாகார்ஜுனன் ஒண்டத் தொடங்கியுள்ளது இதற்கொரு சான்று.

பெங்களூரில் 'செட்டில்' ஆகிவிட்ட தமிழவனையும் கூட ஒரு வகையில் இவர்களோடு சேர்க்கலாம். ஒரு காலத்தில் திராவிட இயக்கத்தால்தான் நவீன தமிழ் வளர்ச்சியே கெட்டுவிட்டது எனவும், அண்ணாவுக்கு சாகித்ய அகாதமி பரிசளிக்கக் கூடாது என முட்டுக்கட்டை போடவும் செய்த இவர் இப்போது எதிர் உச்சத்திற்குச் சென்று அறிஞர் அண்ணா புகழ் பாடுகிறார். ''செய் அல்லது செத்துமடி'' என்று சொன்ன காந்தியடிகளின் கூற்றுக்கு விடுதலைப்புலிகள் தான் நடைமுறை எடுத்துக்காட்டாம். இப்படிச் சொன்னதோடு அவர் நிற்கவில்லை. இத்தகைய அரிய கருத்தைத் தனக்குச் சுட்டிக் காட்டிய நாகார்ஜுனனுக்கு நன்றி,

நன்றி, என்று பிராக்கெட்டில் ஒரு பிரகடனம் வேறு. சமீபத்தில் நான் ரசித்த நகைச்சுவைகளில் ஒன்று இது. காந்தியையும் பிரபாகரனையும் ஒரே தட்டில் வைத்துப் பார்க்க வேறு யாருக்குத் துணிச்சல் வரும். அறியாமை அல்லது அசட்டுத்தனம் ஒன்றைத் தவிர இந்தத் துணிச்சலின் பின்புலமாக வேறென்ன இருக்க இயலும்?

எங்களூர் தகவல் தொழில்நுட்பத் துறை வல்லுநர்கள் (I T Professionals) குறித்தும் எனக்குப் பெரிய மரியாதை கிடையாது. "Over Specialisation Cripples a Man" என லூனாசார்ஸ்கி ஒரு முறை சொன்னார். தமது துறை சார்ந்த அறிவில் நுணுக்கமாக விளங்கும் இவர்கள் பிற பொதுப் பிரச்சனைகளில் பொதுமக்களின் பொது அறிவு மட்டத்தைக் கூட எட்ட மாட்டார்கள். இவர்கள் நடத்துகிற இணையத்தளங்களில் எந்தவித அபத்தத்தையும் யார் வேண்டு மானாலும் எழுதலாம். 'கீற்று' என்கிற இணையத் தளத்தில் ஈழப் போராட்டம் தொடர்பான இப்படியான பல அபத்தக் கட்டுரைகள் தொடர்ந்து பிரசுரிக்கப்படுகின்றன.

இதை எழுதிக் கொண்டிருந்தபோது 'கீற்று' இணையத் தளத்தில் வெளியாகியுள்ள வளர்மதியின் கட்டுரை ஒன்றைப் பற்றி நண்பர்கள் குறிப்பிட்டனர். புலிகளை விமர்சித்து வருகிற சுசீந்திரன், இராகவன், ஷோபா சக்தி, சுகன் ஆகியோரை கண்டபடி ஏசி எழுதியுள்ள கட்டுரை அது. என்னையும் போகிற போக்கில் திட்டி இருப்பதை ஒட்டி நண்பர்கள் அக்கட்டுரையைப் பற்றி குறிப்பிட்டனர். புலிகளுக்கு எதிராக சுசீந்திரனையும் இராகவனையும் பின்னிருந்து இயக்குவது அகிலன் கதிர்காமராம். (பின்னவர்களை இயக்குவது நானாம்.) இதற்கு என்ன ஆதாரம் என்றெல்லாம் எந்த விளக்கமுமில்லை. இந்த அகிலன் கதிர்காமருக்கு புலிகள் எதிர்ப்பு நோக்கம் ஏன் உள்ளது என்றால் அவர் புலிகளால் கொல்லப்பட்ட லக்ஷ்மண் கதிர்காமரின் மகனாம். இதுதான் அந்த 'தத்துவார்த்த'க் கட்டுரையின் அடித்தளம்.

நானறிந்தவரை அகிலன் கதிர்காமர் லக்ஷ்மண் கதிர்காமரின் மகனல்ல. கதிர்காமர் என்பது தெற்கிலங்கை தமிழ் மேட்டுக் குடியினர் மத்தியில் பயிலப்படும் ஒரு பெயர். அமெரிக்காவில் வாழும் அகிலனின் தந்தை லங்கா சம சமாஜக் கட்சியில் இருந்தவர். அந்த வகையில் ஒரு இடதுசாரிப் பாரம்பரியம் அவருக்கு உண்டு. அகிலனும் கூட மனித உரிமை அமைப்புக ளுடன் தொடர்புடையவர் என்றே அறிகிறேன். கதிர்காமர் என்கிற

பொதுப் பெயரை வைத்து இப்படியான ஒரு தவறான முடிவுக்கு வந்ததை ஒரு தகவல் பிழை என விட்டுவிடலாம். யாருக்கும் நேரக் கூடியதுதான் இது. ஆனால் இப்படியான ஒரு தகவல் பிழையின் அடிப்படையிலேயே ஒரு தத்துவத்தைக் கட்டமைப்பதும், இணையத்தள 'எடிட்டர்' கள் அது குறித்துக் கிஞ்சித்தும் கவலைப்படாமல் அதை வெளியிட்டு மகிழ்வதுதான் வேதனை. அதே கீற்று தளத்தில் எனது நட்பிற்குரிய இன்னொரு பத்திரிகை யாளர் ராஜபக்சேவிடம் காசு வாங்கிக் கொண்டு செயல்படுவ தாகக் கூசாமல் சுகனைப் பற்றி எழுதியுள்ளார்.

பொதுவாகக் கடந்த ஆறு மாதங்களில் தமிழகத்தின் பொது அறிவு ஜீவித மட்டமே கொஞ்சம் தாழ்ந்துள்ளது என்றுதான் சொல்வேன். உணர்ச்சி அரசியல் எல்லோரது கண்களையும் கட்டிவிட்டது. எந்தவித ஊடக அறமும் அற்ற இந்து ராம் ராஜபக்சே அரசின் அத்துமீறல்களை எல்லாம் நியாயப்படுத்துவது ஒரு பக்கம் என்றால் தமிழ் இதழ்களில் விடுதலைப் புலிகளுக்கு ஆதரவாக எந்த அபத்தத்தையும் யாரும் கக்கலாம். சீமான், ஜெகத் கஸ்பார் முதலான புலி முகவர்கள் எழுதும் எத்தகைய அபத்தக் கருத்துகளையும் வெளியிடுவதற்கெனவே ஜூனியர்விகடன், நக்கீரன், குமுதம் ரிப்போர்டர் முதலான இதழ்கள் காத்திருக் கின்றன. புலிகள் தரப்பிலேயே கூச்சப்பட்டு கண்டிக்கும் அளவிற்கு பழைய புகைப்படங்களை 'உல்டா' பண்ணி பிரபாகரன் உயிரோடு இருப்பதை 'நிரூபித்து' சில ஆயிரம் பிரதிகள் விற்பனையை அதிகமாக்கிக் கொண்டது நக்கீரன். இதனால் அரண்டு போன ஜூனியர் விகடன் மதிவதனி கேரள கடற்கரை வழியாகத் தப்பிப் போனார் என்றொரு கதையை வெளியிட்டு தனது விற்பனையை உயர்த்திக் கொள்ள முயற்சித்தது.

தமிழ்த் தேசியம், புலி ஆதரவு மாவோயிசம் பேசுகிற இளைஞர்கள் தமது அறிவு சேகரத்திற்கு இந்த இதழ்களை மட்டுமே நம்பியுள்ளது தான் கொடுமை. நாளிதழ்களைக் கூடத் தேடிப் படிப்பது இல்லை. எஸ்.எம்.எஸ் மூலம் வரும் செய்திகள்தான் இவர்களின் மற்ற ஆதாரம். எஸ்.எம்.எஸ் மூலம் ஈழப் போராட்டம் தொடர்பாக குறைந்தது 25 குறுஞ் செய்திகளாவது ஒவ்வொரு நாளும் அனுப்பப்படுகின்றன. இவற்றில் பல படு அபத்தமானவை. பல மிகைப்படுத்தப் பட்டவை. பல பொய்யானவை. இவற்றை நம்பிச் செயலில் இறங்கும் பரிதாபங்களும் ஏராளம். வேறு காரணங்களுக்காகச் சென்று கொண்டிருக்கும் இராணுவ லாரி ஒன்றை இலங்கை

இராணுவத்திற்கு ஆயுதம் கொண்டு செல்வதாக நம்பி தாக்குதல் நடத்தும் அளவிற்கு இந்தச் செய்திகள் சில விளைவுகளை ஏற்படுத்தி விடுகிறது. ''தவறான செய்திகளின் அடிப்படையில் இப்படி நடந்துவிட்டது'' எனப் பிறகு நீதிமன்றங்களில் பிணை விடுதலைக்காக விண்ணப்பிக்கும்போது இவர்கள் வாக்கு மூலம் அளிப்பது வேதனைக் காட்சி. ஒரு நாள் இரவு 12:30 மணி இருக்கும். படித்துக் கொண்டிருந்தேன். சேலத்தைச் சேர்ந்த எனது பிரியத்திற்குரிய இளம் வழக்கறிஞர் ஒருவர் எஸ்.எம்.எஸ் ஒன்று அனுப்பியிருந்தார். ஈழ ஆதரவு நிலைப்பாட்டிற்காக மக்கள் தொலைக்காட்சி அப்போது தாக்கப்பட்டுக் கொண்டிருப்பதாகக் குறுஞ்செய்தி. உடனடியாக நண்பர்களிடம் தொடர்பு கொண்டு அங்கே போவதற்காக ஆயத்தம் செய்தேன். செய்தி அறிந்த நண்பர் ஒருவர் தோழர் கஜேந்திரனிடம் தொடர்பு கொண்ட போது அப்படி ஏதும் இல்லையே என்றார். தொலைக்காட்சியில் நிகழ்ச்சிகள் ஒளிபரப்பாகிக் கொண்டிருந்தன.

இப்படி எத்தனையோ சொல்லலாம். சுமார் நான்கு மாதங்களுக்கு முன் நடந்த நிகழ்ச்சி ஒன்று. மதுரை மேலவளவு கிராமத்தில் வழக்குரைஞர் இரத்தினம் ஏற்பாடு செய்திருந்த ஒருநாள் நிகழ்வொன்றிற்கு நானும் சுகுமாரனும் சென்றிருந்தோம். மதியம் 2 மணி இருக்கும். ஏகப்பட்ட குறுஞ்செய்திகள் செல்போன் திரைகளை அப்பின. வன்னியில் அணைக்கட்டு ஒன்றை புலிகள் உடைத்து 5000 சிங்கள இராணுவ வீரர்கள் பலி என்பதுதான் அச்செய்தி. கோத்தபய ராஜபக்சே, ஃபொன்சேகா முதலியோர் சுடப்பட்டு விட்டதாகவும், இலங்கையில் அரசியல் குழப்பம் ஏற்பட்டுள்ளதாகவும் தொடர்ந்து செய்திகள். எல்லோருக்கும் இனிப்புகள் வழங்கப்பட்டன. ஒரே கொண்டாட்டம். தமிழகத்தின் பிற பகுதிகளிலும் அவ்வாறே நடந்து கொண்டிருப்பதாக அறிந்தோம். கோவையில் ஒரு மரியாதைக்குரிய திராவிட இயக்கத் தலைவர் லட்டுகள் வழங்கிக் கொண்டிருப்பதாக அங்கிருந்து ஒரு நண்பர் தொடர்பு கொண்டு தகவல் உண்மைதானா என வினவினார். சென்னையில் உள்ள பத்திரிகையாள நண்பர்கள் சிலரிடம் பேசியபோது அங்கும் இப்படியே செய்திகள் பரப்பப்படுவதாகவும், வேறு ஆதார பூர்வமான தகவல் ஏதும் இல்லை எனவும் குறிப்பிட்டனர்.

அந்த நேரத்தில் லண்டனிலிருந்து நண்பர் இராகவன் வேறொரு தகவலுக்காகத் தொடர்பு கொண்டார். இங்கே உலவும் செய்தியை அவரிடம் பகிர்ந்து கொண்டபோது சிரித்தார். தாம் அந்த இடத்தில் இருந்து செயல்பட்டிருப்பதாகவும், அது

அணைக்கட்டு அல்ல, ஒரு சிறிய ஏரி எனவும், அந்த ஏரி உடைக்கப்பட்டு மரணம் ஏற்படுமானால் 3 வயதுக்கும் மிகாத குழந்தைகள் வேண்டுமானால் செத்துப்போகலாம் எனவும் குறிப்பிட்டார். எனினும் அடுத்த நாள் வரை எஸ்.எம்.எஸ்கள் பறந்து கொண்டுதானிருந்தன.

சுருக்கம் கருதி நிறுத்திக் கொள்கிறேன். கடைசியாக ஒன்று: இரு மாதங்களுக்கு முன்னர் கிறிஸ்துவப் பாதிரிமார்கள், போதகர்கள், கன்னியர் எல்லோரும் இணைந்து ஈழத் தமிழர் களுக்கு ஆதரவாக ஒரு உண்ணாவிரதப் போராட்டம் நடத்தினர். அதைத் தொடங்கி வைக்கவும் முடித்து வைக்கவும் என்னையும், புலிகளுக்கு எப்போதும் ஆதரவாக உள்ள ஒரு மூத்த பேராசிரி யையும் அழைத்திருந்தனர். எனக்கு முன் பேசிய அந்த அம்மையார் வழக்கம்போல பல்வேறு கதைகளை எடுத்து விட்டுக் கொண்டே இருந்தார். மன்மோகன்சிங் கொழும்புக்கு 'சார்க்' மாநாட்டுக்காகச் சென்றபோது பாதுகாப்புக்காக ஆயிரக்கணக்கான இந்திய இராணுவ வீரர்கள் சென்றார்களே, அவர்கள் ஏன் திரும்பி வரவில்லை என்றொரு அதிரடியான கேள்வி ஒன்றை அங்கே அவர் உதிர்த்தார். பல்லாயிரக் கணக்கான இந்திய இராணுவ வீரர்கள் தமிழர்களைக் கொன்று கொண் டிருப்பதாகவும், சுமார் 500 இந்திய இராணுவ வீரர்களின் உடல்கள் டெல்லிக்கு முன் தினம் கொண்டு செல்லப்பட்ட தாகவும் கூறிய அவர், சென்னையில் உள்ள ஒரு இராணுவ மருத்துவமனையைச் சொல்லி அதில் இலங்கையில் படுகாய முற்ற 122 இந்திய இராணுவ வீரர்கள் தற்போது அனுமதிக்கப் பட்டுள்ளதாகவும் சொன்னார். தான் சொல்கிற செய்திகள் ஆதாரபூர்வமானவை எனவும் வலியுறுத்தினார். பல்வேறு வகைப் பட்ட ஆதரவுப் போராட்டங்களை நிகழ்த்திக் கொண்டிருந்த தாங்கள் ஏன் அந்த மருத்துவமனையை முற்றுகையிடும் போராட்டம் ஒன்றைச் செய்ய முனையவில்லை என்பதை மட்டும் அவர் விளக்கவில்லை.

மறைக்கப்பட்ட தகவல்கள், மிகைப்படுத்தப்பட்ட செய்திகள் மூலமாகவே கடந்த ஆறு மாத காலமாக இங்கே ஈழ ஆதரவு உணர்ச்சி அரசியல் கொடிகட்டிப் பறந்தது. கொளத்தூர் மணி முதல் பழ நெடுமாறன் வரை யாரும் இதற்கு விதிவிலக்கில்லை. இவர்களின் தவறான அறிவுரைகளை நம்பியது புலிகளின் வீழ்ச்சிக்கான இறுதிக்காரணமாக அமைந்தது என்று இரு மாதங்களுக்கு முன் ஒரு தமிழ் சஞ்சிகையில் எழுதியிருந்தேன். அதற்கு ஏராளமான ஆதாரங்கள் தொடர்ந்து வந்துகொண்டுள்ளன.

புலிகளின் எந்தத் தவறுகளையும் விமர்சிக்காததன் மூலம் புலிகளை மேலும் மேலும் தவறுகளுக் குத் தூண்டியவர்கள் இவர்கள். அப்பாவி மக்களைத்தப்ப விட்டுவிட்டுச் சரணடை யுங்கள் என்கிற அறிவுரையை எல்லாம் முடிவதற்கு இரண்டு மாதங்கள் முன்பே இவர்கள் புலிகளுக்குச் சொல்லியிருந்தார் களேயானால் இன்னும் சில ஆயிரம் தமிழ் மக்கள் மரணத்தி லிருந்து தடுக்கப்பட்டிருப்பர். புலிகளின் தலைமையும் கூடத் தப்ப வாய்ப்பிருந்திருக்கும்.

எமது புலி முகவர்கள் இப்போதும் திருந்திய பாடில்லை. புலி ஆதரவு இயக்கமொன்றின் சார்பில் சமீபத்தில் வெளியிடப் பட்டுள்ள குறு நூலொன்றின் தலைப்பு : ''**பிரபாகரன் தப்பியது எப்படி?**''

- புதுவிசை, செப். 2009

# “புலிகளை சற்றே மறந்துவிட்டுத் தமிழர்களின் பிரச்சினைகளைப் பேசுவோம்”

### புத்தகம் பேசுது நேர்காணல்

**நான்காண்டுகளுக்கு முன்பு புஷ்பராஜா ‘தீராநதி’ நேர்காணலில் ஈழப்போராட்டம் தோல்வியடைந்துவிட்டது எனச் சொல்லியிருந்தார். அவர் சொல்லிய காலம் ஈழத்தில் போர் நிறுத்த காலம். மீண்டும் போர் உக்கிரமடைந்திருக்கிற இன்றைய சூழலில் அவருடைய கூற்றை நீங்கள் எவ்வாறு அவதானிக்கிறீர்கள்?**

புஷ்பராஜா அப்படி சொல்லியிருந்தால் ரொம்பவும் வேதனையோடுதான் சொல்லியிருக்க வேண்டும். ஏனெனில் ஈழத்தில் ஆயுதப் போராட்டத்தை முன்னெடுத்த முன்னோடி களில் ஒருவர் அவர். சித்திரவதைகள், சிறைவாசம், அகதி வாழ்க்கை என எல்லாத் துயரங்களையும் இதற்கெனவே அனுபவித்தவர். கண்முன்னே ஆயுதப் போராட்ட இயக்கங்கள் மேற்கொண்ட மனித உரிமை மீறல்களைக் கண்டு மனம் நொந்தவர். என்னைப் பொருத்தவரையில் ஈழப் போராட்டம் தோல்வியடைந்துவிட்டது எனச் சொல்வதைக் காட்டிலும் தேக்கமடைந்துள்ளது எனச் சொல்லலாம். போராட்டத்தின் வெற்றி தோல்வியை நடக்கும் போரை மட்டும் வைத்துச் சொல்ல முடியாது. தவிரவும் ஈழ மக்களின் சுய நிர்ணய உரிமைக்கான போராட்டத்தை விடுதலைப்புலிகள் நடத்துகிற போருடன் மட்டுமே சமப்படுத்தி விடவும் முடியாது. இன்றையப் போரின் முடிவுக்குப் பின் வரப்போகிற தீர்வு எப்படிப்பட்டதாயினும் சுமார் ஒரு லட்சம் ஈழத்தமிழர்களின் உயிர், உடைமை இழப்புகள், குடும்பச் சிதைவுகள், அகதி வாழ்க்கை ஆகியவற்றின் மீது அமைக்கப்படுவதுதான் அது. இந்தத் தியாகங்களின் மூலம் சிங்களப் பேரினவாத அரசின் இன அடக்குமுறைகளின்பால்

உலகின் கவனம் ஈர்க்கப்பட்டிருக்கிறது. அரசியல் தீர்வின் அவசியம் உணர்த்தப்பட்டிருக்கிறது. இலங்கை அரசியல் சட்டம் மற்றும் அதன் மீது இயற்றப்பட்ட திருத்தங்களின் ஊடாக அது ஒரு பவுத்த மதச் சார்பான, சிங்கள மொழியை முதன்மைப்படுத்துகிற அரசாக, அதன் மூலம் அங்குள்ள இதர மொழி, மதச் சிறுபான்மை யினரின் உரிமைகளைப் பறிக்கிற சாசனமாக மாற்றப்பட்டுள்ள நிலை உலகிற்கு உணர்த்தப்பட்டுள்ளது. இந்த வகையில் ஈழப் போராட்டத்தை நாம் தோல்வி எனச் சொல்ல முடியாது என்றே நினைக்கிறேன்.

**பின் எந்தப் பொருளில் புஷ்பராஜா அப்படிச் சொல்லியிருப்பார் என நினைக்கிறீர்கள்?**

சுதந்திரத் தமிழ் ஈழ நாடு என்கிற வேட்கையோடு ஆயுதத்தை உயர்த்தியவர்கள் அவர்கள். இன்று அந்தக் கோரிக்கை பின்னுக்குப் போய்விட்டது என்கிற அடிப்படையில் அவர் இதைச் சொல்லியிருக்கலாம்.

**ஈழ விடுதலை, தனி ஈழத்தை அங்கீகரித்தல் முதலான முழக்கங்களுடன் தானே இன்று போராட்டங்கள் நடைபெறுகின்றன?**

இந்த முழக்கங்கள் தமிழ்நாட்டிலிருந்துதான் ஒலிக்கிறதே ஒழிய ஈழத்தில் இன்று யாரும் இதைச் சொல்வது கிடையாது. விடுதலைப் புலிகள் உட்பட இதுவே இன்றைய நிலை. இந்த ஆண்டு மாவீரர் நாள் உரையின்போதோ, சென்ற ஆண்டிலோ பிரபாகரன் தனி ஈழக் கோரிக்கையை முன் வைக்கவில்லை. கிழக்கு மாகாணத்தவர், முஸ்லிம்கள், தலித்துகள் எல்லோருடைய கருத்துகளும் இன்று மாறியுள்ளன. ஒற்றைத் தனி ஈழம் என்கிற கோரிக்கைக்கு இவர்களிடமும் பெரிய ஆதரவு இருப்பதாகத் தெரியவில்லை. ஒன்றை நாம் புரிந்து கொள்ள வேண்டும். ஆயுதப் போராட்டத்தின் மூலம் வடக்கு, கிழக்கு இணைந்த தனி ஈழத்தை வென்றெடுப்பது என்பது 1975-1985 காலகட்டத்தில் உருவான கோரிக்கை. அதற்குப்பின் இன்று உலகில் மிகப்பெரிய மாற்றங்கள் ஏற்பட்டுவிட்டன. குறிப்பாக சோவியத் யூனியனின் வீழ்ச்சி மற்றும் 1990களுக்குப் பிந்திய உலகில் பல்வேறு மக்கள் குழுக்கள் தம் அடையாளங்களை உறுதி செய்தல், அந்த அடிப்படையில் கோரிக்கைகள் வைத்தல் என்பது உலகெங்கும் பொதுவாகிவிட்டது. நேபாளத்தை எடுத்துக் கொண்டீர்களானால் அதற்குப் பின்தான் ஜன ஜாதியினர், தலித்துகள், மாதேசிகள் முதலானோர் தம் அடையாளங்களை வற்புறுத்தி கோரிக்கைகள் வைத்தனர். ஆயுதந்தாங்கியப் போராட்டம் ஒன்றை முன்னெடுத்தவர்களாயினும் மாவோயிஸ்

டுகள் இந்த நிலையை ஏற்றுக்கொண்டு தமது திட்டத்தை அதற்கு ஏற்றாற்போல அமைத்துக் கொண்டனர். அதே நிலை இன்று ஈழத்திலும் ஏற்பட்டுள்ளதை என்னால் பார்க்க முடிகிறது. இதை இல்லை எனச் சொல்பவர்கள் கண்ணை மூடிக்கொண்ட பூனையை ஒத்தவர்கள்தான். இது ஒரு வரவேற்கத்தக்க நிலை என்றுதான் கருதுகிறேன். ஏனெனில் தேசிய இனம் என்கிற பேரடையாளத்தை இறுக்கமாகவும், உணர்ச்சிபூர்வமாகவும் கட்டமைக்கும்போது வர்க்கம் உள்ளிட்ட பல்வேறு சிறு அடையாளங்கள் அதன்மூலம் ஒடுக்கப்படும். எந்தத் தேசிய இனமும் மற்ற தேசிய இனத்தை மட்டுமல்ல, உள்ளே உள்ள பல உட்பிரிவினரையும் ஒடுக்குவதாகத்தானே இருக்கிறது. தொண்ணூறுகளுக்குப் பின் உலகில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள் எதையும் புலிகளும், புலி ஆதரவாளர்களும் கணக்கில் எடுத்துக் கொள்வதே இல்லை. இந்த அடையாள உறுதியாக்கத்தைப் புரிந்து கொள்ளாததோடு மேலும் மேலும் அவர்கள் அந்நியப்படு வதற்கு வழி வகுப்பதாகவே புலிகளின் செயற்பாடுகள் அமைந்தன.

வடக்கிலிருந்த முஸ்லிம்கள் வெளியேற்றப்பட்டார்கள். இன்னும் அவர்கள் நாடு திரும்ப இயலவில்லை. கிழக்கில் பள்ளிவாசலில் தொழுது கொண்டிருந்தவர்கள் கொல்லப் பட்டனர். தேசிய இனப் போராட்டத்தின் ஊடாக சாதிய ஒடுக்குமுறைகள் ஒழிந்துவிட்டதாகப் பிரச்சாரம் செய்யப் பட்டது. இதன்மூலம் சாதி மற்றும் தீண்டாமைப் பிரச்சினைகள் கூசாமல் பின்னுக்குத் தள்ளப்பட்டன. இன்று கிழக்கு மக்கள் அந்நியப்பட்டு நிற்பதற்கும் இதுகாறும் புலிகளில் இருந்து எல்லாவிதமான மனித உரிமை மீறல்களுக்கும் காரணமாக இருந்த கருணா கும்பலின் சந்தர்ப்பவாதம் மட்டுமே காரணம் எனச் சொல்லிவிட முடியாது. இந்திய அரசியலின் பிரதிபலிப்பு எல்லாக் காலங்களிலும் ஈழத்தில் இருந்து வந்துள்ளதை பல ஆய்வாளர்கள் வெளிப்படுத்தியுள்ளனர். இப்போதும் அது நடந்துள்ளது. தலித் இலக்கியம், தலித் இயக்கம் முதலான முயற்சிகள் அங்கே இப்போது வந்துள்ளன. ஐரோப்பாவில் இரண்டு தலித் மாநாடுகள் நடந்துள்ளன. 'எக்ஸில்' என்றொரு இலக்கியப் பத்திரிகையை நடத்திக் கொண்டிருந்த கிழக்கு மாகாணத்தைச் சேர்ந்த எம்.ஆர். ஸ்ராலின் இன்று கிழக்கு மாகாணத்தின் தனித்துவம் பற்றிப் பேசுகிறார். யாழ்ப்பாண மேலாதிக்கத்தின் கீழ் தாங்கள் இருக்க முடியாது என்கிறார். ஒன்றை நாம் புரிந்து கொள்ள வேண்டும். 'தனி ஈழம்' என்பது

மட்டுமல்ல, கூட்டாட்சிக்குக் கீழான ஒன்றிணைந்த தனி மாகாணம் என்கிற கோரிக்கைக்குக் கூட ஒட்டுமொத்தமாக எல்லாத் தமிழர்களுடைய ஆதரவும் உள்ளது எனச் சொல்ல முடியாது.

**எழுபது, எண்பதுகளில் எப்படி இதையெல்லாம் மறந்து ஒற்றைத் தனி ஈழம் என்கிற கோரிக்கை வந்தது?**

தேசிய இனக் கோரிக்கைகள் என்பன எப்போதுமே ஒரு சமூகத்தின் மேல்தட்டுப் பிரிவினரால்தான் முன்வைக்கப்படு கிறது. உணர்ச்சிபூர்வமாகப் பின் அது கீழேயும் கொண்டு செல்லப்படுகிறது. சுதந்திரத்திற்குப் பிந்தி (1948) அடுத்தடுத்து வந்த இலங்கை அரசுகள் பேரினவாதத்தை நோக்கிச் சென்றன. தமிழர்களின் உரிமைகள் மறுக்கப்பட்டன. அந்த வகையில் அங்கே ஓர் இன ஒடுக்குமுறை இருந்தது. இது தேசிய இன உணர்வைக் கீழே கொண்டு செல்கிற முயற்சிகளுக்குப் பக்கத் துணையாக இருந்தது. ஆனால், எல்லாக் காலங்களிலுமே ஈழச் சமூக உருவாக்கம் என்பது ஒற்றைத் தன்மையுடையதாக இருந் திருக்கவில்லை. உள் வேறுபாடுகளும் யாழ்ப்பாண மேலாதிக்கம் குறித்த அச்சமும் எப்போதும் பிறரிடம் இருந்து வரத்தான் செய்தது. விடுதலைப்புலிகளின் ஆதரவாளர் என அறியப்படுகிற ஈழத்தமிழறிஞர் கா.சிவத்தம்பியின் 'இலங்கைத் தமிழரது சமூகக் கட்டமைப்பின் சில அம்சங்கள்' என்கிற கட்டுரையை (1979) வாசித்துப் பாருங்கள். இலங்கையிலுள்ள தமிழ் பேசும் மக்க ளிடையே குறைந்தபட்சம் கீழ்க்கண்ட பிரிவுகளைச் சொல்லுவார்.

1. பெருந்தோட்டங்களில் வாழும் இந்தியத் தமிழர்கள் - இவர்கள் என்றைக்கும் தனி ஈழக் கோரிக்கைக்குள் வந்தது கிடையாது.

2. இலங்கைச் சோனகர் - தமிழ் மட்டுமே பேசுகிற முஸ்லிம் தமிழர்களைத்தான் பேராசிரியர் இப்படிச் சொல்லுகிறார்.

3. கிழக்கு மாகாணத் தமிழர் - இவர்களை மட்டக்களப்புத் தமிழர் என்றும் பேராசிரியர் சொல்லுவார்.

4. வட மாகாணத் தமிழர்கள் - இவர்களையும், பேராசிரியர் இரண்டாகப் பிரிப்பார். அவை (அ) வன்னி, மன்னார் மாவட்டத் தமிழர்கள் (ஆ) யாழ்ப்பாணத் தமிழர்கள்

புவியியல், பொருளியல் ஒழுங்கமைப்பு, சமூகக் கட்டுமானம், அபிவிருத்தி மட்டம் என்கிற அடிப்படைகளில் இந்தப் பிரிவினை செய்யப்படுவதாகப் பேராசிரியர் குறிப்பிடு வார். பேராசிரியரின் கவனத்திற்கு வராத, ஆனால் வந்திருக்க

வேண்டிய இன்னொரு முக்கியப் பிரிவு பஞ்சமர்கள் எனச் சொல்லப்படும் தலித் மக்கள். இவர்களின் தனித்துவம், இவர்கள் மீது மற்ற தமிழர்களால் கடைபிடிக்கப்பட்ட கொடுந் தீண்டாமை ஆகியவற்றை அறிய டானியல் எழுத்துக்களைப் படியுங்கள். தேசிய இனப் பிரச்சினையில் இவர்களின் இடம் குறித்து டானியல் தனது கடிதங்களில் விரிவாகப் பேசியுள்ளார். டானியல் கடிதங்கள் நூலில் அவற்றைப் பார்க்கலாம். பேராசிரியரே 30 ஆண்டுகளுக்குப் பின்னால் - இன்று - இக்கட்டுரையை எழுதி யிருப்பாரேயானால் தலித்களையும் தனியாகச் சுட்டிக்காட்டி யிருப்பார். இல்லையா?

யாழ்ப்பாண மேலாதிக்கம் குறித்த அச்சத்தின் காரணமாக வாய்ப்புக் கிடைத்த போதெல்லாம் இந்த 'இதர தமிழர்கள்' தம் மக்கள் நலன் என்று கூறி சிங்கள அரசியல் கட்சிகளுடன் சேர்ந்து யாழ்ப்பாணத் தமிழர் ஆதிக்கம் வகித்த தமிழர் கட்சிகளுக்கு எதிராகச் செயல்பட்டுள்ளதே வரலாறு. மட்டக்களப்புத் தொகுதி யின் முதலாவது பாராளுமன்ற உறுப்பினரான செ.இராஜதுரை, தமிழர் விடுதலைக் கூட்டணியிலிருந்து விலகி ஐக்கிய தேசியக் கட்சியில் சேர்ந்தபோது 'கிழக்கு மாகாணத் தமிழரின் அபிவிருத் திக்காக' இப்படிச் செய்வதாகக் கூறினார். இதைச் சுட்டிக்காட்டும் சிவத்தம்பி, "தமிழ் மக்களின் பிரச்சினை வெறுமனே ஒரு மொழிப் பிரச்சினையோ, வகுப்புவாதப் பிரச்சினையோ மட்டுமல்ல'' என்பார். மலையகத் தமிழர்களின் தலைவர் தொண்டைமானும் இப்படிச் சொல்லித்தான் அரசில் அங்கம் வகித்தார். டொனமூர் குழு அறிக்கை அமலுக்கு வந்தபோது யாழ்ப்பாணத்தில் இளைஞர் காங்கிரஸ் முன்னின்று நடத்திய 'தேர்தல் பகிஷ்கரிப்பில்' மட்டக்களப்புத் தமிழர்கள் பங்கு பெறவில்லை. ஈ.ஆர்.தம்பிமுத்துவை அரசாங்க சபைக்கு அவர்கள் தேர்வு செய்தனர். இந்தத் தேர்தல் புறக்கணிப்பைப் பற்றிச் சொல்ல வரும்போது, "இது இந்திய சுயராஜ்ஜிய இயக்கத்தின் அருட்டுணர்வால் ஏற்பட்டது'' எனப் பேராசிரியர் சொல்வது நினைவுக்கு வருகிறது. வடக்கு, கிழக்கு இரு பகுதிகளிலும் சாதி முறை, தேச வழமைச் சட்டங்கள், பொரு ளாதார ஒழுங்கமைப்பு - கிழக்கு மாகாணம் பெரும்பான்மையாக விவசாயத்தைச் சார்ந்தது - எனப் பல்வேறு அம்சங்களிலும் வேறு பட்டுள்ளன. இந்த வேறுபாடுகளை எல்லாம் மீறி பேரினவாத ஒடுக்குமுறையினூடாக ஓர் ஒற்றுமை ஏற்பட்டது வரவேற்கத் தக்கதுதான். இந்த வேறுபாடுகள் உணர்ந்து, அங்கீகரிக்கப்படு வதன் மூலமாகத்தான் இந்த ஒற்றுமை தக்கவைக்கப்பட்டிருக்க

வேண்டும். ஆனால், நடந்தது வேறு. அதன் விளைவே இன்றைய தேக்கம்.

**ஈழ விடுதலைப் போராட்டத்திற்கு இங்குள்ள தமிழ் தேசியர்களிடம் பெற்ற ஆதரவு அளவிற்கு ஈழத்தில் இப்போதுள்ள மக்களிடம் விடுதலைக்கான ஆதரவு இருக்கும் என நினைக்க வாய்ப்பு இருக்கிறதா?**

நானறிந்தவரை இன்று ஈழத்தின் பல பிரிவு மக்களின் மனநிலையும் எவ்வாறு உள்ளது எனச் சொன்னேன். வெறும் ஊகமாக அல்ல எனக்குள்ள அனுபவங்கள், வாசிப்பு ஆகியவற்றின் அடிப்படையில் சொல்கிறேன். எந்தத் தீர்வுக்கும் முன்னால் ஒரு கருத்துக்கணிப்பு, பொது வாக்கெடுப்பு நடத்தி மக்களின் கருத்தைத் தெரிந்து கொள்வது அவசியம். முப்பதாண்டு காலமாகப் போர் நடந்து கொண்டுள்ள ஒரு நாட்டில் அப்படியான கருத்துக் கணிப்பு உடனடிச் சாத்தியமில்லை என்பது உண்மை தான். தவிரவும் அதை வெற்றி போதையிலிருக்கும் பேரினவாத அரசின் கீழ் நடத்தக் கூடாது. ஐ.நா. சபை அல்லது மேலாதிக்க நாட்டமில்லாத லத்தீன் அமெரிக்கா, ஆப்ரிக்க நாடுகளின் கண்காணிப்பின்கீழ் இதை நடத்தலாம். இப்போது நான் குறிப்பிட்ட பல்வேறு தமிழ்ச் சமூகப் பிரிவுகளின் பிரதிநிதிகளும் பேச்சுவார்த்தைகளில் உள்ளடக்கப்பட வேண்டும். எங்களைத் தவிர வேறு யாரையும் பேச்சு வார்த்தைக்கு அழைக்கக் கூடாது என்கிற நிலைப்பாட்டை தங்களுக்கு இப்போது ஏற்பட்டுள்ள பின்னடைவைக் கணக்கில் கொண்டாவது புலிகள் விட்டுக் கொடுக்க வேண்டும். இங்கேயுள்ள தமிழ்த் தேசியர்களைப் பற்றிக் கேட்டீர்கள். அவர்கள் பெரும்பாலும் புலிகளின் ஆதரவாளர்கள். புலிகளின் பக்தர்கள். புலிகளின் முகவர்கள். புலிகள் = ஈழத் தமிழர் என்கிற சமன்பாட்டை உருவாக்கிச் செயற்படுபவர்கள். ஈழத் தமிழ்ச் சமூக அமைப்பு, போராட்ட வரலாறு, இன்றைய உலகச் சூழலில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள் பற்றி எல்லாம் எந்தக் கவலையுமின்றி 'கடைசியாக தேசியத் தலைவர் எதையாவது செய்து வெற்றி பெற்று விடுவார்' என்கிற நம்பிக்கையில் திருப்தியாக இருப்பவர்கள். இவை குறித்தெல் லாம் சிந்திக்கிறவர்கள்தான் எஞ்சியுள்ள தமிழர்களின் இன்றைய நிலை குறித்து எந்த நம்பிக்கையும் சாத்தியமின்றி வேதனைப்பட வேண்டியிருக்கிறது.

**தமிழகத்தில் 83ல் இருந்த ஈழ எழுச்சியையும் தற்சமயம் உள்ள எழுச்சியையும் வித்தியாசப்படுத்த முடியுமா?**

நிச்சயமாக. 1983 இனப் படுகொலையை ஒட்டி தமிழகமே அன்று கொந்தளித்திருந்தது. இன்றும் போரினூடாக அங்கே

நடைபெறும் இனப் படுகொலைகள் பற்றி தமிழகம் கொந்தளித்திருந்தாலும் அன்றுள்ள அரசியல் சூழலும் இன்றுள்ள நிலையும் வேறுபட்டுள்ளன. அன்று புலிகள் மட்டுமல்ல, டெலோ, பிளாட், ஈ.பி.ஆர்.எல்.எப். இன்னும் சில இடதுசாரிக் கொள்கை உடைய என்.எல்.எப்.டி. போன்ற அமைப்புகள் எனப் பலரும் அப்போது இயங்க வாய்ப்பிருந்தது. தமிழ் மக்கள் எல்லோருக்கும் உதவினர். அரசியல் கட்சிகளும் பல்வேறு அமைப்புகளுடனும் உறவு கொண்டிருந்தன. உதவிகள் புரிந்தன. ஈழப் போராட்ட அமைப்புகளுக்கிடையே ஒரு குறிப்பிட்ட அளவிற்கு ஈழ விடுதலை குறித்த கருத்தொருமிப்பு இருந்தது. 1985 ஜூலையில் பூட்டான் தலைநகர் திம்புவில் நடைபெற்ற பேச்சுவார்த்தையில் எங்களுடன் மட்டும்தான் பேச வேண்டும் என்கிற நிபந்தனையைப் பிரபாகரன் விதிக்கவில்லை. "திம்புக் கோட்பாடுகள்'' எனக் கூறப்படுகிற நான்கு அம்ச கூட்டறிக்கை ஒன்று எல்லாத் தரப்பும் பங்குபெற்ற 'தூதுக்குழுவால்' முன்வைக்கப்பட்டது. இத்தகைய பொதுக் கருத்தின் அடிப்படையில் தமிழக மக்களின் ஆதரவும் பொதுவாக இருந்தது. எல்.டி.டி.ஈ. ஆதிக்கம் மிக்க ஒரு இராணுவ சக்தியாக மாறியபோது படிப்படியாகப் பிற இயக்கங்கள் அழித்தொழிக்கப்பட்டன. முதலில் 'டெலோ' தாக்கி அழிக்கப்பட்டது. அதன் தலைவர் சிறிசபாரத்தினம் கொல்லப்பட்டார். 1986 இறுதிக்குள் 'ஈ.பி.ஆர்.எல்.எப்.', 'பிளாட்' ஆகிய அமைப்புகளைக் கலைக்க உத்தரவிடப்பட்டது. பத்மநாபா, உமாமகேஸ்வரன் எல்லோரும் கொல்லப்பட்டனர். யாரும் யாரையும் கொல்கிற, கடத்துகிற ஒரு கொடிய சூழல் அதன்பின் உருவானது. மாற்றுக் கருத்துகள் வேரறுக்கப்பட்டன. புலிகளின் கருத்தே பொதுக் கருத்து என்பதாக ஒரு மாயை உருவாக்கப்பட்டது. "என்ன இருந்தாலும் களத்தில் நிற்கிறவர்கள் அவர்கள் தானே...'' என்றொரு 'நியாயம்' பேசி புலிகளின் எல்லாவிதமான மனிதஉரிமை மீறல்களையும் வெளிப்படையாகவோ, மௌனமாகவோ ஆதரிக்கும் நிலையை இங்குள்ள புலிகளின் முகவர்கள் மேற்கொண்டனர். இன்று ஈழத் தமிழர்களின் பொதுக் கருத்து என்று ஏதுமில்லை. அப்படி ஏதும் சொல்ல முடியுமானால் உடனடியாகப் போரை நிறுத்த வேண்டும். தமிழ் மக்கள் கொல்லப்படுவது நிறுத்தப்பட வேண்டும். சிவிலியன்கள் சுதந்திரமாகப் போர்ப் பகுதியிலிருந்து வெளியேறுவது அனுமதிக்கப்பட வேண்டும் என்பவைதான் பொதுக் கருத்தாக இருக்க முடியும். எனவேதான் இன்றைய ஆதரவு எழுச்சி போர் நிறுத்தம் என்கிற மட்டோடு நிற்கிறது. புலிகளின் ஆதரவாளர்கள் மட்டுமே

தனி ஈழத்தை அங்கீகரி என்பது போன்ற கோரிக்கைகளை வைக்கின்றனர்.

தவிரவும் இன்றைய எழுச்சியில் இங்குள்ள அரசியல் கட்சிகளின் ஆதரவு அப்பட்டமான சந்தர்ப்பவாதத் தன்மையில் அமைகிறது. பழ. நெடுமாறன் தலைமையில் இயங்கும் இலங்கைத் தமிழர் பாதுகாப்பு இயக்கத்தை எடுத்துக் கொண்டீர் களானால் காங்கிரசை ஆதரிப்பவர்கள், எதிர்ப்பவர்கள் எல்லோரும் ஒன்றாக நிற்கிறார்கள். சத்தமில்லாமல் ஆறாவது உறுப்பினராக பா.ஜ.க.வின் இல. கணேசனும் சேர்த்துக் கொள்ளப்பட்டுள்ளார். பா.ஜ.க தலைவர்களும், தா. பாண்டியனும் கொஞ்சமும் வெட்கமின்றி ஒரே மேடையில் தோன்றுகின்றனர். எந்தக் காரணம் கொண்டும் மதவாத, பாசிச சக்திகளுடன் கம்யூனிஸ்டுகள் கைகோர்க்க மாட்டார்கள் என்கிற பெருமையையும் இன்று இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி இழந்து நிற்கிறது. பல்வேறு கூட்டணிகளைச் சேர்ந்தவர்களும் இருப்பதால் யாரும் இங்கே அரசியல் பேசக் கூடாது என உத்தரவு போடுகிறார் நெடுமாறன். கட்சிக் கொடிகளுடன் பொது நிகழ்ச்சிகளில் பங்கு பெறக் கூடாது. சுவரொட்டிகளில் கட்சிப் பெயர்கள் போடக் கூடாது. ஆக ஈழப் போராட்ட ஆதரவு என்கிற பெயரால் இங்கே ஓர் அரசியல் நீக்கம் நடைபெறுவதை நாம் கவனிக்கத் தவறக் கூடாது.

ஈழத் தமிழர்களுக்கு ஆதரவு என்கிற பெயரில் இங்குள்ள அரசியலுக்குத் துரோகம் இழைத்துவிடக் கூடாது. நெருக்கடி நிலை எதிர்ப்பு, நவ நிர்மாண் இயக்கம் என்கிற பெயர்களில் ஜெயப்பிரகாஷ் நாராயணன் பாரதிய ஜனசங் கட்சியை இணைத்துக் கொண்டது, நரேந்திர மோடியை முன்னிறுத்தியது ஆகியவற்றின் கொடிய விளைவுகளை நாம் ஒருமுறை சந்தித்தது போதாதா? இந்துக்கள் என்பதால்தான் ஈழத் தமிழர்களை உலகம் கண்டுகொள்ளவில்லை என்கிறார் நெடுமாறன். இலங்கைத் தமிழ் முஸ்லிம்களுக்குப் பாகிஸ்தான் பயிற்சி அளிக்கிறது என ஒரு குண்டைத் தூக்கிப் போடுகிறார் மருத்துவர் ராமதாஸ். தமிழர்கள் என்றில்லாவிட்டாலும் இந்துக்கள் என்றாவது ஈழத் தமிழர்களுக்கு உதவலாமே என்கிறார் தொல். திருமாவளவன். எல்லாவற்றையும் பார்த்துப் புன்னகைத்த தா. பாண்டியன், அந்தக் கால தி.மு.க பாணியில் கனக விசயர் தலையில் கல்லேற்றிய பெருமை பேசுகிறார். "வீரமரணம் அடையத் தயாராகுங்கள்'' எனத் தமிழ் இளைஞர்களை நோக்கி அறைகூவல் விடுக்கிறார். தமிழ் தேசியப் பொதுவுடைமைக் கட்சி, பெரியார் திராவிடர் கழகம் முதலான

சிறு அமைப்புகளுக்கு இதுகாறும் தலைமை ஏற்றுவந்த நெடுமாறன் பெரிய கட்சிகளை நோக்கித் திரும்பிவிட்டதால் இவர்கள் ஒரு கணம் தடுமாறி நிற்கின்றனர். சீமான் போன்ற உணர்ச்சிப் பேச்சாளர்களிடம் தஞ்சமடைகின்றனர். போர் நிறுத்தம் தவிர வேறு அம்சங்களில் இன்று பொதுக் கருத்து கிடையாது.

**போர் நிறுத்தம் என்பது இரு சாராரையும் நோக்கி வைக்கப்பட வேண்டும்தானே?**

ஆமாம். ஆனால், அதிலொரு அம்சத்தை நாம் கவனிக்கத் தவறலாகாது. இன்று புலிகள் போர் நிறுத்தத்திற்கு தயாராக உள்ளனர். வெளிப்படையாக அறிவிக்கவும் செய்கின்றனர். கடும் பின்னடைவுக்குள்ளாகியுள்ள அவர்கள் இப்படி கூறுவது தவிர வேறு வழியில்லை. ஆனால் பல ஆண்டுகளுக்குப் பின் வெற்றியை ருசித்துக் கொண்டுள்ள இலங்கை இனவாத அரசோ இந்த இறுதி வாய்ப்பை நழுவவிடத் தயாராக இல்லை. இதுதான் இன்றைய சூழலின் வேதனையான அம்சம். அரசியல் தீர்வுக்குத் தயார் எனச் சொல்லிக் கொண்டே, எந்தப் புதிய அதிகாரப் பரவல் திட்டங்களையோ, தீர்வையோ முன் வைக்காமலேயே புலிகள் ஆயுதங்களைக் கீழே போட வேண்டும். அப்போதுதான் பேச்சு வார்த்தை என்கிறது ராஜபக்சே அரசு. நேபாளத்தில் மாவோயிஸ்டுகள் ஆயுதங்களை ஒப்படைத்துவிட்டு பேச்சுவார்த்தைக்கு வந்தார்களானால் முடியாட்சி நீக்கப்பட வேண்டும் என்கிற பொதுக் கருத்து அங்கே உருவாகியிருந்தது. அரசியல் சட்ட அவைக்கான தேர்தல் என்கிற உடன்பாடு ஏற்பட்டது. அதற்குப் பின்னும்கூட ஆயுதங்களை அவர்கள் ஐ.நா. மேற்பார்வையில் தான் ஒப்படைத்தார்கள். இதுபோன்ற எந்தத் தீர்வுமின்றி ஆயுதங்களைப் போடச் சொன்னால் அது எப்படிச் சரியாக இருக்க முடியும்? குறைந்தபட்சம் கூட்டரசு ஆட்சி முறையை அனுமதிக்கும்வண்ணம் ஸ்ரீலங்கா அரசியல் யாப்பின் பிரிவு 2 மற்றும் 76 ஆகியவற்றை ராஜபக்சே அரசு நீக்க ஆவன செய்ய வேண்டும். சிங்களம், தமிழ் தேவையானால் ஆங்கிலம் ஆகிய மூன்றும் அரச கரும மொழிகள் என்றவாறு 18வது பிரிவு திருத்தப்பட வேண்டும். பவுத்தத்திற்கு அளிக்கப்பட்டுள்ள முதன்மை நிலை மறுக்கப்பட்டு இலங்கையை ஒரு மதச்சார்பற்ற நாடு எனப் பிரகடனப்படுத்தும் வகையில் 9ஆம் பிரிவு திருத்தப்பட வேண்டும். வடக்கு, கிழக்கு மற்றும் தலித், முஸ்லிம் மக்களின் கருத்துகளை அறிய கருத்துக் கணிப்பு நடத்த ஒப்புதலளிக்க வேண்டும். இப்படியான ஒரு உருப்படியான தீர்வு

திட்டமின்றிப் புலிகளை ஆயுதங்களைக் கீழே போடுங்கள் எனச் சொல்வதன் பொருளென்ன?

இன்னொன்றையும் நாம் மறக்கக்கூடாது. 30 ஆண்டுப் போரால் பாழ்பட்டுக் கிடக்கும் தமிழ்ச் சமூகத்தின் அவலங்களின் சகல பரிமாணங்களும் இங்கே பேசப்படுவதில்லை. உடனடியாக அங்கே மிகப்பெரிய அளவில் புனரமைப்புப் பணிகள் மேற்கொள் ளப்பட வேண்டும். மருத்துவம், கல்வி, மனித உரிமைகள் ஆகிய மூன்று அம்சங்களுக்குப் பிரதானம் அளித்து சர்வதேசச் சமூகம் களமிறங்க வேண்டும். இத்தகைய நிர்மாணப் பணியில் இந்தியா வுக்குப் பிரதான பங்கிருக்கிறது. ஒருவேளை புலிகள் மற்றவர் களுடன் சமமாக அமர்ந்து பேச்சுவார்த்தைக்கு உடன்படும் பட்சத்தில் ராஜீவ் காந்தி கொலை வழக்கிற்காக பிரபாகரனை ஒப்படைக்க வேண்டும் என்பது போன்ற அபத்தக் கோரிக்கை களை எல்லாம் இந்திய அரசு விட்டுவிட்டு பேச்சுவார்த்தைக்கு உதவ வேண்டும்.

**இலங்கைக்கு இந்தியா ஆயுத உதவி வழங்குவது அந்தத் 'துன்பியல்' சம்பவத்திற்காக மட்டுமா அல்லது வேறு ஏதும் பொருளாதாரக் காரணிகள் உள்ளனவா?**

தென் ஆசியாவில் ஒரு 'தாதா'வாகவும் உலக அளவில் ஒரு வல்லரசாகவும் தன்னை நிலைநிறுத்திக் கொள்ளும் பேராசையோடு இயங்கும் நாடு இந்தியா. இதை நான் 'விரிவாக்க நோக்கம்' என்று சொன்னால், அதை நீங்கள் ஒத்துக் கொள் வீர்களோ என்னவோ. தொடக்கம் முதல் ஈழப் பிரச்சினையில் இந்தியாவின் அணுகல் முறை இரட்டை நிலையுடனேயே இருந்து வந்துள்ளது. ஒரே நேரத்தில் ஒருபக்கம் இரு தரப்புக்கும் இடையில் சமாதான முயற்சிக்கு உதவும் நடவடிக்கைகளையும் இன்னொரு பக்கம் போராளிக் குழுக்கள் எல்லாவற்றிற்கும் பயிற்சி மற்றும் ஆயுதம் அளிக்கும் வேலையையும் செய்தார் இந்திரா காந்தி. தமிழ் மக்களின் விதியை நிர்ணயிப்பதற்கு அவர்களைச் சம்பந்தப்படுத்தாமலேயே ஒரு ஒப்பந்தத்தை ஜெயவர்த்தனாவுடன் செய்து கொண்டார் ராஜீவ் காந்தி. ஒப்பந்தத்தை நிறைவேற்றுவதற்காக 'அமைதிப்படை'யை அனுப்பி கடும் மனித உரிமை மீறல்களுக்கும் அவர் காரணமானார். பெரும் இழப்புகளுடனும், அவமானத்துடனும், தோல்வி யுடனும் திரும்ப நேர்ந்தது இந்திய அமைதிப்படை. உச்சகட்ட மாக அந்த 'துன்பியல் சம்பவமும்' நிகழ்ந்தேறியது. இந்தியாவின் இந்த விரிவாக்க நோக்கத்தில் அதன் பொருளாதார நலன்களும் அடங்கும். சிலவற்றை நானும் ஷோபா சக்தியும் முன்பே

கூறியுள்ளோம். ஒரு வேளை போர் நின்று நிர்மாணப் பணிகள் மேற்கொள்ளப்படுமானால் பெரிய அளவில் அதில் இந்திய முதலாளிகள் பங்கு பெறுவார்கள். இந்தியா தலையிட்டு, தா.பா. மொழியில் பேசுவதானால் ஒரு ஏவுகணையை வீசி இலங்கையை வழிக்குக் கொண்டுவர வேண்டும் என இங்கே எழும்பும் குரல் இன்றைய உலகச் சூழல், இந்தியாவின் வெளியுறவு அரசியல் ஆகியவற்றைப் புரிந்து கொள்ளாமையின் விளைவே. சென்ற மாதம் சென்னையில், காங்கிரஸ் நடத்திய ஈழப் பிரச்சினை விளக்கக் கூட்டத்தில் இன்றைய உள்துறை அமைச்சர் ப. சிதம்பரம் வெளிப்படையாக இதைப் போட்டுடைத்தார். காஷ்மீரில் நாங்கள் என்ன வேலையைச் செய்து கொண்டு இருக்கிறோமோ அதே வேலையைச் செய்யக் கூடாது என நாங்கள் எப்படி இலங்கை அரசிடம் கோர முடியும் என்று அவர் வெளிப்படை யாகக் கேட்டார் அல்லவா? செப்டம்பர் 11க்குப் பின் மாறியுள்ள உலக நிலையை புலிகளும் சரி, புலி ஆதரவாளர்களும் சரி கண்டு கொள்வதும் இல்லை. புரிந்து கொள்வதும் இல்லை.

**சிங்கள இனவாத அரசுக்கெதிரான மக்களின் விடுதலை எழுச்சியைச் சிதைத்ததில் புலிகளின் பங்கு என எவற்றையெல்லாம் வரையறை செய்யலாம்?**

நிறையத் தவறுகளை அவர்கள் செய்துள்ளனர். பிற இயக்கங் களை அழித்தது, கருத்துரிமையைப் பறித்தது, முஸ்லிம்கள், கிழக்கு மாகாணத்தவர் எல்லோரையும் அந்நியப்படுத்தியது, ராஜீவ் காந்தி கொலை மூலம் இந்திய அரசை நிரந்தரப் பகையாக்கிக் கொண்டது, ரணில் விக்ரமசிங்கேக்கு ஓட்டுப் போட வேண்டாமெனச் சொல்லி ராஜபக்ஷே வெற்றி பெறுவதற்கு வழி வகுத்தது, ஈழப் போராட்டத்தின் மிகப்பெரிய ஆதரவுத் தளமான தமிழகத்தில் தமது முகவர்களாக உள்ளவர்களோடு மட்டுமே உறவைப் பேணி பிற ஜனநாயக, இடதுசாரி சக்திகளிடமிருந்து விலகி நின்றது என நிறையச் சொல்லலாம். குறிப்பாகப் போராட்டத்தை அவர்கள் வன்முறை யாக மக்களிடமிருந்து பறித்துக் கொண்டார்கள். தமிழ் மக்களை கப்பம் மட்டும் செலுத்துபவர்களாகவும் வாய்மூடி ஆதரவளிப்ப வர்களாகவும் மட்டுமே ஆக்கினார்கள். இங்கு ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன். இன்றுள்ள சூழலில் நாம் புலிகளை மட்டும் வைத்து பிரச்சினைகளை அணுகுவதைச் சற்றே ஒத்தி வைப்போம். 2000 புலிகளைக் கொல்வதற்கு 2 லட்சம் மக்களைக் கொன்றாலும் பரவாயில்லை என இலங்கை அரசு இன்று நினைக்கிறது. 2000 புலிகள் தப்பித்தாலும் 2 லட்சம் மக்கள் காப்பாற்றப்படட்டும்

என்கிற நோக்கில் நாம் போர் நிறுத்தம் என்கிற கோரிக்கையில் மற்றவர்களுடன் ஒன்றிணைவோம்.

**தமிழ் மக்களுக்கான ஓர் அரசியல் தீர்வை ஏற்படுத்த சிங்கள அரசாங்கத்திற்கு அழுத்தம் கொடுக்க இலங்கை இடதுசாரிகள் முன்வரவில்லை தானே?**

கடந்த சுமார் 60 ஆண்டுகளாகவே ஒரு வகை இனம் சார்ந்த அரசியல் வடக்கிலும் தெற்கிலும் நிலவிய ஒரு சூழலில் இடதுசாரிகள் இரு புறத்திலும் பலவீனப்பட்டே இருந்தனர். 1975க்குப் பின் இரண்டு பக்கங்களிலும் தீவிர இன உணர்வுகள் வெளிப்பட்டபோது அவர்கள் முற்றிலுமாக அரசியற் களத்தி லிருந்து நீக்கப்பட்டனர். இது ஒரு வேதனையான வருந்தத்தக்க நிகழ்வு. எனினும் இரு தரப்பிலும் இடதுசாரிகள் தான் ஓரளவு நடுநிலையுடன் இனவெறிகளுக்கு அப்பால் நின்று இந்தப் பிரச்சினையை அணுகிவந்துள்ளார்கள் என்பதையும் நாம் சொல்ல மறக்கக் கூடாது. சமீபத்தில் தமிழகமெங்கும் மக்களைச் சந்தித்துப் பேசிய இலங்கையில் உள்ள ஐக்கிய சோஷலிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளர் சிரீதுங்க ஜெயசூர்யாவின் பேச்சை நீங்கள் கேட்டிருப்பீர்கள் தானே.

**திராவிட, தமிழ் இயக்க மரபென்பது இயல்பாகவே பார்ப்பன எதிர்ப்புணர்வு கொண்டது என்ற நிலை மாறி பார்ப்பன ஆதரவு சக்திகளாக மாறிப் போயுள்ள நிலை இன்றைய ஈழ ஆதரவு இயக்கங்களில் வெளிப்படுகிறது எனலாமா?**

திராவிட-தமிழ் மரபு என்பது இயல்பாகவே பார்ப்பன எதிர்ப்பு மரபு என்றெல்லாம் பொதுப்படையாகச் சொல்லிவிட முடியாது. உண்மையில் இங்கே இருவிதப் போக்குகள் இருந்து வருகின்றன. ஒன்று பார்ப்பனர்களை விலக்கி பிற மொழிச் சிறுபான்மையினர் எல்லோரையும் 'திராவிடர்'களாக உள்ளடக்கும் போக்கு. பெரியார் மற்றும் இதர திராவிட இயக்கங்களை இதற்கு எடுத்துக்காட்டாய் சொல்லலாம். மற்றது மொழிச் சிறுபான்மையினரைப் பிரதான எதிரிகளாக நிறுத்தி பார்ப்பனர்களையும் தமிழர்களாக ஏற்கும் போக்கு. ம.பொ. சிவஞானம், பெங்களூர் குணா மற்றும் பல தமிழ்த் தேசிய இயக்கங்கள் இந்த வகையில் வரும். எனவே, தமிழ்த் தேசியம் என்றாலே பார்ப்பன எதிர்ப்பு என நாம் பொருள் கொள்ளக் கூடாது. தனித்தமிழ் பேசிய பலரும் கூட பண்பாட்டு அடிப்படையில் சைவத்தையும் இதர பார்ப்பனக் கூறுகளையும் ஏற்றுக் கொண்டவர்கள்தான். இது தமிழ்ச்சூழலில். ஈழத்தில் பார்ப்பன ஆதிக்கம் கிடையாது. அந்த இடத்தில் அங்கே வேளாள

ஆதிக்கமும் சைவமும் அமர்ந்து கொள்கின்றன. "யாழ்ப்பாணத்தில் எல்லாம் தமிழ் என்பது அவ்வளவு சரியானதல்ல. ஆதிக்கமுடைய வெள்ளாளச் சாதியினர் அவர்களுடைய குறித்த சில வர்க்கப் பண்புகளோடு, தமது தேவைகளையும் கோரிக்கைகளையும் தமிழர்களுடைய கோரிக்கைகளாக வெளிப்படுத்தினர் என்பதைக் காலம் மறுபடியும் நிரூபித்துள்ளது. காராளசிங்கம் இதனை 'வெள்ளாள மேலாதிக்கம்' எனக் குறிப்பிடுவார்'' என்று நான் சற்று முன் குறிப்பிட்ட கட்டுரையில் பேராசிரியர் சிவத்தம்பி குறிப்பிடுவார். எனவே, தமிழ், தமிழ்க் கலாசாரம் முதலியவற்றை முன்னிறுத்தும்போது பார்ப்பன எதிர்ப்பு, பார்ப்பனப் பண்பாட்டு எதிர்ப்பு முதலியன நீர்த்துப் போவதும் தமிழர்களை இந்துக்களாகப் பார்ப்பதும் வியப்புக்குரியதல்ல. இன்னொன்றையும் கவனிக்க வேண்டும். வெறும் மொழி மட்டுமே தேசிய இனத்தை அடையாளப்படுத்தி விடுவதில்லை என்பதற்கு தமிழை மட்டுமே வட-கிழக்குபேசுகிற இலங்கை முஸ்லிம்களை இலங்கைச் சோனகர் என்பதாகப் பார்க்கும் நிலை ஒரு எடுத்துக்காட்டு.

**சிங்களப் பெருந் தேசிய இனவாதம், தமிழ்த் தேசியவாதம் ஆகியன உருப்பெற்றதில் வரலாற்றின் பங்கு என்ன?**

எல்லாத் தேசிய இன உருவாக்கங்களையும் போல இங்கும் வரலாறு முக்கியப் பங்கு வகித்திருக்கிறது. குறிப்பாக 18, 19-ம் நூற்றாண்டுகளில் உலகளவில் பிரபலமாக இருந்த 'இனவியற் கோட்பாடு' (Racial theory) இந்தியத் துணைக் கண்டத்தின் சம கால வரலாற்றில் பெரும் பங்கு வகித்துள்ளதை நான் எனது 'ஆரியக் கூத்து' நூலில் விரிவாக எழுதியுள்ளேன். 1788ல் வெளியான வில்லியம் ஜோன்சின் ஐரோப்பிய இந்திய மொழிகளுக்கிடையிலான அமைப்பு ரீதியான ஒற்றுமைகளை வெளிப்படுத்தி வந்த நூல் ஒரு மிகப் பெரிய அரசியல் தாக்கத்தை ஏற்படுத்தியது. 'இந்தோ ஐரோப்பிய மொழிகள்' என ஐரோப்பிய மொழிகளும் சமஸ்கிருதம் உள்ளிட்ட வடமொழிகளும் ஒன்றாக, ஒத்தவைகளாக (cognates) முன் வைக்கப்பட்டன. மொழிகளுக்கிடையேயான இந்த ஒற்றுமையை யாரும் மறுக்க இயலாது. ஆனால் தவறு எங்கே நடந்தது என்றால் மொழிகளுக்கிடையேயான இந்த ஒற்றுமை மொழி பேசும் மக்களுக்கிடையேயான ஒற்றுமையாகவும் நீட்டப்பட்டதுதான் பிரச்சினை. இவர்கள் 'ஆரியர்' எனக் குறிப்பிடப்பட்டனர். செமிடிக் அல்லாத ஐரோப்பிய - இந்திய மக்களின் பொது மூலத்தைக் கூறும் இக்கோட்பாட்டை "வரலாற்றின் ஆகப் பெரிய கண்டுபிடிப்பு'' என ஹெகல் கூறினார்

என்றால் பார்த்துக் கொள்ளுங்கள். இந்தக் கருத்து பெரிய அளவில் பிரச்சாரமாவாதற்கு மேக்ஸ்முல்லர் உதவினார். பின்னாளில் தனது தவறுக்கு அவர் வருந்தினார் என்றபோதிலும், இன்று இனக் கோட்பாடு தவறு என ஆய்வாளர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்ட போதிலும் இந்த 'ஆரிய இனக்' கொள்கை உலகைப் பிடித்தாட்டி யது. ஆரிய மேன்மைக் கொள்கையின் அடிப்படையில் ஹிட்லர் உருவாக்கிய பாசிசக் கொள்கை, யூத இன அழிப்பு, இரண்டாம் உலகப் போர் ஆகியவற்றை நாம் மறந்துவிட இயலாது. முல்லரின் கருத்துக்கு இலங்கையில் சிங்கள அறிஞர்கள் மத்தியிலும் மிகப் பெரிய செல்வாக்கு இருந்தது.

இந்தப் பின்னணியில்தான் 1856ல் கால்டுவெல் தமிழ் உள்ளிட்ட தென்னிந்திய மொழிகளுக்கிடையேயான ஒற்றுமையை வெளிப்படுத்தி இன்னொரு பெரும் அரசியல் எழுச்சிக்கு வித்திடுகிறார். ஆரிய மொழிக்குடும்பத்திலிருந்து அனைத்து வகைகளிலும் வேறுபட்ட ஓர் உள்ளூர் மொழிக் குடும்பமாக இது கருதப்பட்டது மட்டுமல்ல, இம்மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் 'திராவிடர்கள்' எனக் கருதப் பட்டனர். திராவிடர்கள் உள்நாட்டுப் பூர்வ குடியினர், சிந்து சமவெளிக் கலாசாரம் அவர்களுடையது. படை எடுத்து வந்த ஆரியர்கள் அவற்றை அழித்தனர். இராமாயணம் இதை விளக்குகிற காவியம் என அடுத்தடுத்து கோட்பாடுகளும் அதை ஒட்டிய அரசியலும் உருவாயின. எனினும் காலங் காலமான ஒரு பண்பாட்டு ஆதிக்கத்திற்கு எதிரான ஒரு முற்போக்கு அரசியல் கூறு இதிலிருந்தது என்பதை யாரும் மறுக்க இயலாது. ஈழத் தமிழ் தேசிய முன்னோடிகளுக்குக் கால்டுவெல் எந்த அளவிற்குப் கைகொடுத்திருப்பார் என்பதை நான் சொல்ல வேண்டிய தில்லை. "தமிழரிடையே மொழி பண்பாடு பற்றிய உணர்வு'' என்கிற பேராசியர் க. கைலாசபதி அவர்களின் கட்டுரையைப் படித்துப் பாருங்கள். நிறையத் தகவல்கள் கிடைக்கும்.

ஆரியப் பரம்பல் கொள்கை 'மகாவம்சத்தில்' காணப்படும் விஜயன் பற்றிய தொன்மம் பிரபலமாவதற்கும் சிங்களர்கள் தம்மை ஆரிய இனத்துடன் அடையாளம் காண்பதற்கும் வட இந்தியாவிலிருந்து புலம் பெயர்ந்து வந்த மூலக் குடியேற்றக் காரர்களாகவும், சிங்கள தீபத்தை நிறுவியவர்களாகவும் தம்மைக் கட்டமைத்துக் கொள்வதற்கும் உதவியது. குறிப்பாக டி. அல்விஸ், 1866ல் எழுதிய சிங்கள மொழியின் தோற்றம் பற்றிய கட்டுரையைச் சொல்ல வேண்டும். சிங்கள மொழி திராவிட

அல்லது தென்னிந்திய மொழிகளிலிருந்து வேறுபட்ட ஆரிய மொழிக் குடும்பத்தைச் சார்ந்தது என அவர் 'நிறுவினார்'. 'செம்பு நிறச்' சிங்களவரை ஆரியர் எனவும் அவர் கூறினார். இந்த அடிப்படையில் மகாவம்சம், தீபவம்சம் முதலானவை மறு வாசிப்பிற்குள்ளானதும், சிங்கத்தின் மக்களாகத் தம்மையும், சிங்கத்தின் நாடாக இலங்கையையும் அவர்கள் கற்பித்துக் கொண்டதும், புலியின் 'மக்களான' தமிழர்களுக்கு எதிராக சிங்களவர்களை நிறுத்தியதும் மிக வேகமாக நடந்தேறின. "சிங்கத்தின் வழிவந்தோர் - வரலாற்றிலும் வரலாற்றியலிலும் சிங்கள உணர்வு'' என்கிற ஆர்.ஏ.எல்.எச் குணவர்த்தனாவின் விரிவான கட்டுரை சிங்கள இன உணர்வுத் தோற்றத்தை மிக ஆழமாக விளக்குகிறது. (யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த சைவத் தமிழ் அறிஞர்களால் சி.வை. தாமோதரம்பிள்ளை போன்ற கிறிஸ்தவ வேளாளர்களும் இதில் உள்ளடங்குவர்.) உருவாக்கப்பட்ட 'தமிழ் மறுமலர்ச்சியில்' கால்டுவெலின் பங்களிப்பை கைலாசபதி குறிப்பிடுகிறார்.

இந்த அடிப்படையில் பின்னர் வரலாறும் தொன்மங்களும் மறுவாசிப்பிற்குள்ளாக்கப்பட்டனர். சிங்களர் பக்கம் விஜயன், துட்டகைமுனு போன்ற திருஉருவங்கள் கட்டமைக்கப்பட்டார்கள் என்றால் தமிழர்கள் பக்கம் எல்லாளன், பண்டார வன்னியன் ஆகியோர் உருவாக்கப்பட்டனர். இப்படி நிறையச் சொல்லாம். இன்றைய அரசியல் நலன்களிலிருந்து பண்டைய வரலாற்றை எழுதுகிற முயற்சி எத்தனை ஆபத்தானது என்பதற்கு இலங்கை வரலாறு ஒரு எடுத்துக்காட்டு. உண்மை என்னவெனில் இன்று யாரும் இனக் கொள்கையை ஏற்பதில்லை. ஆரியர் திராவிடர் என்றெல்லாம் மனிதச் சமூகங்களைப் பிரிக்க இயலாது. இந்த அடிப்படையில் இனப் பண்புகளை வரையறுப்பது இன்னும் பெரிய அபத்தம். ஆரிய இனத்தவர் மத்திய ஆசியாவிலிருந்து பரம்பி வந்தனர் என்பதைக் காட்டிலும் ஆரிய மொழிக் குழுவினர் வந்தனர் என்பதே சரியாக இருக்கும். இந்த இனக்கோட்பாட்டை அன்றே ஏற்காது மாற்றுச் சிந்தனை ஒன்றை டாக்டர் அம்பேத்கர் முன் வைத்தது இங்கே குறிப்பிட்டுச் சொல்லப்பட வேண்டிய ஒன்று. ஈழத்தில் யாழ்ப்பாண அறிஞர்களால் முன் வைக்கப்பட்ட இத்தகைய வரலாறு ரொம்பவும் சைவம் சார்ந்த ஒன்றாக அமைந்தது குறிப்பிடத்தக்கது.

**அதி தீவிர இடதுசாரிகள் என்றழைக்கப்படும் நக்சல்பாரிகள் வர்க்கப் போராட்டம் என்ற கருத்தாக்கத்தில் இருந்து விலகி தமிழ் இனவாதப் போராட்டத்தை ஆதரிக்கும் நிலைப்பாடு குறித்துச் சொல்ல முடியுமா?**

இந்தக் கேள்வியில் சில தவறுகள் இருப்பதாக உணர்கிறேன். ஈழத்தில் இன்று நடைபெறும் இனப்படுகொலைக்கு எதிராக எழும்பும் குரல்கள் எல்லாவற்றையும் 'தமிழ் இனவாதப் போராட்ட ஆதரவு' என்பதாகச் சுருக்கிப் பார்ப்பது தவறு. 90களுக்குப் பின் ஏற்பட்ட மாற்றங்கள், நெருக்கடிகள் ஆகிய வற்றைக் கணக்கில் கொண்டு எல்லா இடதுசாரி இயக்கங்களுமே தம் அணுகல் முறைகளில் மாற்றங்களை -ஏற்படுத்தியுள்ளன. இவற்றை வர்க்கப் போராட்டத்திலிருந்து வழுவுவதாகப் பார்ப்பதெனில் அது எல்லா இடதுசாரிகளுக்குமே பொருந்தும். நக்சல்பாரி இயக்கத்தவரை மட்டும் அப்படிச் சொல்லிவிட இயலாது. நக்சல்பாரி இயக்கத்தவரைப் பொருத்தமட்டில் அவர்கள் பிற இடதுசாரி இயக்கங்களிலிருந்து வேறுபட்ட, அடிப்படையான மூன்று நான்கு அம்சங்களில் தேசிய இனம் குறித்த அணுகுமுறையும் ஒன்று. அந்த வகையில் அவர்கள் இந்தியாவைப் 'பல்வேறு தேசிய இனங்களின் சிறைக் கூடமாக' வரையறுத்தனர். இன்றைய அவர்களின் நிலைப்பாடுகளை இதன் தொடர்ச்சியாகவே நாம் காண வேண்டும். தவிரவும் எல்லா நக்சல்பாரி இயக்கங்களையும் ஒட்டு மொத்தமாகப் புலிகளை கண்மூடித்தனமாக ஆதரிப்பவர்களாகவும் பார்க்க இயலாது. ம.க.இ.க முதலிய அமைப்புகள் புலிகளைப் பாசிஸ்ட் இயக்கம் என்றே கூறுகின்றனர். அதே போல எல்லோரும் தனி ஈழம் என்றும் சொல்வதில்லை. சுய நிர்ணய உரிமை என்கிற அம்சத்தில் எல்லோரும் ஒன்றுபட்டிருந்தாலும் தனி ஈழத்தை அங்கீகரி, ஈழ விடுதலை ஒன்றே தீர்வு முதலான முழக்கங்களை எல்லோரும் வைப்பதில்லை. 'புதிய போராளி' என்றொரு இயக்கம் பொது வாக்கெடுப்பு என்பதை முன் வைக்கிறார்கள். த.ஓ.வி. முதலான அமைப்புகளும்கூட புலிகளை விமர்சனத்தோடேயே பார்க்கின் றனர். எனக்குத் தெரிந்தவரை மாவோயிஸ்டுகள் என அறியப்படும் நக்சல்பாரி அமைப்பின் வெகுஜன இயக்கங்களே தனி ஈழம், புலி ஆதரவு முதலியவற்றைத் தீவிரமாக ஆதரிக்கின்றனர். அவர்களின் சில சமீபத்திய வெளியீடுகளை அட்டையைக் கிழித்துவிட்டுப் பார்த்தால் புலிகளின் வெளியீடு என்றே யாரும் கருதக் கூடும். நெடுமாறன் முதலான புலி ஆதரவாளர்களுக்கும் இவர்களுக்கும் பெரிய வேறுபாடுகள் ஏதும் இருப்பதில்லை. இவர்கள் நடத்துகிற ஈழம் தொடர்பான கூட்டங்களும் அப்படித்தான் நடக்கின்றன. இந்த அடிப்படையிலிருந்துதான் உங்களின் கேள்வியும் எழுகிறது என நினைக்கிறேன். மாவோயிஸ்ட் கட்சியின் மையக் குழுவின் கருத்தும் இதுதானா, இல்லை தமிழ்நாட்டில் இருப்பவர்கள்

ஆர்வக் கோளாறாக இப்படிச் செய்கிறார்களா என்பதும் தெரியவில்லை. இன்றைய நக்சல்பாரி இயக்க இளைஞர்களில் பலர் மிக்க நேர்மையும் அசாத்திய துணிச்சலும் மிக்கவர்களாக இருந்தபோதிலும் மார்க்சிய அறிவில் மிகவும் குறைபாடு உடையவர்களாகவே உள்ளனர். படிப்பு என்பது மிகவும் குறைந்திருப்பதும், மீடியா மினுமினுப்பில் மயங்கி நிற்பதும் இவர்களிடம் உள்ள குறைபாடாகப் பார்க்கிறேன். இது ஆயுதப் போராட்டங்களை விமர்சனமின்றி வழிபடும் நிலைக்கு இட்டுச் செல்கிறது. ஏதாவது கேட்டால் லெனின் சுய நிர்ணய உரிமையை வலியுறுத்தவில்லையா என்பார்கள். உண்மைதான். சுய நிர்ணய உரிமை என்பது எந்த மக்கள் சம்பந்தப்பட்டதோ அந்த மக்கள் சுயமாக நிர்ணயிப்பதுதான். இங்கிருந்து நாம் நிர்ணயிப்பது அல்ல. தனி ஈழம். ஒன்றே என்ற கோரிக்கை இன்று ஒட்டு மொத்தத் தமிழ் மக்களின் கோரிக்கையாக உள்ளதா என்பதை நாம் பார்க்க வேண்டும். ஒரு சம்பவம் நினைவுக்கு வருகிறது. ஈழப் போராட்டம் உச்சத்திலிருந்த 80களின் இறுதியில் நான் தஞ்சையிலிருந்தேன். இன்றைய மாவோயிஸ்ட் கட்சியின் மூதாதையான மக்கள் யுத்தக் குழுவில் இருந்தேன். அந்த அமைப்பில் வெகுஜன இயக்கமான 'புரட்சிப் பண்பாட்டு இயக்கத்தில்' நான் இருந்தபோது 'ஈழப் போராளிகளின் சிந்தனைக்கு' என்றொரு வெளியீட்டைக் கொண்டு வந்தோம். 'எரிதழல்' என்கிற எனது அன்றைய புனை பெயரில் அது எழுதப்பட்டிருந்தது. 'தோழமை' வெளியீடாக அது வந்தது. மக்களைச் சார்ந்திராமல் ஒரு ஆயுதக் கலாசாரத்தை வளர்த்தெடுப்பது குறித்த விமர்சனம் அதில் இருந்தது. போராட்டத்தை விமர்சிப்பவர்களைத் தாக்குவது, கொல்வது என்கிற சூழல் இருந்த காலம் அது. சுமார் 20 கி.மீ தொலைவில் ஒரத்தநாடு என்னும் இடத்தில் அப்போது ஓர் ஈழ அமைப்பின் முகாம் இருந்தது. அங்கு நடைபெற்ற சித்திரவதைகள் முதலியவற்றைத்தான் கோவிந்தனின் 'புதியதோர் உலகம்' நாவல் குறிப்பிடும். அந்த முகாமிலிருந்து இருவர் 12/28 அம்மாலயம் சந்து, வடக்கு வீதி, தஞ்சை என்கிற முகவரியில் இருந்த எனது வீட்டிற்கு ஏகே 47 துப்பாக்கியுடன் வந்து அந்நூலை எழுதியதற்காக மிரட்டி விட்டுச் சென்றனர். அந்த நூலின் கருத்துகளையும், இன்று அவர்களின் வெளியீடுகளையும் ஒப்பிட்டுப் பார்த்தால் அவர்கள் எந்த அளவிற்குப் பாதை விலகியுள்ளார்கள் என்பது விளங்கும்.

- புத்தகம் பேசுது, மார்ச் 2009 நேர் கண்டவர் : சிராஜுதீன்

# "ஈழப் பிரச்சினை பாராளுமன்றத் தேர்தலைப் பாதிக்கப் போவதில்லை"

## எங்கள் தேசம் நேர்காணல்

**இந்தியாவின் தற்போதைய அரசியல் நிலவரம் எப்படி இருக்கிறது?**

நடக்கவுள்ள 15வது பாராளுமன்றத் தேர்தலை (2009) மையப்படுத்தித்தான் இன்றைய இந்திய அரசியல் இயங்குகிறது. யார் யாருடன் கூட்டணி சேர்வது, கூட்டணிகளில் யாருக்கு எத்தனை இடம், அடுத்த பிரதமர் யார் என்கிற அம்சங்கள்தான் தேர்தலில் பிரதானப் படுத்தப்படுகின்றன. இன்றைய இந்திய மக்களை எதிர்கொண்டுள்ள பிரதானப் பிரச்சினைகளை மையப்படுத்தி அதனடிப்படையில் தேர்தலை எதிர்கொள்ளும் நிலை இல்லை. எடுத்துக்காட்டாக இன்று உலகளவில் ஏற்பட்டுள்ள பொருளாதாரப் பின்னடைவு வளரும் நாடுகளை அதிகம் பாதித்துள்ளது. இந்தியாவிலும் அது பாரதூரமான விளைவுகளை ஏற்படுத்தியுள்ளது. தாராளமயமாக்கலுக்குப் பின்னர் இந்தியப் பொருளாதாரம் உற்பத்தித்துறையைக் காட்டிலும் பணித் துறைக்கே (Service Sector) அதிக முக்கியத்துவம் கொடுத்து இயங்கியது. இன்று அத்துறை மிகப் பெரிய பாதிப்பை எதிர் கொண்டுள்ளது. தகவல் தொழில்நுட்பம் மற்றும் பொறியியற் துறைகளில் வேலை இழப்புகள் ஏற்பட்டுள்ளன. பல்கலைக்கழக வளாகங்களில் மூன்றாண்டுகளுக்கு முன் நடைபெற்ற நேர்முகத் தேர்வுகளில் தேர்வு செய்யப்பட்டவர்களுக்கெல்லாம் இந்த ஆண்டு வேலைகொடுக்க முடியவில்லை. சிறு நிறுவனங்கள், சிறு தொழில்கள் பெரும் பாதிப்பை அடைந்துள்ளன. இன்னொரு பக்கம் கடந்த சில ஆண்டுகளில் 1,80,000 விவசாயிகள் இந்தியா வில் தற்கொலை செய்து கொண்டுள்ளனர். விவசாயத் துறையில் கடைபிடிக்கப்படும் தாராளவாதக் கொள்கைகள் இதில் முக்கிய பங்கு வகிக்கின்றன. எதிர்காலத்தில் மிகப் பெரிய உணவுப் பற்றாக்குறை ஏற்படும் ஆபத்தும் உள்ளது. இந்திய மண்ணில்

புதைந்திருக்கும் கனிவளங்கள் கார்ப்பரேட் நிறுவனங்களுக்கு தாரை வார்க்கப்படுகின்றன. ஏராளமான சிறப்பு பொருளாதார மண்டலங்கள் (SE2) உருவாக்கப்படுகின்றன. இந்தப் பிரச்சினைகள் எதுவும் இன்று தேர்தல் களத்தில் மேலுக்கு வரவில்லை. இன்னொரு பக்கம் சிறுபான்மை மக்களை எடுத்துக் கொண்டால் ஆட்சியிலிருந்த ஐக்கிய முற்போக்குக் கூட்டணி அரசு சச்சார் குழு அறிக்கை ஒன்றை உருவாக்கி அளித்த போதிலும் அதன்மீது எந்த உருப்படியான நடவடிக்கைகளும் மேற்கொள்ளப் படவில்லை. சிறுபான்மை மக்களுக்கு மொத்தம் 15 சதம், அதிலும் குறிப்பாக முஸ்லிம்களுக்கு 10 சதம் கல்வியிலும் வேலை வாய்ப்பிலும் ஒதுக்கீடு அளிக்க வேண்டும் எனப் பரிந்துரைத்துள்ள ரங்கனாத் மிஸ்ரா அறிக்கை சென்ற மே 2007லேயே அரசுக்கு அளிக்கப்பட்டபோதும் இன்னும் அது அதிகாரபூர்வமாக வெளியிடப் படவில்லை. வெளியிடவே இல்லை என்கிறபோது அதன் மீது நடவடிக்கை என்கிற பேச்சுக்கே இடமில்லை. இந்தப் பிரச்சினையை எந்தக் கட்சியும் பேசுவதில்லை. மும்பை பயங்கரவாதத் தாக்குதல் (26/11) நடைபெற்ற அடுத்த சில வாரங்களில் சட்டவிரோத நடவடிக்கைகள் தடுப்புச் சட்டம் (ULPA) திருத்தப்பட்டு இன்னொரு கடுமையான அடக்குமுறைச் சட்டம் ஒன்றை அரசு நிறைவேற்றியது. அமெரிக்க பாணியில் 'தேசிய புலனாய்வு அமைப்பு' (NIA) ஒன்றையும் உருவாக்கியது. ஆனால் வகுப்புவாதத்தின் பெயரால் நடைபெறும் மதக் கலவரங்களில் இதனினும் அதிகமாகச் சிறுபான்மையோர் கொல்லப்படுகின்றனர். இதைத் தடுக்கும் நோக்கில் 'மதக் கலவரங்கள் (தடுப்பு) மசோதா' ஒன்று பாராளுமன்றத்தில் அறிமுகப்படுத்தப்பட்டு நான்காண்டுகளாக முடக்கி வைக்கப் பட்டுள்ளது. இது குறித்தும் யாரும் பேசுவதில்லை. தனியார் துறைகளில் தாழ்த்தப்பட்ட பிற்படுத்தப்பட்டவர்களுக்கு ஒதுக்கீடு, தலித் சிறுபான்மையினருக்கு இட ஒதுக்கீடு, தலையில் மலம் சுமந்து கழிவுகளை அகற்றுவதை (Manual Scavenging) ஒழிப்பது முதலான கோரிக்கைகளும் இன்று மேலெழும்ப வில்லை. மாறாக தலித் கட்சிகளில் சில பொருளாதார அடிப்படையில் உயர் சாதியினருக்கு ஒதுக்கீடு வழங்குவது பற்றிப் பேசிக் கொண்டிருக்கின்றன. சென்ற பத்தாண்டுகளில் இந்தியா வின் அயலுறவுக் கொள்கை முற்றிலும் அமெரிக்கச் சார்பானதாக மாற்றப்பட்டு விட்டது. இஸ்ரேலுடன் இராணுவ ஒப்பந்தங்கள் பல மேற்கொள்ளப்பட்டுள்ளன. அமெரிக்க - இந்திய அணு ஒப்பந்தத்தின் மூலம் இந்தியா தனது சுயேச்சைத் தன்மையையும்

ஓரளவு இழந்து நிற்கிறது. இந்த அம்சங்கள் எதுவும் இன்று தேர்தலில் முக்கியமாக மேலெழவில்லை. பொருளாதாரப் பின்னடைவை ஒட்டி பிரான்ஸ் முதலான நாடுகளில் பல லட்சம் பேர் திரண்ட பெரும் போராட்டங்கள் நடைபெற்றன. இந்தியாவில் எந்தப் பெரிய எதிர்ப்பும் காட்டப்படவில்லை. இடதுசாரிக் கட்சியினர் உள்ளிட்ட எந்தத் தேர்தல் கட்சிகளிடமும் மாற்று பொருளாதாரத் திட்டங்கள் இல்லாதது இதற்கொரு காரணம். அதேநேரத்தில் இந்தியாவின் மிகப்பெரிய வலதுசாரி வகுப்புவாதக் கட்சியான பாரதிய ஜனதா கட்சி, ராமர் கோவில் கட்டுவது உட்படத் தனது இந்துத்துவ நிகழ்ச்சி நிரலை வெளிப்படையாகத் தேர்தல் அறிக்கையின் முன்வைத்துள்ளது. தமிழகத்தில் கொஞ்சம் நிலைமை வேறு. இங்கே ஈழப் பிரச்சினை தேர்தலில் முன்னணிக்கு வந்துள்ளது உண்மை. ஆனால் இதன் மூலம் தமிழக மக்களின் அரசியல் பிரச்சினைகள் அனைத்தும் முற்றாகப் பின்னுக்குப் போயுள்ளன. மொத்தத்தில் இந்தியா முழுமையும் மாநில அளவிலான பிரச்சினைகளே மேலுக்கு வந்துள்ளன.

**உங்களது பார்வையில் எந்தக் கட்சி ஆட்சியமைத்தால் அது இந்திய முஸ்லிம்களுக்குச் சாதகமாக இருக்கும் என்று கருதுகிறீர்கள்?**

கேள்வியை சற்று மாற்றி அமைத்தால்தான் சரியாக இருக்கும் என நினைக்கிறேன். "எந்தக் கட்சி ஆட்சி அமைத்தால் அது முஸ்லிம்களுக்கு ரொம்பப் பாதகமாக இருக்கும்?'' என்கிற கேள்விதான் சரியாக இருக்கும். பாரதீய ஜனதா கட்சி, முஸ்லிம்களுக்குப் பாதகமான ஒரு அரசியலின் அடிப்படையிலேயே இயங்கி வருவதை அறிவீர்கள். தன்னை ஒரு மதச்சார்பற்ற கட்சியாகக் கூறிக்கொள்ளும் காங்கிரசும் கூட கடந்த ஆண்டுகளில் முஸ்லிம்களுக்கு நியாயம் செய்வில்லை என்பதைச் சற்றுமுன் குறிப்பிட்டேன். முஸ்லிம்களைப் பயங்கரவாதிகளாகச் சித்திரித்து நடவடிக்கை எடுக்கும் போக்கில் பெரிய மாற்றம் எதையும் அது செய்துவிடவில்லை. குறிப்பாக அஸம்காரை (உ.பி.) சேர்ந்த முஸ்லிம்கள் அனைவரும் பயங்வரவாதிகளாகச் சித்திரிக்கப்படுவதும், அந்த அடிப்படையில் மேற்கொள்ளப்பட்ட பட்லா இல்ல மோதல் கொலைகளும், கிறிஸ்தவர்கள் மீது ஒரிசாவிலும், கர்நாடகாவிலும் மேற்கொள்ளப்பட்ட தாக்குதல்களும் மத்தியில் காங்கிரஸ் ஆட்சி இருந்த போதுதான் நடைபெற்றன. ஓரளவு மதச்சார்பற்ற அரசியலைப் பேசி, இயங்கிவரும் இடதுசாரிகளும் கூட இந்திய அமெரிக்க அணு ஒப்பந்தத்தை எதிர்த்து நடத்திய போராட்டத்தின் நூறில் ஒரு பங்குகூட காங்கிரஸ் அரசு இயற்றிய கருப்புச் சட்டங்களை எதிர்த்தும், மதக்

கலவரத்தடுப்புச் சட்டம் நிறைவேற்றப்படாததைக் கண்டித்தும் நடத்தவில்லை என்பது கவனத்திற்குரியது. தலித் கட்சிகளும் கூட முஸ்லிம்கள் பிரச்சினைக்கு முக்கியத்துவம் அளிப்பதில்லை. நடைபெற உள்ள பாராளுமன்றத் தேர்தலில் மாயாவதி 20 தொகுதிகளில் பார்ப்பனர்களை நிறுத்தியுள்ளார். மக்கள் தொகை வீதம் 20 சதமாக இருந்தும் கூட 14 தொகுதிகளில் மட்டுமே முஸ்லிம்களை நிறுத்தியுள்ளார். முஸ்லிம்களின் ஒருமித்த வாக்குகளைப் பெற்றே சென்ற தேர்தலில் அவர் வெற்றி பெற்றார். எனினும் சுற்றுச் சூழல் துறை என்னும் அதிகாரமில்லாத ஒரு துறைக்கு மட்டுமே ஒரு முஸ்லிமை அமைச்சராக்கினார். முலாயம் சிங் யாதவ் பாபர் மசூதியை இடித்தபோது முதல்வராக இருந்த கல்யாண் சிங்கை கட்சியில் இணைத்து முக்கிய பதவியும் அளித்துள்ளார். எந்தக் கட்சியும் முஸ்லிம் தலைவர்கள் உருவாவதை ஊக்குவிப்பதும் இல்லை. காங்கிரசில் காஷ்மீரைச் சேர்ந்த குலாம் நபி ஆஸாத் தவிர வேறு யார் முன்னிலைப் படுத்தப்படுகிறார்கள்? லாலுபிரசாத் யாதவிடம் இந்தக் கேள்வியைக் கேட்டபோது, "பிஹாரிலுள்ள முஸ்லிம்களுக்கு நான் ஒரு தலைவன் போதா?'' என பதில் சொல்லுகிறார். ஜனநாயகம் என்பது அடிப்படையில் ஒரு எண்ணிக்கை சார்ந்த செயல்பாடு. எந்தக் கட்சியும், இடதுசாரிகள் உட்பட, சிறுபான்மையினரின் நியாயங்களைப் பேசுவதன் மூலம் தாம் பெரும்பான்மையினருக்கு எதிரானவர் என்கிற கருத்து உருவாவதை விரும்பவில்லை. அத்தகைய ஒரு கருத்து உருவாகும் வண்ணம் இங்கே பா.ஜ.க. வேலை செய்துள்ளது. மக்களை பெரும்பான்மை × சிறுபான்மை என இரு துருவங்களாகப் பிரிப்பதில் வெற்றி பெற்றுள்ளது.

**தேர்தலை ஒட்டி இந்திய முஸ்லிம்களின் மனநிலை எப்படி உள்ளது?**

ரொம்பவும் ஏமாற்றமும் சோர்வும் அடைந்துள்ளதாகத் தான் நான் நினைக்கிறேன். ஜனவரி 2009ல் இந்திய மக்கள் தொகை சுமார் 125 கோடி எனக் கணக்கிடப்பட்டுள்ளது (estimation). இதில் 16.5 கோடிப்பேர் முஸ்லிம்கள். அதாவது சுமார் 13.7 சதம். இந்த வீதப்படி பார்த்தால் பாராளுமன்றத்திலுள்ள மொத்தமுள்ள 543 உறுப்பினர்களில் குறைந்த பட்சம் 74 உறுப்பினர்கள் முஸ்லிம்களாக இருக்கவேண்டும். ஆனால் 1951 தொடங்கி 2004 வரை எந்தப் பாராளுமன்றத்திலும் அவர்களுக்கு இந்த அளவு பிரதிநிதித்துவம் அளிக்கப்படவில்லை 1984 தொடங்கி இது ரொம்பவும் குறைந்து கொண்டே போனது. சென்ற (14வது) பாராளுமன்றத்துக்கு இருந்த முஸ்லிம்களின் எண்ணிக்கை

வெறும் 37 தான். முழுக்க முழுக்க முஸ்லிம்களே உள்ள காஷ்மீரப் பள்ளத்தாக்கில் கூட அங்குள்ள முஸ்லிம் மக்கள் தொகையுடன் ஒப்பிடும்போது அவர்கள் பிரதிநிதித்துவம் பெற்ற வீதம் 75 சதம்தான்.

மொத்தமுள்ள 543 தொகுதிகளில் 14 தொகுதிகளில் முஸ்லிம்கள் பெரும்பான்மையாக உள்ளனர். இன்னும் 28 தொகுதிகளில் 30 சதத்திற்கும் மேற்பட்டோர் முஸ்லிம் வாக்காளர்கள். 60 தொகுதிகளில் 20 சதத்திற்கும் மேற்பட்ட முஸ்லிம் வாக்காளர்கள் உள்ளனர். இந்தத் தொகுதிகளில் வெற்றி வாய்ப்பை நிர்ணயிக்கக் கூடியவர்களாக முஸ்லிம்களாக இருந்தும் கூட அவர்களுக்கு உரிய பிரதிநிதித்துவம் இல்லாமற் போனதற்கான காரணங்கள் பல. முஸ்லிம்களுக்கான வலிமை யான அரசியற் கட்சிகள் இல்லாமற் போனது ஒரு காரணம். சுதந்திரத்திற்குப் பிந்திய சூழலில் (1947), இந்திய - பாகிஸ்தான் பிரிவினைக்குக் காரணம் முஸ்லிம்களே எனக் குற்றம் காட்டப்பட்ட நிலையில், முஸ்லிம்களுக்கான தனித்துவமான அரசியல் கட்சி ஒன்றை உருவாக்குவது இந்திய முஸ்லிம்களின் நிகழ்ச்சி நிரலில் இல்லாமற் போனது. எனவே பல்வேறு அரசியல் கட்சிகளையும் தங்கள் தோளில் சுமந்து ஏமார்ந்தவர்களாகவே இந்திய முஸ்லிம்கள் இருந்தனர்.

இதற்கிடையில் முஸ்லிம்கள் குறித்து ஏராளமான பொய்க் கருத்துகள் பரப்பப்பட்டுள்ளன. இந்திய முஸ்லிம்கள் உறுதியான வாக்கு வங்கிகளாக உள்ளனர், ஒற்றுமையாக எல்லோரும் ஒரே கட்சிக்கு வாங்கிப் போடுகின்றனர், ஜனநாயகத்தில் ஆர்வமற்றவர்களாக உள்ளனர், தேர்தலில் யாருக்கு வாக்களிப்பது என்பதை தாமே நிர்ணயித்துக் கொள்ளும் சுதந்திரம் இல்லாத வர்களாக உள்ளனர் (அதாவது உலமாக்களே தீர்மானிக்கின்றனர்), ரொம்பவும் திட்டமிட்டு, கடைசி நேரத்தில் வாக்களிக்கின்றனர் என்றெல்லாம் இந்திய முஸ்லிம்கள் பற்றி திட்டமிட்டுப் பிரச்சாரம் மேற்கொள்ளப்படுகிறது. முஸ்லிம்களை சாதாரண மக்களிடமிருந்து பிரித்து அசாதாரணமான ஒரு கூட்டமாகச் சித்திரிக்கும் முயற்சிகளில் இது ஒன்று. ஆனால் இது குறித்து ஆய்வு செய்துள்ள தேர்தல் தொடர்பான ஆய்வாளர்கள் புள்ளி விவரங்களின் அடிப்படையில் இவற்றைத் தவறு என நிறுவியுள்ளார். (பார்க்க : யோகேந்திர யாதவ், இந்து, ஏப்ரல் 20, 2009) எல்லோரும் போலத்தான் அவர்களும் வாக்களிக்கின்றனர். இந்தியாவில் சராசரி வாக்களிப்பு வீதம் 60 சதம் என்றால் முஸ்லிம்கள் வாக்களிக்கும் வீதம் 59 சதம். எல்லா முஸ்லிம்களும்

எந்தக் காலத்திலும் ஒரே மாதிரியாக வாக்களித்ததில்லை. நடந்து முடிந்த வட மாநிலத் தேர்தலில் கூட முஸ்லிம்கள் வாக்கு காங்கிரஸ், சமாஜ்வாதி, பகுஜன் கட்சிகளுக்குப் பிரித்தே விழுந்தன. தவிரவும் முஸ்லிம்கள் வாக்களிப்பதில் சர்வதேச அகில இந்தியப் பிரச்சினைகளைக் காட்டிலும் உள்ளூர்ப் பிரச்சினைகளும் முக்கிய பங்கு வகிக்கின்றன.

தேர்தலுக்குத் தேர்தல் அரசியல் கட்சிகள், அவை அகில இந்தியக் கட்சிளாயினும் சரி, மாநில அளவிலான கட்சிகளாலும் சரி, முஸ்லிம்களையும் அவர்களின் கட்சிகளையும் மரியாதைக் குறைவாகவும், அலட்சியமாகவும் நடத்தும் போக்கு அதிகரித்து வருகிறது. தமிழகத்தை எடுத்துக் கொண்டீர்களானால் திமுக, அதிமுக இரண்டுமே உரிய அளவில் முஸ்லிம்களை வேட்பாளர் களாக நிறுத்தாததோடு தமது சின்னத்திலேயே இதர முஸ்லிம் கட்சிகள் நிற்க வேண்டும் எனவும் வற்புறுத்துகின்றன. வாக்காளர்கள் அதிகமுள்ள வடசென்னைத் தொகுதியில் தனது பேரன் தயாநிதி மாறனை நிறுத்தி மகிழும் கருணாநிதி, தமிழ்நாடு முஸ்லிம் முன்னேற்றக் கழகத்தை (மனித நேய மக்கள் கட்சி) அவமானப்படுத்தியுள்ளார்.

இந்நிலையில் இந்தத் தேர்தலில் ஏராளமான மாநில அளவிலான முஸ்லிம் கட்சிகள் நேரடியாகவும், அதிக வீச்சுடனும் களத்தில் இறங்கியுள்ளன. வழமையாக உள்ள இந்திய யூனியன் முஸ்லிம் லீக் (கேரளம், தமிழ்நாடு, கர்நாடகம்), மஜ்லிஸ் இதேஹாதுல் முஸ்லிமின் (ஹைதராபாத்) ஆகியன தவிர அஸ்லாமில், 'அஸ்லாம் ஐக்கிய ஜனநாயக முன்னணி' (AUDF), உத்தரபிரதேசத்தில் ஆஸம்கார் போராட்டத்தை முன்னின்று நடத்திக் கொண்டிருக்கும் 'உலமா கவுன்சில்' (UC) எனக் கிட்டத்தட்ட 22 புதிய சிறிய முஸ்லிம் கட்சிகள் வட இந்தியாவில் போட்டியிடுகின்றன. தமிழ்நாட்டில் புதிதாக உருவாகியுள்ள 'மனிதநேய மக்கள் கட்சி' இவ்வகையில் முக்கியமானது. கேரளத்தில் அப்துல் நாஸர் மதானியின் மக்கள் ஜனநாயகக் கட்சி போட்டியிடுகிறது. இவை தவிர 'அகில இந்திய முஸ்லிம் மஜ்லிஸ்-ஏ-முஷாவரத் (AIMMM), ஜமாத்-ஏ-இஸ்லாமா ஹிந்த் (JIH), ஜமாத்-ஏ-உலமாஹிந்த் போன்ற அமைப்புகளும் தமது கருத்துகளை வலியுறுத்தி வருகின்றன. சென்றமாதம் கோழிக்கோட்டில் (கேரளம்) மிகப்பெரிய அரசியல் மாநா டொன்றை மூன்று நாட்கள் நடத்திய 'பாப்புலர் டெமாக்ரடிக் ஃப்ரன்ட்' என்கிற அமைப்பு முஸ்லிம்கள் அரசியல் அதிகாரம் பெறுவது பற்றி விரிவாகப் பேசியது. நாடெங்கிலுமிருந்தும் பிரதிநிதிகள் கலந்து கொண்டபோதும் கேரளம், கர்நாடகம்,

தமிழ்நாடு ஆகிய மாநிலங்களில்தான் இது ஓரளவு வலிமையுடன் விளங்குகிறது. 'பா.ஜ.க.-வை முறியடிப்போம்' என்கிற முழக்கத்துடன் இது இப்போது களத்தில் இறங்கியுள்ளது.

இந்த அமைப்புகளில் சில நடந்து முடிந்த மாநிலத் தேர்தல்களில் ஒரு சில இடங்களைக் கைப்பற்றியுள்ளன. வரும் பாராளுமன்றத் தேர்தலில் இவை பெரிய அளவில் தனித்த இடங்களைக் கைப்பற்ற இயலாமற் போனாலும் எதிர்காலத்தில் முக்கிய அரசியல் சக்திகளாக இவற்றில் சில விளங்க வாய்ப்புண்டு. 1970க்குப் பின்னர் காங்கிரஸ் வலிமை இழந்து பிராந்திய, இன, சாதி அடிப்படையிலமைந்த கட்சிகள் வலுப்பெற்றன. இந்த அடிப்படையில் பிற்படுத்தப்பட்டோர், தலித்கள் அரசிய லதிகாரம் பெற்ற அளவிற்கு இந்திய அளவில் குறிப்பிடத்தக்க அளவில் பரவலாக வசிக்கும் முஸ்லிம்கள் உரிய அதிகாரம் பெறவில்லை. அதுகுறித்த பிரக்ஞை இன்று முஸ்லிம்கள் மத்தியில் உருவாகியுள்ளது ஒருவகையில் வரவேற்கத் தக்க அம்சமே.

**இத்தேர்தலில் ஈழப் பிரச்சினை முக்கிய பங்கை வகிக்கும் என்று சொல்லப்படுகிறதே?**

நடக்க இருப்பது இந்தியாவின் பாராளுமன்றத் தேர்தல். மொத்தம் 543தொகுதிகளுக்குத் தேர்தல் நடக்க உள்ளது. இதில் தமிழ்நாட்டிலுள்ள தொகுதிகள் வெறும் 40 தான். மற்ற 503 தொகுதிகளில் ஈழப்பிரச்சினை குறித்து எந்தப் பிரஞ்ஞையும் இல்லை என்பதை நீங்கள் கவனத்தில் கொள்ள வேண்டும். ஈழப் பிரச்சினைக்கு ஆதரவான போராட்டங்கள் அத்தனையும் தமிழக எல்லைக்குள்ளேயேதான் நடைபெறுகின்றன. தமிழகத்தைத் தாண்டி இந்தப் பிரச்சினை இங்குள்ள ஈழ ஆதரவாளர்களால் கொண்டு செல்லப்பட்டதில்லை. விடுதலைப் புலிகளும் சரி, அவர்களின் தமிழக முகவர்களும் சரி என்றைக்கும் இந்திய அளவிலான ஜனநாயக சக்திகள், அறிவுஜீவிகள், இடதுசாரிகள் ஆகியோரின ஆதரவை நாடியதில்லை. தவிரவும் விடுதலைப் புலிகள் இயக்கத்தின் பாசிசத் தன்மையின் விளைவாகவும் முழுமையாக ஈழப் போராட்டத்தை ஆதரிக்க இயலாத சிக்கல் இங்குள்ள ஜனநாயக, இடதுசாரி சக்திகளுக்கு இருந்தது. இன்று டெல்லி, பெங்களூர் முதலான இடங்களில் சில ஆதரவு நிகழ்ச்சிகள் நடந்துள்ளன என்றால் அவற்றில்பல தமிழகத்தைச் சேர்ந்த ஈழ ஆதரவு சக்திகள் முன்னின்று நடத்தியவை தான். நாங்கள் இன்று உருவாக்கியுள்ள, "இலங்கையின் தமிழர்கள் படுகொலை செய்யப்படுவதை நிறுத்தி, ஜனநாயகத்தை

நிலைநாட்டுவதற்கான பிரச்சார இயக்கம்' தான் முதன் முதலில் எழுத்தாளர் அருந்ததிராயை அணுகி ஒரு கண்டன அறிக்கை வெளியிட வைப்பதற்குக் காரணமாக இருந்தது. இன்று அதற்குப் பின் ஆங்காங்கு ஒரு சில அறிவுஜீவிகள் பேசத் தொடங்கி யுள்ளனர். நன்கு கவனித்துப் பார்த்தீர்களானால் இவர்கள் முன்வைக்கும் கோரிக்கைகள் குறைந்தபட்ச அளவிலான (Minimalist) கோரிக்கைகள்தான். இலங்கையில் போரை நிறுத்துவது, சிவிலியன்கள் அமைதியாக வெளியேற அனுமதிப் பது, இலங்கை அரசுக்கு இராணுவ மற்றும் நிதி உதவிகள் அளிக்காதிருப்பது என்பதான கோரிக்கைகள் தான் அவர்களால் வைக்கப்படுகின்றன. புலிகள் மீதான தடையை நீக்கு, தமிழீழத்தை அங்கீகரி போன்ற கோரிக்கைகளை அவர்கள் வைப்பதில்லை. இந்த உச்சபட்ச (Maximalist) கோரிக்கைகளை புலிகளின் முகவர்களே வைத்து வருகின்றனர்.

ஆக, தமிழகத்தைத் தாண்டி ஈழப் பிரச்சினை இந்தத் தேர்தலில் எந்தத் தாக்கத்தையும் ஏற்படுத்தப் போவதில்லை. தமிழகத்தில் இது ஒரு முக்கிய பிரச்சினையாக உருப்பெற் றிருப்பது என்னவோ உண்மைதான். ஆனால் கிராமப் புறங்களில் இந்த அடிப்படையில் வாக்குகள் அளிக்கப்படப் போவதில்லை எனவும் சில கருத்துக் கணிப்புகள் வெளிப்படுத்துகின்றன.

தேர்தலுக்காக உருவான கூட்டணிகள் ஈழப் பிரச்சினையின் அடிப்படையில் உருவாக்கப்படவில்லை. புலிகளையும், தனி ஈழத்தையும் தீவிரமாக ஆதரித்த வைகோ, ராமதாஸ் ஆகியோரும் தா.பாண்டியனும் இன்று தீவிர புலி எதிர்ப்பாளரான ஜெயலலிதா வுடன் உள்ளனர். நெடுமாறன், பெரியார் திராவிடர் கழகம் முதலான தீவிர புலி ஆதரவாளர்கள் இன்று காங்கிரஸ் எதிர்ப்பு என்கிற பெயரில் கடுமையாக தி.மு.க. எதிர்ப்பு, அ.தி.மு.க. ஆதரவு பேசுகின்றனர். புலிகளின் நிலைப்பாடும் அதுதான் எனக் கேள்விப்படுகிறோம்.

ஈழப் பிரச்சினை தமிழக அளவில் தேர்தலில் முக்கிய பிரச்சினையாக உருப்பெற்றிருப்பதன் இன்னொரு புறம் இங்குள்ள தமிழர்கள் சந்திக்கும் பிரச்சினைகள் பின்னுக்குத் தள்ளப்பட்டிருப்பது. சமீபத்தில் 'செந்தட்டி' (திருநெல்வேலி மாவட்டம்) என்னுமிடத்தில் இரண்டு தலித்கள் கொல்லப் பட்டனர். இது பற்றிப் பேச யாருமில்லை. இப்படித்தான் மற்ற விஷயங்களும். ஈழப் பிரச்சினையை முன்னிறுத்தி இங்குள்ள பிரச்சினைகளைப் பின்னுக்குத் தள்ளுவது, சந்தடி சாக்கில்

இந்துத்துவ சக்திகளை உள்ளே கொண்டு வருவது என்பதெல்லாம் எதிர்காலத்தில் இங்கு பல பாதிப்புகளை ஏற்படுத்தப் போகின்றன.

**இந்தத் தேர்தல் முடிவுகள் ஈழப் பிரச்சினையில் ஏதும் தாக்கங்களை ஏற்படுத்துமா?**

தமிழகத்தைத் தாண்டி வேறு மாநிலங்களில் உள்ள பிராந்தியக் கட்சிகளுக்கு இதில் எந்த நிலைப்பாடும் இல்லை. தலித் மற்றும் பிற்படுத்தப்பட்ட சாதி கட்சிகளும் அதே நிலைகளில்தான் உள்ளன. இடதுசாரிக் கட்சிகளைப் பொருத்த மட்டில் மார்க்சிஸ்ட் கட்சி போர் நிறுத்தத்தைத் தவிர வேறு எதையும் பேசுவதில்லை. ஒன்றுபட்ட இலங்கையில் தமிழர் களுக்கு உரிமை வழங்குதல் என்கிற நிலைப்பாடுதான் அவர்க ளுடையது. ஈழப் போராட்டத்தைத் தீவிரமாக ஆதரிக்கும் இடதுசாரிக் கட்சிகளைப் பொருத்தமட்டில் அவர்களின் போராட்டங்களைக் கூர்ந்து கவனித்தீர்களானால் அவையும் தமிழகத்திற்குள்தான் நடத்தப்படுகின்றன. ஒன்றுபட்ட நிலைமை, சுயநிர்ணய உரிமை என்கிற அளவில்தான் அவர்கள் பிறமாநிலங்களில் பேசுகின்றனர். இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி, மாவோயிஸ்டு கட்சி ஆகியன தமிழகத்தில் புலி ஆதரவு இயக்கங்களுடன் கைகோர்த்து நின்று தீவிர ஈழ ஆதரவு பேசுகின்றன. ஆனால் இவை செல்வாக்கு உள்ள பிற மாநிலங்களில் இப் பிரச்சினையை எடுத்துச் செல்வதில்லை. பா.ஜ.க.விற்கும் காங்கிரசுக்கும் வெளியுறவுக் கொள்கையில் பெரிய வேறுபாடுகள் இல்லை. இந்திய முதலாளிகளும், இந்திய அரசும் பெரிய அளவில் இலங்கையில் பொருளாதார நலன் களைக் கொண்டுள்ளனர். இரு அரசுகளும் ஏராளமான புரிந்துணர்வு ஒப்பந்தங்களை நிறைவேற்றியுள்ளன. இலங்கை யின் வணிகத்தில் கிட்டத்தட்ட 20 சதம் இந்தியாவுடன் நடைபெறுகின்றது. டாடா, அசோக் லேலன்ட், பஜாஜ் போன்ற முதலாளிகளும் இந்தியன் ஆயில் காப்பரேஷன் போன்ற அரசு நிறுவனங்களும் இலங்கையில் ஏராளமான முதலீடுகள் மற்றும் வணிக நலன்களை கொண்டுள்ளன. இந்திய இராணுவமும் இலங்கை இராணுவமும் ஏராளமான கூட்டுப் பயிற்சி மற்றும் இராணுவ ஒப்பந்தங்களைச் செய்துள்ளன. எனவே காங்கிரஸ் அல்லது பா.ஜ.க. எந்த ஆட்சி வந்தாலும் இதே நிலைதான் தொடரப் போகிறது. அதிகபட்சம் இந்திய இலங்கை ஒப்பந்தம், கூட்டரசுக்குள் சுயாட்சி உரிமைகள் என்கிற நிலையைத் தாண்டி யாரும் எதுவும் பேசப் போவதில்லை. வாஜ்பேயி பிரதமராக இருந்தபோது இரு பிரதமர்களும் (வாஜ்பேயி - விக்ரமசிங்கே)

வெளியிட்ட கூட்டறிக்கையில் இலங்கையின் ஒற்றுமையும் (Unity) இறையாண்மையும் (Sovereignity) காக்கப்படும் எனக் கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது. காங்கிரஸ் போய் பா.ஜ.க. வந்தாலும் இலங்கை குறித்த அணுகல் முறையில் எந்த மாற்றமும் ஏற்படப் போவதில்லை. ஆனால் அப்படி ஏற்படும் எனப் புலி ஆதரவாளர்கள் நம்புகிறார்கள் போல. இந்திய இலங்கை ஒப்பந்தத்திலுள்ளவாறு வடக்கும் கிழக்கும் இணைந்த ஒற்றை தமிழ் மாநிலம் என்கிற கோரிக்கை கூட இன்று கிழக்கு மாகாண மக்கள், முஸ்லிம்கள், தலித்கள் முதலானோரால் எப்படி எதிர்கொள்ளப்பட உள்ளது என்பதை நீங்கள்தான் சொல்ல வேண்டும்.

**இலங்கைத் தமிழர்கள் குறித்து மேல்மட்டத்தில் இப்போது எழுந்துள்ள அக்கறை வெறும் அரசியல் சித்து விளையாட்டு எனச் சொல்லப் படுகிறதே?**

ஈழப்பிரச்சினையில் தமிழ் மக்கள் காட்டும் அக்கறையைக் கொச்சைப்படுத்திப் புரிந்துகொள்ள முடியாது. தமிழர்கள் கொல்லப்படுவதால் அவர்கள் வேதனைப்படுகின்றனர். தமிழர்கள் என்கிற வகையில் நாம் ஏதாவது செய்யவேண்டும், நமது அரசு தலையிட்டு தமிழர்களைக் காப்பாற்ற வேண்டும் என இயல்பாகவே அவர்கள் விரும்புகின்றனர். ஆனால் ஈழப் பிரச்சினையின் சகல பரிமாணங்களையும், வரலாற்று ரீதியான நிகழ்வுகளையும் இவர்கள் எல்லோரும் புரிந்துள்ளார்கள் எனச் சொல்ல முடியாது. இன்னும் சொல்லப்போனால் ரொம்பவும் உணர்ச்சி வயப்பட்டு இந்த விஷயத்தைப் பேசுகிற முன்னோடிகள் பலரும்கூட இவற்றைப் புரிந்துள்ளனர் எனச் சொல்ல இயலாது. குறிப்பாக வட மாகாண முஸ்லிம்கள் 80,000 பேர் அகதிகளாக்கப்பட்ட நிலை தமிழ்நாட்டிலுள்ளவர்களில் முக்கால்வாசிப் பேருக்குத் தெரியாது. புலி ஆதரவாளர்கள் முன்வைக்கும் உணர்ச்சி வயப்பட்ட அரசியல் சொல்லாடல்களின் ஊடாக மட்டுமே பெரும்பாலான மக்கள் இலங்கைப் பிரச்சினையைப் புரிந்து வைத்திருப்பது வேதனையான விஷயந்தான்.

மேல்மட்ட அரசியல் கட்சிகளைப் பொருத்தமட்டில் தத்தம் அரசியல் லாபங்களே அவர்களுக்குப் பிரதானம். இலங்கைப் பிரச்சினை இரண்டாம் பட்சந்தான். கருணாநிதியும் சரி, இராமதாசும் சரி தத்தம் அரசியலதிகாரங்களை ஈழப்பிரச்சனைக்காத் தியாகம் செய்துவிட மாட்டார்கள். தமது கட்சி பாராளுமன்ற உறுப்பினர்களிடம் எல்லாம் ராஜினாமாக் கடிதம் வாங்கினாரே கருணாநிதி என்ன செய்தார்? ராமதாஸ் என்னென்னவோ கேட்கிறாரே ஏன் இந்தக் கடிதங்களைப் பயன்படுத்த

வில்லை என்று ஏன் கேட்கவில்லை? முதல் நாள் வரை காங்கிரசையும், சோனியாவையும் கடுமையாக எதிர்த்த திருமாவளவன் இப்போது அன்னை சோனியா என்கிறார், காங்கிரஸ் வெற்றி பெற முழு ஒத்துழைப்பு தருவோம் என்கிறார். படு தீவிரமாக இன்று ஈழப்பிரச்சினைக்கு ஆதரவளிக்கும் தா. பாண்டியன் நான்காண்டுகட்கு முன்பு இலங்கை வந்தபோது என்ன பேசினார் எனப் பழைய செய்தித் தாள்களை எடுத்துப் படித்துப் பாருங்கள். தேர்தல் சார்ந்த அரசியல் கட்சிகள் யாவும் தமது அரசியல் லாபத்தை முன்னிறுத்தியே ஈழப் பிரச்சினையைக் கையாளுகின்றன. தேர்தல் சாராத சில சிறிய குழுக்களும் கூட இன்று உருவாகியுள்ள அரசியல் எழுச்சியைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்த முடியுமா எனச் செய்யும் முயற்சிகளில் பல உண்மையில் புலி ஆதரவாளர்களுக்குதான் பயன்படப் போகின்றன.

புலி ஆதரவாளர்களைப் பற்றி இங்கொன்றைச் சொல்லியாக வேண்டும். அரசியல் ரீதியிலும் போர்க்களத்திலும் புலிகளுக்கு இன்று ஏற்பட்டுள்ள வீழ்ச்சிக்குப் பிரதான காரணம் புலிகள் இயக்கத்தின் பாசிசத் தன்மைதான் என்பதில் யாருக்கும் அய்யமிருக்க முடியாது. மாறிவரும் உலக நிலைமைகள், தமிழ் மக்களின் மனநிலைகளில் ஏற்பட்டுள்ள மாற்றம் குறித்த மாற்றுக் கருத்துக்களை முன்வைப்பதற்கோ, விவாதிப்பதற்கோ இடமேயில்லாத ஒரு அமைப்பாக அது இருந்தது. இன்று அது தமிழ் மக்களின் பல பகுதியினரிடமிருந்தும் அந்நியப்படுத்து வதற்கும், உலக ஆதரவை இழந்து நிற்பதற்கும் காரணமாகி யிருக்கிறது.

இன்னொரு பக்கம் புலிகளின் இந்த வீழ்ச்சியில் தமிழ் நாட்டைச் சேர்ந்த புலிகளின் முகவர்களுக்கும் பெரிய பங்கு உள்ளது. தமிழ்நாட்டிலுள்ள புலி முகவர்கள் இரு வகைப் பணிகளைச் செய்து வந்தனர். புலிகளுக்கு இராணுவ ரீதியாக Logistic Support செய்து கொண்டிருந்தவர்கள் ஒரு புறம். ஆயுதங்கள், பெட்ரோல், வெடிமருந்து முதலான உதவிகளைச் செய்தல் இவர்களின் பணி. புலிகளுக்கு அரசியல் ஆதரவைத் தேடுவது இன்னொரு பணி. இந்த இரு சாராருமே புலிகளை எந்நாளும் விமர்சித்ததில்லை. அவர்களின் அத்தனை நடவடிக்கைகளையும், சக இயக்கத்தவர்கள், ராஜீவ் காந்தி ஆகியோரைக் கொன்றது உட்பட அனைத்து நடவடிக்கைகளையும் முழுமையாக ஆதரித்தனர். முஸ்லிம்கள் வெளியேற்றப்பட்டது குறித்து அவர்கள் முணுமுணுத்தது கூட இல்லை.

இந்த முகவர்கள் இங்கே உருவாக்கிய புலி ஆதரவும் கூட மிகைப்படுத்தப்பட்ட செய்திகளின் அடிப்படையிலேயே இருந்தன. வன்னியில் போரை நடத்திக் கொண்டிருப்பது இந்திய இராணுவம் தான். 500 இந்திய இராணுவ வீரர்களின் உடல்கள் மும்பையில் வந்திறங்கியுள்ளன; நந்தம்பாக்கத்தில் 122 இந்திய இராணுவ உடல்கள் இப்போது உள்ளன என்றெல்லாம் வாய் கூசாது மேடையில் பேசினார்கள். இன்னும் பேசிவருகிறார்கள்.

புலிகளை ஆதரித்துக்கொண்டே, அவர்கள் தவறு செய்யும்போது அதைச் சுட்டிக்காட்டும் அளவிற்கு அரசியல் நேர்மையுடையவர்களாக அவர்கள் இருந்ததில்லை. புலிகளின் வீழ்ச்சிக்கு இந்த வகையில் இவர்களும் ஒரு முக்கிய காரணமாக உள்ளனர்.

**வடமாகாண தமிழர்கள் பாதிக்கப்படும்போது கிளர்ந்தெழும் தமிழ்நாடு வடமாகாண முஸ்லிம்கள் விடயத்தில் மௌனம் காப்பது குறித்துஎன்ன நினைக்கிறீர்கள்? தமிழ் மக்கள் எதிர்கொள்ளும் அவலம் விரட்டியடிக்கப்பட்ட வட மாகாண முஸ்லிம்கள் விடயத்திலும் அக்கறை கொள்ள வைக்கும் என நினைக்கிறீர்களா?**

முந்திய பதிலேயே குறிப்பிட்டேன். இங்கே ஈழப் பிரச்சினையை முன்னெடுப்பவர்கள் பெரும்பாலோர் புலி ஆதரவாளர்களே. அவர்கள் முஸ்லிம்களின் இடப்பெயர்வுக்குக் காரணமான புலிகளைக் கண்டிக்கமாட்டார்கள். புலி ஆதரவையும் ஈழப் பிரச்சினையையும் பிரித்துப் பார்த்து இலங்கைத் தமிழர்கள் பக்கம் நிற்கிறவர்கள் இந்தப் பிரச்சினையைப் பேசி இருக்க வேண்டும். தலித்கள், இடதுசாரிகள், மாவோயிஸ்டுகள், அறிவுஜீவிகள் பேசியிருக்க வேண்டும். அவர்களும் பேசவில்லை. ஏன்? ஒருவேளை ஒவ்வொருவருக்குள்ளதும் இருக்கும் இந்து மனம் இதற்குக் காரணமா? புலிகளின் ஆதரவில் ஈழப்பகுதிகளுக்குச் சென்று வந்த எங்கள் ஊர் எழுத்தாளர்கள் பா. ஜெயப்பிரகாசம், இன்குலாப் போன்றவர்கள் எல்லாம் இந்தப் பிரச்சினையின் உண்மைக்குப் புறம்பாகப் பேசியவற்றை வரலாறு மன்னிக்காது. இன்னும் அவர்கள் இப்படித்தான் பேசிவரு கிறார்கள். "படிச்சவன் சூதும் வாதும் பண்ணினால் போவான், போவான் ஐயோன்னு போவான்'' என பாரதியார் சொன்னதுதான் ஞாபகத்திற்கு வருகிறது. இன்னொன்றையும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன். இலங்கையிலிருந்து இங்கு வரும் நுஃமான் போன்ற முஸ்லிம் அறிஞர்களும் இது குறித்துப் பேசுவதில்லை. இங்கேயுள்ள முஸ்லிம் எதிர்ப்பாளர்களுடன் தான் இவர்கள் தங்களைத் தயக்கமின்றி அடையாளப்படுத்திக் கொண்டார்கள்.

உங்களைப் போன்ற ஒரு சிலர் இங்கு வந்திருந்து தமிழகம் முழுவதும் சுற்றுப் பயணம் செய்து இந்தப் பிரச்சினை குறித்த உணர்வை ஏற்படுத்தாமற் போனதும் ஒரு தவறே.

புலிகளின் இத்தகைய தவறுகளை நீங்கள் ஏன் கண்டிக்கவில்லை என்று கேட்டால் இங்கேயுள்ள இடதுசாரிகளும், அறிவுஜீவிகளும் உடனே "புலிகள் தோற்றுக் கொண்டிருக்கும் இந்தச் சமயத்திலா இதை எல்லாம் பேசுவது'' என்பார்கள். இது எங்களைப் போன்றவர்கள் முன் வைக்கப்படும் ஒரு வழக்கமான குற்றச்சாட்டு. பிரச்சினை என்னவெனில், புலிகள் வெற்றி முகத்தில் இருந்தபோதோ, முஸ்லிம்கள் விரட்டி அடிக்கப்பட்டபோதோ எப்போதுமே இதுகுறித்து வாய் திறக்காதவர்கள் இவர்கள். தவிரவும் பாதிக்கப்படுவர்களைத் 'தமிழர்களாக' மட்டுமின்றி 'இந்துக்களாயும்' அடையாளப் படுத்தி அந்த அடிப்படையில் ஆதரவு தேட முற்பட்டவர்களாகவும் இவர்களில் பலர் உள்ளதும் இதற்கொரு காரணமாக உள்ளது. சிவாஜிலிங்கம் போன்றோர் சங்கராச்சாரி, ஆர்.எஸ்.எஸ்., பா.ஜ.க. தலைவர்கள் எல்லோரையும் சந்தித்துப் பேசிவருவதையும் நாம் கவனிக்க வேண்டும். எப்படியாவது காங்கிரஸ் - தி.மு.க கூட்டணியைத் தோற்கடிப்பது என இவர்கள் தீவிரமாக இயங்கிக் கொண்டுள்ளனர். காங்கிரஸ் - தி.மு.க கூட்டணி இதை முறியடிக்க என்ன 'ஸ்டன்ட்' அடிக்கப் போகிறது எனத் தெரியவில்லை.

**இலங்கையில் யுத்தம் முடிவடைந்த பின்னர் தமிழ் மக்களுக்கான தீர்வு எப்படி முன் வைக்கப்பட வேண்டு. அதில் இந்தியாவின் பங்கு எப்படி அமைய வேண்டும் என்பது பற்றி...?**

கால் நூற்றாண்டு கால ஆயுதப் போராட்டம் நடந்த ஒரு நாட்டிற்கான உடனடித் தீர்வு சொல்வது அத்தனை எளிதன்று. கிழக்கு திமோர் முதலான இடங்களில் ஏற்பட்ட ரத்தக் களறிகள் நினைவுக்கு வருவது தவிர்க்க இயலாது. போரால் களைத்துப் போன மக்களின் மனநிலை ரொம்பவும் சிக்கலானது. சமீபத்தில் காஷ்மீர் சென்று வந்தேன். 'ஆஸாதி' அதாவது இந்தியாவிலிருந்து சுதந்திரம் என்கிற கோரிக்கையை பள்ளத்தாக்கிலுள்ள முஸ்லிம்கள் அனைவரும் ஒருமித்த குரலில் வைத்தனர். எனினும் அடுத்த சில வாரங்களில் நடைபெற்ற தேர்தலில், காஷ்மீர் கூட்டுப் போராட்டக் குழுவின் வேண்டுகோளையும் மீறி வேறெப் போதையும் விட அதிக அளவில் தேர்தலில் அவர்கள் பங்கேற்றனர். போரில் களைத்துப் போன மக்களுக்கு முதலில் அமைதி வேண்டும், சிவில் நிர்வாகம் ஒன்று வேண்டும். இராணுவம் தமிழ்ப் பகுதிகளிலிருந்து நீக்கப்பட வேண்டும். தடுப்புக் காவல்

முகாம்கள் ஒழிக்கப்பட வேண்டும். இடம் பெயர்க்கப்பட்ட அனைவரும், முஸ்லிம்கள் உட்பட திரும்பி வர அனுமதிக்க வேண்டும். போருக்குப் பின்னும் புலிகளுக்குப் பின்னும் கூடத் தமிழர்களின் பிரச்சினையின் நியாயங்கள் அப்படியே உள்ளன. அரசியல் சட்டத்தில் சிங்கள மொழிக்கு, பௌத்தத்திற்கு உள்ள முன்னுரிமைகள் நீக்கப்பட வேண்டும். அரசியலதிகாரப் பகிர்வைப் பொறுத்தமட்டில் திம்புப் பேச்சு வார்த்தையாகட்டும், ராஜீவ் - ஜெயவர்த்தனா ஒப்பந்தமாகட்டும், தனி ஈழக் கோரிக்கை யாகட்டும் எல்லாம் 1980களிலும், அதற்கு முன்னும் உருவானவை. இன்று உலகம் பெரிய அளவில் மாறியுள்ளது எந்தத் தீர்வும் தொடர்புடைய எல்லாப் பிரிவு தமிழ் மக்களும் ஏற்றுக் கொள்ளத் தக்கதாக இருக்க வேண்டும். இது தொடர்பான எல்லாப் பேச்சுவார்த்தைகளிலும் வன்னி மற்றும் வடக்கு மாகாணத் தமிழ்ப் பிரதிநிதிகள் தவிர, கிழக்கு மாகாணத்தவர், தலித்கள், முஸ்லிம்கள் என எல்லோரும் உள்ளடக்கப்பட வேண்டும். அவசர கோலத்தில் கிழக்கு மாகாணத்தில் செய்யப் பட்டது போல ஒரு தேர்தலை நடத்தாமல் சர்வதேசக் கண்காணிப்பின் கீழ் விரிவான பேச்சுவார்த்தைகள், தமிழர்கள் மத்தியில் ஒரு பொது வாக்கெடுப்பு என்கிற ரீதியில் இவற்றைச் செய்யவேண்டும்.

இந்தியாவைப் பொறுத்த மட்டில் அதன் எல்லா செயற்பாடு களும் அதன் விரிவாக்க நோக்கத்திற்குட்பட்டதே. இந்தப் பேச்சுவார்த்தைகள் அனைத்தும் இந்தியா அல்லது வேறு ஏதும் அமெரிக்க அடிவருடி நாடுகளின் கண்காணிப்பின் கீழல்லாமல் ஆதிக்க நோக்கம் இல்லாத ஆப்ரிக்க, லத்தீன் அமெரிக்க நாடுகளில் கண்காணிப்பில் நடைபெற்றால் அது நன்றாக இருக்கும்.

போரால் அழிந்து கிடக்கும் தமிழ்ப் பகுதிகளில் பெரிய அளவில் நிர்மாணப் பணிகள் செய்தாக வேண்டும். தமிழ் மக்கள் அதில் முழுமையாகப் பங்குபெறத் தயாராக உள்ளனர். அவர்களின் பங்களிப்பை ஆக்கப்பூர்வமான முறையில் ஈழத் தமிழ்ப் பகுதிகளில் செலவிடும் வகையிலும், அறிவியல் தொழில்நுட்ப அடிப்படையில் நிர்மாணப் பணிகளில் உதவிபுரிவது என்கிற வகையிலும் இந்தியத் தலையீடு வரையறுக்கப்படுவது நல்லது.

**இந்தியாவில் காணப்படும் இலங்கை முஸ்லிம்களுக்கு எதிரான நிலைப்பாடு இம்முறை தேர்தலில் சில அரசியல் தலைவர்களால் இன்னும் உரமூட்டப்படுவதாக குற்றம் சாட்டப்படுகிறதே?**

நான் சற்று முன்குறிப்பிட்டதுபோல இலங்கைத் தமிழர்களின் பிரச்சினையை ஒரு இந்துப்' பிரச்சினையாகவும் முன் வைக்கச்

சிலர் முயல்வது உண்மைதான். இந்த வகையில் பா.ஜ.க.வையும் ஈழத் தமிழர் பாதுகாப்பு அமைப்புகளில் ஒன்றிணைப்பது, பாதிக்கப்படுவது இந்துக்கள் என்பதால்தான் சர்வதேசச் சமூகம் மௌனம் காப்பதாகச் சந்தடி சாக்கில் சொல்வது, இலங்கை முஸ்லிம்களுக்கு பாகிஸ்தான் தீவிரவாதிகளுடன் தொடர்பிருப்பதாகத் திடீர் அவதூறுகளைக் கிளப்புவது என்பதெல்லாம் புலி ஆதாரவாளர்களால் இங்கு மேற்கொள்ளப்பட்டது உண்மைதான். எனது முந்தைய கட்டுரைகளிலும், பேட்டிகளிலும் இவற்றை அடையாளம் காட்டியுள்ளேன். இதன் மூலம் இவர்கள் உள்நாட்டுப் பாசிச அரசியலுக்குத் துணை போவதைப் பற்றிக் கிஞ்சித்தும் கவலைப்படவில்லை. இருந்த போதிலும் இந்தப் பிரச்சாரங்கள் ரொம்பவும் அடக்கித்தான் வாசிக்கப்படுகின்றன. பெரிய அளவில் பேசப்படவில்லை. ஒருவேளை மத்தியில் மீண்டும் காங்கிரஸ் அரசே வர வாய்ப்பிருக்கிறது என்பதால்கூட அவர்கள் இவ்வாறு அடக்கி வாசிக்க நேர்திருக்கலாம்.

- இலங்கையிலிருந்து வெளிவரும் ‘எங்கள் தேசம்’
என்கிற முஸ்லிம் இதழுக்கு அளித்த பேட்டி, மே1, 2009
இணையம் மூலமாக எடுக்கப்பட்டது.

# இணைப்பு 1

## "புலிகளின் முகவர் என உங்களை ஏன் சொல்கிறோம்?"

### - சிராஜுதீன்

**பா. செயப்பிரகாசம் கட்டுரைக்கான எதிர்வினை**

புத்தகம் பேசுது இதழுக்காக அ. மார்க்ஸ் அவர்களை நான் எடுத்த நேர்காணல் குறித்து 'யாருக்காக பேசுகிறார் அ. மார்க்ஸ்' என்ற கட்டுரையை 'கீற்று' இணையதளத்தில் எழுதியது மட்டுமல்லாமல் நகலெடுத்து தான் செல்லுமிடமெல்லாம் விநியோகித்து வருகிறார் பா. செயப்பிரகாசம். நேர்காணல் செய்தவன் என்ற முறையில் சில விஷயங்களை இங்கே பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன்.

1. அ. மார்க்ஸிடம் ஈழப் பிரச்சனை குறித்து மட்டுமே நேர்காணல் செய்ய வேண்டும் என்கிற நோக்கில் எங்களின் ஆசிரியர் குழுவின் முடிவின்படி தொகுத்தெடுத்துக் கொண்ட கேள்விகளுக்கான பதிலை அவரிடம் பெற்று வெளிவந்த நேர்காணல் அது. ஆய்வுபூர்வமான அடிப்படையில், சிந்திக்கத் தக்க, ஆழமான கருத்துகளைக் கொண்டு இருந்தது அந்த நேர்காணல். இனவெறி, மொழி வெறி அற்றவர்கள் மத்தியிலும், தமிழகம் மற்றும் அயல்நாட்டிலும் பெரும் வரவேற்பை பெற்றுள்ளது.

ஒரு மூத்த எழுத்தாளர் பா.செ. தரங்கெட்ட மொழியில் முற்றிலும் அவதூறுமிக்க ஒரு எதிர்வினையை அந்நேர்காணலுக்கு எழுதி இருப்பதும், அதை பெருமைக்குரிய செயலாக செல்லுமிடமெல்லாம் விநியோகித்துக் கொண்டு திரிவதும் மிகவும் கேலிக்குரியது. தன்னைப் பற்றிய கவன ஈர்ப்புக்காக எதையும் செய்பவர், எதையும் குளறுபடியாக விதைப்பவரான

போகிறார்கள் என எழுதுவதும் (தாரகா) முஸ்லிம்களுக்கு பாகிஸ்தான் பயிற்சி அளிக்கிறது என்பதுவும் உங்களிடமுள்ள இந்து மனத்தைத்தான் வெளிப்படுத்துகிறது.

7. தீராநதியில் ஷோபா சக்தியின் பேட்டியின் வழியாக அ.மார்க்ஸ் உடன்பட்ட கருத்துக்கும், பின்னர் அவர் புத்தகம் பேசுது நேர்காணலில் வெளியிட்ட கருத்துக்கும் ஏதோ பெரிய வேறுபாடு இருப்பதாக மிகப்பெரிய கண்டுபிடிப்பை கண்டதாக சொல்கிறார் பா.செயப்பிரகாசம்.

கருணா மற்றும் பிள்ளையானை ஷோபா சக்தியோ அ.மார்க்ஸோ அந்த நேர்காணலிலும் இந்த நேர்காணலிலும் ஆதரித்தது கிடையாது. அங்கு ஒரு தேர்தல் நடந்தது. மக்கள் விரும்பி பங்கேற்றார்கள். தேர்தலுக்குப்பின் ஒப்பீட்டளவில் மக்கள் அமைதியாக வாழ்கிறார்கள். இப்பொழுது வேண்டுவது அமைதி மட்டுமே. பேட்டியில் சொல்லப்பட்ட கருத்துகளை தனது காஷ்மீர் பயண அனுபவத்தையும் இணைத்து அ.மா. சொல்லியுள்ளார். 30 ஆண்டு காலப் போரில் அனைத்தையும் இழந்து களைத்துப் போன மக்கள் அமைதி வேண்டுவதை மையப்படுத்தியே ஷோபாவின் பேட்டியும் மார்க்ஸின் பேட்டியும் அமைந்துள்ளது.

கொலைகள், ஆள் கடத்தல் குறிப்பாக குழந்தைகளை கட்டாயமாகப் போர்க்களத்திற்கு இழுத்துச் செல்வதெல்லாம் ஒப்பீட்டளவில் குறைந்திருக்கிறது என 'தீராநதி' நேர்காணலில் ஷோபா கூறி இருந்தார். இன்னும் முழுமையாக அமைதி திரும்பவில்லை என மார்க்ஸ் கூறுகிறார். இதிலென்ன முரண்பாட்டை அவர் கண்டார்.

8. புலிகளின் முகவர் என பா.செயப்பிரகாசத்தையும், அவரை யொத்தவர்களையும் மார்க்ஸ் சொல்வதால் செயப்பிரகாசத்திற்கு கோபம் பொத்துக்கொண்டு வருகிறதே!

ராஜபக்சேவையும், கருணாவையும் மார்க்ஸ் ஆதரிப்ப தனால் அவர்களின் ஏஜெண்ட் என மார்க்ஸை சொல்லலாமா என ரொம்பவும் புத்திசாலித்தனமாக கேட்கிறார் பா.செ. ராஜபக்சேவையும், கருணாவையும் மார்க்ஸ் எந்த இடத்தில் ஆதரித்தார்? நேர்மை இருந்தால் ஒரு சிறிய ஆதாரத்தையாவது அவர் தரட்டுமே.

'எதுவரை' என்றொரு சஞ்சிகை பிரிட்டனிலிருந்து வெளிவரு கிறது. அவ்விதழில் ராஜபக்சேவின் அரசு கொடூரமான இனவாத பாசிச அரசாக உள்ளது என்பதை இதுவரை யாரும் சொல்லாத

தரவுகளோடு எழுதி உள்ளார். அந்தச் சஞ்சிகையையும் பா.செயப்பிரகாசம் வாசிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

மார்க்ஸ் மீது புலிகளுக்கு உள்ள காழ்ப்பெல்லாம் அவர் ராஜபக்சேவை, கருணாவை ஆதரிக்கிறார் என்று அல்ல. அவர் ஆதரிக்கவில்லை கடுமையாக எதிர்க்கிறார் என்று புலி முகவர்களுக்கு தெரியும். பிரச்சனை என்னவெனில், ராஜபக்சே, கருணா ஆகியவர்களின் அக்கிரமங்களை மட்டும் இல்லாமல் புலிகளின் அக்கிரமங்களையும், பாசிச நடவடிக்கைகளையும் கண்டிக்கிறார் என்பதுதான்.

ஒருவரை முகவர் என வரையறை செய்வதற்கான காரணிகளை கீழ்க்கண்டவாறு வகைப்படுத்த இயலுமென நினைக்கிறேன்.

- யாருக்கு முகவர்களாக இருக்கிறார்களோ அவர்களின் செயல்பாடுகளுக்கும், அநீதிகளுக்கும் ஒத்தூதுவது,

- அவர்களுக்காக தாங்கள் வாழும் இடத்தில் 'லாபி' செய்வது,

- அவர்களுக்குப் பயன்படுவது, அவர்களால் 'பயன்' பெறுவது,

- அவர்களை யாராவது விமர்சித்தால் வரிந்து கட்டிக்கொண்டு 'வவ்வே' காட்டுவது. அவதூறுகளை அள்ளி வீசுவது.

எல்லாம் போகட்டும் முகவர் என மார்க்ஸ் சொன்னதற்காக பா.செ. இவ்வளவு பொங்குகிறாரே கருணாநிதி தனது பத்திரிகையில் "புலிகளின் பேரால் காசு சுருட்டும் காகிதப் புலிகள்" என எழுதினாரே அப்போது எங்கே போனார்கள் முகவர்கள்? கருணாநிதிக்கு எதிராக பா.செ. தான் செல்லுமிட மெல்லாம் துண்டறிக்கை ஏன் விநியோகிக்கவில்லை? அவர் கையில் உளவுத் துறை இருக்கிறது என்ற அச்சமா? உண்மைகள் வெளிவந்துவிடும் என்கிற உதறலா? ஒரு பெரியவர், மூத்த அரசியல்வாதி இப்படிப் பேசலாமா என்கிற ரீதியில் தானே நசுக்கி, நசுக்கி புலி முகவர்கள் தம் கோபத்தை வெளிப்படுத்தினார்கள். வழக்கமாக தமிழ்ச் சூழலில் இதுபோன்ற விசயங்களை எதிர்கொள்வது போல. "இதை மட்டும் கருணாநிதி நிரூபித்தால் நான் அரசியலை விட்டே விலகத் தயார்" என்றெல்லாம் ஏனையா நீங்களும் உங்கள் தலைவர்களும் சவால் விடவில்லை?

புலிகளுக்காக எதையும் செய்யக்கூடியவர்தான் பா.செ. என்பதை நவீன தமிழ் இலக்கிய உலகம் நன்கறியும். ஈழம் தொடர்பாக ஆர்ப்பாட்டம் நடத்த டெல்லிக்கு சென்ற 'தோழமையின் குரல்' நவீன தமிழ் இலக்கிய குழாமிற்கு இரயிலில் பயணச்சீட்டு வாங்குவதற்கு ரூபாய் முப்பத்தி நான்கு ஆயிரத்தை அனாயசமாக உருவித் தந்த ஓய்வு பெற்ற அரசு ஊழியர்

'பெருவெளி' இதழின் வழியாக முஸ்லிம்கள் 'சோனகர் தேசம்' என்ற கருத்தாக்கத்தை முன்வைக்கிறார்கள். அவர்கள் இந்த கருத்து நிலைக்கு தள்ளப்பட்டதற்கு புலிப் பாசிசம்தானே காரணம். மார்ச் 10, 2009 அன்று நடைபெற்ற மீலாது விழாவில் புலிகளின் மனித வெடிகுண்டு தாக்குதலில் 20 முஸ்லிம்கள் கொல்லப்பட்டுள்ளனர். இந்நிகழ்வுக்கு பா.செயப்பிரகாசம் என்ன விளக்கமளிக்கப் போகிறார்? புலிகள் தலித்துகள், முஸ்லிம்கள் விரோதி மட்டுமல்ல; அவர்கள் பாசிஸ்டுகள். அவர்களின் நடவடிக்கைகளை, படுகொலைகளை மீலாது ஊர்வலத் தாக்குதல் வரை தொகுத்துப் பாருங்கள். நீங்கள் உண்மையிலேயே ஒரு மார்க்சியவாதியாக இருந்தால் இதைப் புரிந்துகொள்ள முடியும்.

- *'கீற்று'*, 2009

# இணைப்பு 2

**இலங்கைத் தமிழர்களைப் படுகொலை செய்வதை நிறுத்து!**

## கண்டனப் பொதுக் கூட்டம்

நாள்: 30.03.2009
(திங்கட்கிழமை)
நேரம்: மாலை 5.30 மணி

இடம்: திறந்தவெளி அரங்கு,
லயோலா கல்லூரி,
சென்னை.

இலங்கை அரசே!

1. போரை நிறுத்து! இலங்கையில் எல்லாவிதமான இராணுவ நடவடிக்கைகளையும் நிறுத்து! தமிழ்ப் பகுதிகளிலிருந்து படைகளை திரும்பப் பெறு! சட்டவிரோதமாக குடிமக்களை பிடித்துச் செல்லாதே!

இலங்கை அரசே!

2. தடுப்புக் காவல் முகாம்களை ஒழி! தமிழர்களால் தேர்ந் தெடுக்கப்பட்ட நிர்வாகத்தின் கீழ் உணவு, இருப்பிடம், மருத்துவம் உள்ளிட்ட அடிப்படை வசதிகளை நிறைவேற்று!

உலக நாடுகளே!

3. போர் வெறிப்பிடித்த ராஜபக்சே ஆட்சிக்கு பணம் கொடுக்காதே! ஆயுதம் வழங்காதே! இலங்கைக்கு இராணுவ மற்றும் வணிக உதவிளை செய்யும் மேலை ஏகாதிபத்தியம் மற்றும் இந்தியா, சீனா, பாகிஸ்தான், இஸ்ரேல், ஈரான், ஜப்பான் மற்றும் பிற நாடுகளே இவ்வுதவிகளை உடனே நிறுத்துவீர்.

   தொழிலாளர்களே, ஆயுத ஏற்றுமதி இறக்குமதி முயற்சி களுக்கு அரசுடன் ஒத்துழைக்காதீர்கள்.

இலங்கை அரசே!

4. இலங்கை முழுவதும் ஜனநாயக உரிமைகளை வழங்கு. பேச்சுரிமை, பத்திரிகைகளுக்கு கருத்துரிமை, சுதந்திர

அதே நேரத்தில் சென்னையிலும் மேலே குறிப்பிட்டவாறு ஆர்ப்பாட்டம் நடைபெற உள்ளது.

இலங்கையில் போரை நிறுத்துவதற்கும், தமிழர்களைப் படுகொலை செய்வதை முடிவுக்கு கொண்டு வருவதற்கும், இந்தியா உள்ளிட்ட 'உலக நாடுகள்' இலங்கைக்கு உதவி செய்வதை எதிர்த்தும் நடைபெறும் இந்த ஆர்ப்பாட்டத்தில் பெரும் திரளாக பங்கு பெறுமாறு வேண்டுகிறோம்.

ஈழப் பிரச்சனையில் அக்கறை உள்ள இயக்கப் பிரதிநிதிகள் பலரும் பங்குபெறும் இந்த கண்டன ஆர்ப்பாட்டத்தில் நீங்களும் பங்கு பெறுவீர்!

## கண்டன உரை

**பேரா. அ. மார்க்ஸ்**, ஒருங்கிணைப்பாளர், அணிதிரட்டும் குழு

**கோ. சுகுமாரன்**, மக்கள் உரிமை கூட்டமைப்பு, புதுச்சேரி

பொறியாளர் **அயன்புரம் இராஜேந்திரன்**,

அரிமா, மக்கள் உரிமை கூட்டமைப்பு, தேவகோட்டை

**பாவேந்தன்**, செயலர், தமிழக ஒடுக்கப்பட்டோர் விடுதலை இயக்கம்

முனைவர் **பா. சிவக்குமார்**, முன்னாள் அரசு கல்லூரி முதல்வர்

**துரைசிங்கவேல்**, புதிய போராளி இதழ்

**அருள் எழிலன்**, பத்திரிகையாளர், சென்னை

**மோகன்**, பொதுச்செயலர், சென்னை பத்திரிகையாளர் சங்கம்(MUJ)

**உதயம் மனோகரன்**, மக்கள் வழக்குரைஞர் சங்கம், சென்னை

**மோகன் குமார்**, மனித உரிமைகளுக்கான மக்கள் கழகம், கோவை

**இசையரசன்**, 'தண்டோரா' அமைப்பு

**கென்னடி**, மக்கள் போராட்ட மையம், கொள்ளிடம்

**கீதா**, அமைப்பு சாரா தொழிலாளர்கள் தேசிய இயக்கம்

**காதர் ஷெரிப்**, மனித உரிமைகளுக்கான மக்கள் கழகம், காஞ்சிபுரம்

**ஜெயக்குமார்**, வழக்குரைஞர், சென்னை

**வெங்கட்**, புதிய சோசலிச மாற்று

**ஜென்னி**, அணிதிரட்டும் குழு

இலங்கை அரசே! போரை நிறுத்து! தமிழர்களை கொல்லாதே!

இந்தியா உள்ளிட்ட உலக நாடுகளே! பாசிச இலங்கை அரசுக்கு உதவாதீர்!

இணைப்பு 4

## இலங்கையில் அடுத்தது எனன்? ஒரு அரசியல தீர்வை நோக்கி

தமிழர்கள் மீதான இராணுவத் தாக்குதலை இலங்கை அரசு தற்காலிகமாக நிறுத்திக் கொண்டுள்ளது. எனினும் இராணுவத் தாக்குதல் அல்லாத வடிவத்தில் தமிழ் மக்களின் மீதான போர் இன்னமும் தொடரவே செய்கிறது. ஹிட்லரின் வதை முகாம்களை ஒத்த அகதி முகாம்களில் இன்று மூன்று இலட்சம் தமிழர்கள். அவற்றை முகாம்கள் என சொல்வதைக் காட்டிலும் 'நிழற்சிறைகள்' (shadow prisoms) என சொல்வதே பொருத்தம்.

வன்னிப் பகுதியில் இந்நிலை என்றால் யாழ்ப்பாணம், கிழக்கு மாகாணம் ஆகிய தமிழ்ப் பகுதிகளிலும் கூட சட்ட ஒழுங்கற்ற நிலைதான் இன்றைய யதார்த்தம். ஆட்கடத்தல்கள், படுகொலைகள், பணப்பறிப்புகள் இவைதான் இன்று தமிழ்ப் பகுதிகளில் அன்றாட நிகழ்வுகளாக உள்ளன.

முப்பது ஆண்டுகாலப் போரில் தமிழ்ப் பகுதிகளில் அகக் கட்டுமானங்கள் முற்றாய்ச் சிதைந்துள்ளன. கல்விக் கூடங்கள், மருத்துவமனைகள், போக்குவரத்து, எதுவும் அங்கே இயல்பு நிலையில் இல்லை.

தமிழ் மக்களின் அரசியல் தீர்வு பற்றி இராஜபக்ஷே வாய் கிழிந்தாலும் அந்தத் திசையில் எந்த முன்னேற்றமும் இல்லை. இதற்கென அமைக்கப்பட்ட திஸ்ஸவிதாரண குழு அறிக்கை தூசி படிந்து மூலையில் கிடக்கின்றது.

இந்நிலையில் ராஜபக்சே அரசு மேற்கூறிய எந்தப் பிரச்சினை யையும் தீர்க்காமலேயே அவசர அவசரமாக உள்ளாட்சித் தேர்தல்களை நடத்த முனைகிறது. தமிழ் அமைப்புகளின் ஒரு சில

**கருத்தரங்கம்**

*நாள்: 4.7.2009 (சனிக்கிழமை) சரியாக மாலை 4 மணி.*

*இடம்: ஜெர்மன் அரங்கம், பிரகாசம் சாலை.*

*(சன் திரையரங்க பேருந்து நிறுத்தம் அருகில்) சென்னை.*

*தலைமை: பேராசிரியர் அ. மார்க்ஸ்*

*வரவேற்புரை : தோழர் வெங்கட் (புதிய சோசிலிச மாற்று. சென்னை)*

*திரு. சத்யா சிவராமன் (பத்திரிகையாளர், புதுடெல்லி)*

*பொருள்: இலங்கையின் அரசியலில் 60 ஆண்டுகால இந்தியத் தலையீடு*

*பேராசிரியர் மணிவண்ணன் (அரசியல்துறை. சென்னைப் பல்கலைக்கழகம்)*

*பொருள்: ஈழத்தமிழர்களுக்கான இந்திய மற்றும் ஈழ அகதி முகாம்களின் நிலை*

*திரு. சிராஜ் மசூர் (ஆசிரியர், மீள்கோணம்; முன்னாள் விரிவுரையாளர், தென்கிழக்கு பல்கலைக் கழகம், இலங்கை)*

*பொருள்: இலங்கை இனப்பிரச்சினையும் முஸ்லிம்களும்*

*முனைவர். கே. பாலகோபால் (மனித உரிமை மன்றம், ஹைதராபாத்)*

*பொருள்: அரசியல் தீர்வை நோக்கி*

*அனைவரும் வருக!*

இலங்கையில் போரை நிறுத்தி ஜனநாகத்தை நிலைநாட்ட அணிதிரட்டும் குழு

Campaign Committee to Stop the war and Restore Democracy in Sri Lanka